# திருத்தலப் பெருமை

## தஞ்சைக் கோயில்கள்

## பாகம் – 1



குடவாசல் ஆலயமும் திருக்குளமும்



## பரணீதரன்

# திருத்தலப் பெருமை

## பாகம்-1

பரணீதரன்



கலைஞன் பதிப்பகம்
10, கண்ணதாசன் சாலை
தியாகராயநகர், சென்னை-600 017

Price. Rs. 30

Thiruthalap Perumai (Part I)
by
Bharanidharan ©
First Edition / December 1991

Published by

Kalaignaan Pathipagam
10, Kannadhasan Salai
T. Nagar, Madras-600 017

Printed at
Thamizhosai Achagam
84 Habibullah Road
Madras-600 017

# இந்நூலைப் பற்றி...

பத்து ஆண்டுகளுக்கு முன் ஆனந்த விகடன் தமிழ்ப் புத்தாண்டு இதழில் 'திருத்தலப் பெருமை' என்ற தலைப் பில் தொடங்கப் பெற்று, ஏறத்தாழ நாலரை ஆண்டுகள் வெளிவந்த கட்டுரைத் தொடர், தற்போது நான்கு பாகங்களாகப் பிரிக்கப்பட்டு கலைஞன் பதிப்பகத்தாரின் வெளியீடுகளாக வெளிவருகின்றன.

இது 'திருத்தலப் பெருமை'யின் முதல் பாகம். குட வாயில் ஸ்ரீ கோணேச்வர சுவாமி ஆலயத்திலிருந்து, இப் பயணம் தொடங்குகிறது. 1980-ம் ஆண்டு ஸ்ரீ காஞ்சிப் பெரியவர், தஞ்சைக் கோயில்களைப் பற்றி எழுதும்படி என்னைப் பணித்து, குடவாயிலிலிருந்து தொடங்கும்படி அருளாணையிட்டதை இத்தருணம் நன்றிப் பெருக்கோடு நினைவு கூர்கிறேன்.

குடவாயிலை சுற்றியுள்ள சிறு சிறு கிராமக் கோயில் களும். அடுத்து திருவீழிமிழலைத் தலமும் அதன் தொடர் பான பல கோயில்களும் அப்பகுதியிலுள்ள வேறு சில முக்கியத் தலங்களும் இந்நூலில் இடம் பெற்றிருக் கின்றன.

தலப்புராணம், உற்சவங்கள், பூஜைமுறைகள், இதரச் சிறப்புக்கள் தவிர பழுதடைந்துள்ள ஆலயங்களின் அன்றைய நிலைகளைக் கண்ணீருடன் குறிப்பிட்டிருக் கிறேன். அக்கோயில்கள் சிலவற்றுக்கு திருப்பணிகள் முடிந்து, குடமுழுக்கும் நடைபெற்றிருந்தாலும், அக் கோயில்களின் அன்றைய பரிதாப நிலையின் விவரங் களை நான் நீக்காமல் விட்டிருக்கிறேன். இவற்றைப் படிக்கும் பக்தர்கள், இன்னும் சீரடையாமல் இருக்கும் தங்கள் ஊர்க் கோயில்களைப் பற்றி அக்கறையோடும் ஆர்வத்தோடும் சிந்திக்கவும் ஆக்கமுடன் திருப்பணிகள் செய்ய ஊக்கம் கொள்ளவும் இந்நூல் உதவினால் நான் பெருமிதமடைவேன்.

பரணீதரன்

# இந்நூலில் இடம்பெறும் தலங்கள்


| திருத்தலம் | பக்கம் | திருத்தலம் | பக்கம் |
|---|---|---|---|
| குடவாயில் | — 5 | கடலங்குடி | — 145 |
| கொரடாச்சேரி | — 30 | கூந்தலூர் | — 149 |
| திருக்கொள்ளம்பூதூர் | — 31 | தேதியூர் | — 154 |
| திருவிடைவாயில் | — 38 | நல்லூர் | — 157 |
| பத்தூர் | — 43 | விஷ்ணுபுரம் | — 163 |
| அபிவிருத்தீச்வரம் | — 45 | திருப்பாம்புரம் | — 166 |
| ஆலங்குடி | — 55 | திருச்சிறுகுடி | — 173 |
| அழகாபுத்தூர் | — 63 | சுரைக்காயூர் | — 180 |
| திருநறையூர் | — 70 | கிள்ளியூர் | — 183 |
| நாச்சியார் கோயில் | — 75 | ஆலத்தூர் | — 187 |
| திருச்சேறை | — 79 | கொடியலூர் | — 189 |
| நாலூர் திருமயானம் | — 86 | கொல்லுமாங்குடி | — 191 |
| கரவீரநாதர் | — 90 | திருமெய்ஞானம் | — 193 |
| திருவீழிமிழலை | — 92 | போழக்குடி | — 194 |
| ஸ்ரீபத்ரவல்லீசர் | — 118 | திரும்பேணுபெருந்துறை | — 198 |
| செம்மங்குடி | — 121 | காஞ்சிவாய் | — 203 |
| வருகக்குடி | — 123 | பாலையூர் | — 208 |
| கடகம்பாடி | — 124 | செதலப்பதி | — 209 |
| அய்யம்பேட்டை | — 127 | கூத்தனூர் | — 220 |
| மானந்தகுடி | — 129 | இஞ்சிக்குடி | — 229 |
| களஞ்சியூர் | — 132 | பூந்தோட்டம் | — 235 |
| ஆண்டார்பந்தி | — 135 | பேரளம் | — 238 |
| மருந்தசேரி | — 137 | திருமீயச்சூர் | - 241 |
| மருத்துவக்குடி (கூந்தலூர்) | — 142 | திருமாகாளம் | - 247 |
| | | அம்பகளத்தூர் | — 252 |

# குடவாயில்

**1981**-ம் ஆண்டு மகா சிவராத்திரி புண்ணிய தினம் அன்று இரவு நானும் பூரம் பப்ளிகேஷன்ஸ் உரிமை யாளர் நண்பர் சேஷாத்ரியும் தஞ்சை மாவட்டம் குடவாசல் கோணேச்வரர் ஆலயத்தில் முதற்கால அபிஷேக ஆராதனைகளைத் தரிசித்து மகா புண்ணியம் பெற்றோம்.

அன்று குடவாசலுக்கு நான் செல்ல நேர்ந்ததன் பின்னணி புரிய வேண்டுமானால் 1980 ஆண்டு பிப்ரவரி மாதம் முதல் தேதி நடந்த நிகழ்ச்சியை முதலில் கூறி யாக வேண்டும். அன்று விகடன் ஆசிரியருடன் நான் காஞ்சிப் பெரியவரைத் தரிசிக்கச் சென்றிருந்தேன். அச் சமயம் பெரியவர் கர்நாடக-மகாராஷ்டிர எல்லையி லுள்ள 'உஹார் குர்த்' என்ற குக்கிராமத்தில் முகாமிட் டிருந்தார். அன்றுதான், சபரிமலை பங்குனி உத்திர யாத்திரைக்காக நான் ஜகத்குருவிடம் அருளாசி பெற்றேன்.

"கேரள விஜய'த்தை முடித்த பிறகு என்ன எழுதப் போறே?" என்று கேட்டார் பெரியவர்.

நான் பதில் சொல்லாமல் கருணைக் கடலின் கட்டளைக்காகக் காத்து நின்றேன்.

"கேரள விஜய'த்திற்குப் பிறகு தமிழ்நாட்டுக் கோயில்களை எழுது, நிறையக் கோயில்கள் இருக்கு." அன்புடன் மொழிந்தார் அருள் முனிவர்.

"சரி" என்று கூறி விழுந்து வணங்கி, எழுந்தேன்

"கோபுரம் எத்தனை அடி 'ஒசரம்', கோயிலை எந்த ராஜா எந்த வருஷம் கட்டினான், சுவாமி, கற்சிலையா செப்பு விக்கிரகமா, பஞ்சலோகமா – இதையெல்லாம் ஆராய்ச்சி பண்ணி எழுதறதைவிட, அந்தந்தக் கோயில் களோட ஸ்தல புராணங்களைக் கேட்டு, படிச்சு எழுது. ஒரே கதை ரெண்டு மூணு கோயில்களோட சம்பந்தப் பட்டிருக்கும். விசாரித்துக் கொண்டே போய்த் தரிசனம் பண்ணு. ஸ்தல புராணம் தெரிந்திருந்தால் இன்னும் பக்தி யோட சுவாமி தரிசனம் பண்ணலாம்" என்று நல்வாக்கு அருளி விடை கொடுத்து அனுப்பினார் ஸ்ரீ ஆசாரிய சுவாமிகள்.

1981-ம் ஆண்டு, ஏப்ரல்-சித்திரை-முதல் இதழி லிருந்து தமிழகக் கோயில்களைப் பற்றி எழுதுவது என்று முடிவாயிற்று. ஆனால், எந்த ஊருக்கு முதலில் செல் வது, எந்த ஆலயத்திலிருந்து தரிசனம் தொடங்குவது என்று தீர்மானிக்க முடியாமல் குழம்பிப்போனன்.

ஜனவரி 8-ம் தேதி விகடன் ஆசிரியருடன் நானும் ஸ்ரீஆசாரிய சுவாமிகளைத் தரிசனம் செய்ய மகாராஷ்டி ரத்திலுள்ள சாதாராவுக்குச் சென்றிருந்தேன். அச்சமயம், கடந்த ஆண்டு பிறந்த அருளாணைப்படி தமிழ்ப் புத்தாண்டிலிருந்து தமிழக யாத்திரைக் கட்டுரைகளைத் தொடங்கவிருப்பதைப் பற்றிக் காஞ்சி முனிவரிடம் விண்ணப்பித்துக் கொண்டு, "எந்தக் கோயிலிலிருந்து தொடங்குவது என்று தெரியவில்லை" என்றேன்.

முக்காலமும் அறிந்த மோனகுரு ஆல்அமர் மூர்த்தி யாக ஒருகணம் அமர்ந்து விட்டு, பின்புறம் திரும்பி, சற்றே நகர்ந்து, மூக்குக் கண்ணாடியை எடுத்து அணிந்து கொண்டு, அருகிலிருந்த அலமாரியில் எதையோ தேடி, ஒரு சிறு புத்தகத்தை எடுத்து, பக்கங்களைப் புரட்டிப் பார்த்து, ஒரு பக்கத்தைப் பிரித்து, மறுபடியும் திரும்பி அப் பக்கத்தின் ஒரு பகுதியை விரலால் சுட்டிக் காட்டி, 'இதைப் படி' என்று கூறாமல் கூறி ஜன்னல் வழியே அதை வெளியே வைத்தார். கண்கள் பனிக்க, கையில் புத்தகத்தை எடுத்துப் படிக்கத் தொடங்கினேன்...

'கிழக்குச் சமுத்திரத்துக்கு மூன்று காத வழி மேற்கில், காவேரிக்குக் காத வழி தெற்கில், எல்லாப் புண்ணியங் களையும் தரும் பிரும நதிக்குத் தெற்கில் இரண்டு நாழிகை வழி தூரத்தில், அமிருத க்ஷேத்திரமிருக்கிறது. அதன் வாயு மூலையில் இரண்டு நாழிகை வழி தூரத்தில் சார க்ஷேத்திரவாசியாகச் சிவபெருமான் வீற்றிருக்கின்றார். இதற்கு வட மேற்கில் சமீபத்தில் புண்ணியந்தருவதும் பாபக்காட்டை அழிப்பதுமான வசிஷ்டராசிரமம் இருக் கிறது. அதன் அக்நி மூலையில் ஒரு காத தூரத்தில் கர வீரவநத்தீச்வரர் இருக்கிறார். இதற்குச் சற்றுத் தென் மேற்கில் ஞாநமளிக்கும் சிவபெருமான் அமர்ந்திருக் கிறார். இதற்கு மேற்கு ஒரு நாழிகை வழி தூரத்தில் சுவர்ணபுரிச்வரர் உள்ளார். இதற்குச் சற்றுத் தெற்கில் பாப மலையைப் பிளக்கும் பெருமான் வீற்றிருக்கின்றார். இவைகளின் மத்தியில் யாவற்றிலும் மேலாய்ப் புண்ணி யம் தருவதும், அழிவில்லாததுமான அமிருத க்ஷேத்திர மிருக்கின்றது. அதனை நினைத்த மாத்திரத்தில் ஒருவன் சிவனாகி விடுகிறான், இது நிச்சயம்...'

எழுத்துக்களைக் கண்ணீர் மறைக்க நான் படித்துக் கொண்டிருந்தபோது 'போதும்' என்பதுபோல் பெரியவர் கைஜாடை காட்டினர். நிறுத்தினேன்.

''இத்தலத்திலிருந்து உன் யாத்திரையைத் தொடங்கு" என்று சைகையாலேயே காட்டிவிட்டு, 'அந்தப் புத்தகத்தை நீயே வைத்துக் கொள்' என்றும் கூறினார். மறுபடியும் பின்புறம் திரும்பி வேறு இரண்டு புத்தகங்களை எடுத்து வெளியே வைத்து ''இதையும் எடுத்துக்கொள்" என்று அருட் கட்டளையிட்டார்.

திருச்சந்நிதியை விட்டு முன் மண்டபத்திற்கு வரும் வரை எனக்குப் பொறுமையில்லை. அத்திருத்தலத்தின் பெயரை அறியும் பொருட்டு மேலட்டையைத் திருப்பிப் பார்த்தேன். அது 'திருக்குடவாயிற்புராணம்,' 1937-ம் ஆண்டில் வ. சு. சண்முகம் பிள்ளையவர்கள் வெளியிட்டது.

சென்னைக்குத் திரும்பும் வழியிலேயே திருக்குடவாயிற்புராணத்தை ஒரளவு படித்து விட்டேன். உடனே அங்கு செல்ல வேண்டும், ஸ்ரீ கோணேச சுவாமியைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆவல் மேலிட்டது. பத்துப் பதினைந்து நாட்கள் கடந்திருக்கும். நுங்கம்பாக்கம் அன்பர் விச்வநாதன் அலுவலகம் வந்திருந்தார்.

"பெரியவா தரிசனத்திற்காகச் சதாராவுக்குப் போயிருந்தேன், உங்களிடம் தரும்படி இந்தப் புத்தகத்தைக் கொடுத்து அனுப்பினார்'' என்று கூறி ஒரு சிறு நூலை என்னிடம் தந்தார்.

கிடைத்தற்கரிய பிரசாதமாக அதை மரியாதையுடன் பெற்றுக் கொண்டேன். குடவாசல் பாலசுப்ரமணியம் அவர்கள் எழுதிய 'குடவாயிற் கோட்டம்' என்ற சிறு ஆராய்ச்சி நூல் அது.

குடவாயிலின் இலக்கிய, சரித்திரப் பின்னணியையும் அங்கு வெவ்வேறு சமயங்கள் செழித்த செய்திகளையும் படித்து அறிந்தேன்.

'கொடவாசல்' என்று அதுவரை கேட்ட அறிந்திருந்த குடவாசல் என்ற குடவாயிலுக்கு முதன் முறையாகக் அந்த சிவராத்திரியன்று சென்றதன் பின்னணி இதுதான்.

கும்பகோணத்திலிருந்து திருவாரூர் செல்லும் பெரு வழியில் நாச்சியார் கோயில், திருச்சேறைத் தலங்களை யடுத்து பதினைந்தாவது கிலோ மீட்டரில் பாதையை யொட்டினாற் போல் ஒரு குளம். அதற்குக் கிழக்கே மொட்டைக் கோபுரத்துடன் ஒரு கோயில். அதுவே குடவாசல் ஸ்ரீ கோணேச்வர சுவாமி ஆலயம். அம்பிக்கை யின் திருநாமம் பிருகத் துர்க்காம்பாள். சகல நலன்களை யும் அருளும் சர்வ சக்தி படைத்த சாட்சாத் ஆதி பராசக்தியை, உள்ளே நுழைந்ததுமே தரிசனம் செய் கிறோம்; அவள் கருணையில் நனைகிறோம்.

அன்னையின் அருளைப் பெற்றுக் கொண்டு சுவாமி யின் பிராகாரத்தை வலம் வரும்போது, வடமேற்கில், வள்ளி, தெய்வானை சமேத ஸ்ரீ சுப்ரமணியக் கடவுள் அருணகிரிநாதரின் திருப்புகழ் பெற்றதால் புளகிதம் ததும்பத் திருக்கோலம் பூண்டு திகழ்கிறார். வடபிராகாரத் தில் இருக்கும் மிகப் பழமையான பலா மரம், தன் கனி களைப் பூதேவிக்கே அர்ப்பணிப்பதுபோல், தரையில் பழங்களைப் படர விட்டிருக்கும் அதிசயத்தைக் காண் கிறோம். அடுத்து, ஒற்றை வாழை ஒன்று. அதுதான் தல விருட்சம். அண்மையில் வைக்கப்பட்டதாக அறி கிறோம். கிழக்கிலுள்ள மேடையில் சிறிய வடிவங்களில் நவ கோள்கள்.

முழு வலம் வந்து, நேரே காட்சி தரும் விநாயகப் பெருமானை வழிபட்டு விட்டு, வடப்புறம் திரும்பினால், ஆனந்தக் கூத்தனின் அற்புத, அபூர்வ விக்ரகம் நம்மை அரங்கத்திற்கு அழைக்கிறது. நம்மையும் அறியாமல் அருகில் செல்கிறோம். உடன் வரும் புலவர் கோ. சுப்ர

மணியம், சிலையின் பீடத்திலிருக்கும் புடைப்பு எழுத்துக் களைப் படித்துக் காட்டுகிறார். 'களக்காடுடையார் மாலை தாழ்மார்பன்.' ஐந்து மைல் தொலைவிலுள்ள களக்காட் டைச்சேர்ந்த பக்தர் ஒருவர் அந்தச் சிலையை அளித் திருக்கவேண்டும் என்று விளக்கம் கூறுகிறார் புலவர். கலை நுணுக்கங்கள் நிறைந்த நடராஜப் பெருமானின் சிலையை உன்னிப்பாக ஆராய்கிறோம். நகங்களின் நேர்த்தியும், விரல்களின் நளினமும்... 'அடேயப்பா!' என்று வியந்து சற்று நேரம் அசந்து போய் நின்று விடுகிறோம்.

ஆலயத்தின் கீழ்ப்பகுதியைப் பார்த்தாகி விட்டது. இனி மேற்பகுதிக்கு—மாடிக்குப் போக வேண்டும். சோழன் கோச்செங்கணான் காவிரிக் கரையில் எழுப்பிய எழுபது மாடக் கோயில்களில் இதுவும் ஒன்று. பதினெட் டுப் படிகளேறி—சபரிமலை ஐயப்பனின் பதினெட்டாம் படி நினைவில் அலைமோத—ஐயன் கோணேசப் பெரு மானின் திருச்சந்நிதிக்குச் செல்கிறோம், தரிசித்ததுமே நம் உள்ளத்தைக் கவர்ந்து, தமக்கு அடிமையாக்கிக் கொள்ளும் காந்த சக்தி மிகுந்த கடவுள், ஜீவத் துடிப் போடு வீற்றிருக்கிறார். சாந்நித்யம் பரிபூரணமாக நிரம்பி யுள்ள சூழ்நிலை, சுறுசுறுப்பாக இயங்கும் ஞானஸ்கந்த குருக்களுடைய சிரத்தை மிகுந்த அலங்கார ஆராதனை களால் அக்கோயிலில் தெய்வீகக்களை படர்ந்திருக்கக் காண்கிறோம்.

மாடியில் உள்ள பிராகாரத்தையும் வலம் வந்துவிட்டு விமான கோபுரத்தைத் தரிசனம் செய்து விட்டு, சுவரின் மீது சுற்றிலும் அமர்ந்திருக்கும் நந்தி தேவரையும் முனி புங்கவர்களையும் வணங்கி விட்டு, நுழைவாயிலின் மேற் பகுதியைப் பார்த்ததும், ஒரு கணம் திகைத்து நிற் கிறோம். அங்கு ஒரு மாடத்தில் சிவலிங்கத்தை வழிபடு

வது போல ஓர் உருவம். ஆனால் அதன் தலையைக் காணவில்லை.

''கருட பகவான் கோணேசரை வழிபடும் காட்சி அது கருட பிம்பத்தின் தலை உடைந்து போய்விட்டது. அதைப் பழுது பார்ப்பதற்கான பணிகள் நடந்து கொண் டிருக்கின்றன'' என்கிறார் புலவர்.

ஆண்டவா? அதை விரைவில் செய்து முடிக்கக் கூடாதா? பார்க்கப் பரிதாபமாயிருக்கிறதே' – உள்ளம் அழுகிறது.

தலபுராணத்தை அறிந்திருந்ததால் ஏற்பட்ட துயரம் அது. தன் தாயின் அடிமைத்தனத்தைப் போக்குவதற் காகக் கருடன் தேவலோகத்திலிருந்து அமிர்தம் கொண்டு வந்து இங்குள்ள ஒரு புற்றின் மீது வைக்க, அந்தப் புற்றுக்குள்ளே இருந்த கோணேசப்பெருமான் அந்தக் குடத்தை மெள்ளத் தம்மிடம் இழுத்துக் கொள்ள, கருடன் அமிர்தக் குடத்தைக் காணாமல் தேடிப் புற்றைக் கிளறியபோது சுவாமி அவருக்குத் தரிசனம் தர... அது ஒரு சுவை மிகுந்த கதை...

காச்யப முனிவருக்கு இரண்டு மனைவிகள். மூத்தவள், விநதை. இளையவள், கத்ருதேவி. விநதையின் மகனான கருடன், மகாவிஷ்ணுவுக்கு வாகனமாயும், பரம பக்தனாயும் இருந்து கொண்டு 'பெரிய திருவடி' என்று புகழ் எய்தியவர். கத்ருவின் பிள்ளைகள், கொடிய நஞ்சு படைத்த பாம்புகள்.

ஒரு சமயம் சக்களத்திகள் இருவரும் கடற்கரையில் காற்று வாங்கிக் கொண்டிருந்தனர். அப்போது தேவேந்திரன் உச்சைசிரவம் என்ற வெண்ணிறக் குதிரையின் மீது சவாரி செய்து கொண்டு வந்தான். அக்குதிரை, தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக்

கடைந்தபோது தோன்றியதாகும். அந்த வெள்ளைக் குதிரை கொள்ளையழகுடன் ஒய்யாரமாக ஓடியது.

"ஆகா! அந்தக் குதிரை எத்தனை அழகாக இருக்கிறது பார்த்தாயா! உடல் முழுவதும் தூய வெண்மை நிறத்தில் அமைந்திருப்பது அபூர்வத்திலும் அபூர்வம்" என்று கத்ருவிடம் மிகவும் வியந்து கூறினாள் விநதை.

சக்களத்திப் பொறாமை கொழுந்து விட்டு எரிந்தது. விதண்டாவாதம் வலுத்தது.

"சே...! உங்கள் கண் குருடா? அது ஒன்றும் முழுமையான வெண்மை அல்ல. அதன் வால் கறுப்பாயிருக்கிறதே, நன்றாகப் பாருங்கள்" என்றாள் கத்ரு விநதையைப் பார்த்து.

விநதை கண்களைத் துடைத்துக் கொண்டு பார்த்தாள் : "சந்தேகமில்லை, வாலும் வெண்மை நிறம்தான்".

"இல்லை, கறுப்புத்தான்."

"இல்லை, வெண்மைதான்."

கத்ருவுக்குக் கோபம் வந்து விட்டது.

"குரையின் வால் கறுப்புத்தான் என்று நிருபித்தால்?..."— வம்புக்கிழுத்துச் சவால் விட்டாள்.

"நானும் என் மகனும் உனக்கு அடிமையாகிறோம்!" — சக்களத்தியின் சவாலை விநதை ஏற்றுக் கொண்டாள்.

கண்ணிலிருந்து குதிரை மறைந்து விட்டது. கத்ரு விநதையை அங்கேயே இருக்கச் சொல்லிவிட்டு, தன் பிள்ளைகளிடம் சென்றாள்; கடற்கரையில் நடந்ததைச் சொன்னாள்.

"குழந்தைகளே, உங்கள் தந்தை பெரிய தாயாரிடம் பிரியமாக இருந்து என்னை உதாசீனம் செய்கிறார்.


வளங்கீரைக் கொடிக்குப்
பூஜை
(அம்பர் ஆலயம்)


திர புராணேச்வரர்
திருமீயச்சூர்)

ஸ்ரீஅம்பர் மாகாளம் கோயில்




அம்பர் பெரும் திருக்கோயில்

அம்பர் ஆலயத்திலிருந்து
சோமாசி நாயனார் பல்லக்குப்
புறப்பட்டு வருதல்





விழியழகர் ராஜகோபுரம்
(திருவீழிமிழலை)



ஸ்ரீ ஏகாம்பரேச்வரர் ஆலயம்
(மானந்தகுடி)



கடகம்பாடி கோயிலில் விஷ்ணு துர்க்கை சந்நிதி

படங்கள்— நன்றி: ஆனந்த விகடன்.



ஸ்ரீசெட்டியப்பர். படியளந்த நாயகி சந்நிதிகள்
(அய்யன்பேட்டை)



திருக்கல்யாண மண்டபம்
(திருவீழிமிழலை)

ஸ்ரீவரதராஜப் பெருமாள் ஆலயம் – (பூந்தோட்டம்)



ஸ்ரீபார்வதீச்வரர் கோயில் (இஞ்சிக்குடி)





ஸ்ரீசுயம்புநாதசுவாமி ஆலயம் (பேரளம்)

ஆனைமாடவிமானம் (திருமீயச்சூர்)



சரஸ்வதி கோயில் (கூத்தனூர்)




அபிவிருத்தீச்வரம்


ஸ்ரீநிவாசப் பெருமாள்
ராஜ கோபுரம்
(நாச்சியார் கோயில்)


புண்ணியகோடிநாதர் ஆலயம்
(திருவிடைவாசல்)


சாரநாதப் பெருமாள் ஆலயம்
(திருச்சேறை)

ஸ்ரீ ஆபத்சகாயர் ஆலயம்
(ஆலங்குடி)



அவளை அவமானப்படுத்திப் பழிவாங்க எனக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. போட்டியில் வெற்றி பெற்றாக வேண்டும். உச்சைசிரவம் என்ற குதிரையின் வால் கறுப்பாக வேண்டும். நீங்கள் மனம் வைத்தால் முடியும்" என்று தனது வஞ்சகத் திட்டத்தைக் கூறினாள்.

பாம்புக் குழந்தைகள் மறுத்தன. தாயிடம் மன்றாடின. பெரிய அன்னையை அடிமை கொள்வது பாவம் என்று உபதேசம் செய்தன.

"தாயின் பேச்சைக் கேட்காத குழந்தைகள் நாசமாகட்டும். நீங்கள் உங்கள் குழந்தைகளைத் தின்று அழிந்து போவீர்களாக!" என்று சபித்தாள் கத்ருதேவி

கார்க்கோடகன் என்ற மகன் துடித்தெழுந்தான்: "தாயே! சாபமிடாதீர்கள். உங்கள் திட்டத்தை நான் நிறைவேற்றி வைக்கிறேன்" என்று புறப்பட்டான். அதன்படி வெள்ளைக் குதிரையின் வாலைச் சுற்றிக் கொண்டு, தன் விஷ மூச்சினால் அதைக் கறுப்பாக்கினான். தேவேந்திரன் மறுமுறை கடற்கரை வழியே வந்தபோது, கத்ரு, விநதைக்குக் குதிரையின் வாலைச் சுட்டிக் காட்டினாள்.

"அந்த வால் வெளுப்பா, கறுப்பா? இப்போது சொல்லுங்கள்" என்றாள்.

"சந்தேகமில்லை, கறுப்புத்தான்."

"அப்படியானால் நீங்களும் உங்கள் மகன் கருடனும் இக் கணத்திலிருந்து எனக்கு அடிமைகள். நான் இட்ட வேலையை நீ செய்ய வேண்டும். என் பிள்ளைகளைக் கருடன் சுமந்து செல்ல வேண்டும்."

அன்று முதல் கொத்தடிமைகளான விநதையும் கருடனும் படாத பாடுபட்டார்கள். விநதை துயரத்தால் இளைத்துக்கொண்டே போனாள். கருடன் கண்ணீர் சிந்தாத நேரமில்லை.

பொறுமையை இழந்த கருடன் ஒரு நாள் தாயிடம் சென்று கதறி அழுதான்: "தாயே, பாம்புகளின் தொந்தரவும் துன்புறுத்தலும் எல்லை மீறிப் போகிறது. இதிலிருந்து விமோசனமே இல்லையா?"

"மகனே! என்னால் நீ துன்புறுவானேன்? நான் உன் சிற்றன்னையின் காலில் விழுந்து கெஞ்சிப் பார்க்கிறேன்" என்று கூறி சக்களத்தியிடம் சென்றாள். மனமிரங்கும்படி அவளிடம் மண்டியிட்டுக் கேட்டாள்.

"சரி. எனக்குத் தேவலோகத்திலுள்ள அமிருதக் குடம் வேண்டும். அதைக் கொண்டு வந்து கொடுத்தால் உங்கள் அடிமைத்தனம் நீங்கும். அதுவரையில் இல்லை" என்றாள் கத்ரு.

விநதை மகனிடம் சென்றுரைத்தாள். கருடாழ்வார், தந்தையின் நல்லாசி பெற்றுத் தேவலோகம் நோக்கிப் பறந்தார்.

பாற்கடலைக் கடைந்தபோது வெளிப்பட்ட அமிருதக் கலசம் தேவர்களது உடமை. அதைக் கருடன் எடுப்பதைக் கண்ட இந்திராதி தேவர்கள் வெகுண்டெழுந்து போரிடத் தயாரானார்கள். அத்தனை பேரையும் அடித்து வீழ்த்தி விட்டு, அமிருதக் கலசத்துடன் புறப்பட்டார் பெரிய திருவடி.

செய்வதறியாது திகைத்து நின்ற இந்திரனிடம், "கவலைப்படாதே! அமிருதத்தை உண்ணும் உரிமை என் சிற்றன்னைக்குக் கிடையாது. எனவே, அவள் கண்ணில் குடத்தைக் காட்டிவிட்டு, மறுபடியும் இங்கேயே கொண்டு வந்து சேர்த்து விடுகிறேன்" என்று கூறி விட்டுச் சென்றார் கருடன்.

பூலோகத்தில் குடவாயிலுக்கு அருகே பறந்து வரும்போது, 'மகா பயங்கரன்' என்ற அசுரன் எதிர்ப்பட்டான். அவன் ஆயிரமாயிரம் ஆண்டுகள் அங்கு

தவமிருந்தவனாதலால், தனக்காகத்தான் கருடன் அமிருதம் கொண்டு வருவதாக நினைத்தான். இல்லை என்று தெரிந்ததும் கோபம் கொண்டான். கருடனை வம்புக்கிழுத்தான்; பின்னர் 'கொன்று விடுவேன்' என்று பயமுறுத்தி சண்டைக்கிழுத்தான். கருடாழ்வாருக்கு ஆவேசம் பிறந்தது.

அருகிலிருந்த ஒரு பெரிய புற்றின்மீது தர்ப்பைகளைப் பரப்பி, அதன் மீது குடத்தை வைத்துவிட்டு, அசுரனுடன் மூர்க்கமாகப் போர் புரிந்து, அவனைக் கீழே வீழ்த்தினார். மூக்கினாற் தாக்கி அவன் உயிரைக் குடித்தார். அன்னை தனக்காகக் காத்திருப்பாளே என்ற அவசரத்தில், புற்றின் மீது வைத்த அமிருதக் குடத்தை எடுக்கப் போனார். ஆனால், அக்குடம் தன் கண்ணெதிரிலேயே புற்றுக்குள் செல்வதைக் கண்டார். அடுத்த கணம், மலை போன்ற அந்தப் புற்றை மூக்கினால் பிளந்து, கால்களால் இடித்துத் தள்ளினார். அங்கே அமிருதக் குடமிருந்தது. அது, அமிருதலிங்கேச்வரர் திருக்கரத்திலிருந்தது. அதைக் கண்டதும் கருடன் பக்தி மேலிட ஆனந்தக் கண்ணீர் பெருக்கினார். அவரை மூன்று முறை வலம் வந்து வழிபட்டார்.

''பிரபோ, சர்வேசா, வேதசொருபா, உமாமகேச்வரா முழுமுதற் கடவுளே, முக்கண்ண மூர்த்தியே, முப்புரம் எரித்தோனே, இதென்ன திருவிளையாடல்?" என்று கேட்டார்.

அதற்குப் பரமேச்வரன், ''பட்சிராஜனே, உன் மூலம் நான் வெளியுலகத்திற்குத் தெரிய வேண்டும் என்பதற் காகவே உன்னை இங்கு வரவழைத்தேன். உன் அடிமைத்தனம் நீங்குவதற்காக அமிருதம் கொண்டு வர வேண்டும் என்ற திட்டமும் நான் வகுத்ததே. இந்திராதி தேவர்களை நீ வென்றதும், அசுரனைக் கொன்றதும்

என் சித்தமே. அநேக ஆயிர வருடங்களாக நான் இப் புற்றுக்குள் இருக்கிறேன். இந்த இடம் உன் முயற்சியால் ஓர் ஆலயமாகத் திகழ வேண்டும். எனவே, இந்த அமிர்தக் கலசத்தைக் கத்ருவிடம் தந்து, உன் அன்னையை மகிழ்வித்து விட்டு, பின்னர் உன் பெற்றோரை வணங்கி, அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு இங்கே வா!" என்று கூறி அமிருத கலசத்தைக் கருடனிடம் தந்தார் அமிருதலிங் கேச்வரர்.

அதை எடுத்துக் கொண்டு அன்னையிடம் சென்றார் கருடன். இருவரும் கத்ரு தேவியிடம் சென்றார்கள். அவளுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. "இனி நீங்கள் எனக்கு அடிமைகள் இல்லை" என்று குதூகலத்துடன் கூறிவிட்டு அமிருதக் குடத்தை வாங்கி, தர்ப்பாசனத்தின் மீது வைத்து விட்டு, நீராடப் போனாள்.

அச்சமயம் பார்த்து இந்திரன் வாயு பகவானை ஏவ அவர் குடத்தைத் தூக்கி கொண்டு போய் தேவலோகத் தில் பத்திரப்படுத்தி விட்டார். திரும்பி வந்து பார்த்த கத்ருதேவி துணுக்குற்றாள். கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லையே என்று துயருற்றாள்: அமிருதத் துளிகள் தர்ப்பையில் சிந்தியிருக்கக்கூடும் என்று எண்ணி, தாயும் குழந்தைகளும் தர்ப்பையை நக்கினர். கூரான தர்ப்பை அவர்களது நாக்கை இரண்டாகப் பிளந்தது. இதன் காரணமாகத்தான் பாம்பின் நுனிநாக்கு இரண்டாகப் பிளந்திருக்கிறதாம்!

முத்தாளை அடிமை கொண்ட பாவத்திற்காகக் கத்ரு தேவி தண்டனை பெற்று விட்டாள். கருடாழ்வார் ஆனந் தத்தில் துள்ளிக் குதித்தார். கோணேசப் பெருமாளின் அருளாணைப்படி அமிருத க்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந் தார். கோணேசரது விருப்பப்படி பிராகாரங்களோடும், மண்டபங்களோடும் ஆலயம் அமைத்துத் தந்து வழிப் பட்டார். திருக்குளக் கரையில் ஆதி கஜானனருக்குச்

சந்நிதி கட்டி வைத்தார். மாசி மாதத்தில் பிரும்மோற்சவத்திற்கு ஏற்பாடு செய்தார். மாதந்தோறும் நடைபெற வேண்டிய உற்சவங்களையும் தினப்படி நடக்க வேண்டிய வழிபாட்டு முறைகளையும் வகுத்துத் தந்து நிரந்தரமான கீர்த்தி பெற்றார்.

புற்றுக்குள்ளிருந்து பெருமான் தோன்றியதால் இத் திருத்தலத்திற்கு 'வன்மீகாசலம்' என்ற ஒரு பெயரும் உண்டு. பிருகு, தாலப்யர், மிருகண்டு முதலிய முனிவர்கள் இங்கு தவமியற்றிக் கோணேசரின் கருணையைப் பெற்றிருக்கின்றனர். இப்பெருமாள் அமிருதலிங்கேச்வரர் என்றும் அழைக்கப்படுகிறார்.

மகாப் பிரளய காலத்தில், உடலிழந்த உயிர்கள் அனைத்தையும் கைலாசமாகிற குடத்திலிட்டு, அதைத் தம் சொருபமாகிற அமிருதத்தால் நிறைத்து வைத்தார் சிவபெருமான். மீண்டும் படைப்புக் காலம் வந்தபோது, ஊழிக்கால வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்த இந்தக் குடம் மூன்றாக உடைந்தது. அதன் முக பாகம்—குடத்தின் வாய்— தங்கிய இடம் குடவாயில் ஆயிற்று. கோணேசர் எழுந்தருளினார். நடுப்பாகம், கும்பகோணத்திற்கு மூன்று மைல் தென்கிழக்கேயுள்ள கலயநல்லூரில் தங்கியது. அங்கு சுவாமி அமிருத கலசநாதராக, அமிருதவல்லி அம்பாளுடன் எழுந்தருளினார். அடிப்பாகம் தங்கிய கும்பகோணத்தில் கும்பேச்வரராக, மங்களாம்பிகாவுடன் திருக்கோயில் கொண்டார்.

ஸ்ரீ கருடாழ்வார் கொண்டு வந்து வைத்த அமிருதத்தால் அபிஷேகம் செய்யப்பட்டவராதலால் கோணேசர் அமிருதலிங்கமானார். அமிருதத் துளிகள் சிந்தியதால், ஆலயத்திற்கு எதிரிலுள்ள தீர்த்தம் 'அமிருத தீர்த்தம்' ஆயிற்று.

குடவாயிலில் உள்ள அமிருத தீர்த்தத்தின் பெருமையைத் தல புராணம் சிறப்பாகப் பேசுகிறது...

'அமிருத தீர்த்தத்தைத் தொட்டவருக்கு முன் எட்டுப் பிறப்பிற் செய்த பாவங்கள் நீங்குகின்றன. தாகத்திற்கு அதைப் பருகுபவர் புண்ணியராகிறார். அதில் முழுக விரும்பி, அது இருக்கும் திக்கை நோக்கி ஓரடி எடுத்து வைத்தாலும் கங்கா ஸ்நான பலனும் சிவலோக வாழ்வும் கிடைக்கும். மக நட்சத்திரத்தில் அமிருத தீர்த்தத்தில் முழுகினால், அந்த மாதம் முழுவதும் நாம் செய்த பாவம் நீங்கும். சிவராத்திரியில் பக்தியுடன் மூழ்கினால் பதினாயிர அசுவமேத யாக பலன் கிடைக்கும். மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் முழுகிக் கோணேச மூர்த்தியைத் தரிசிக்கிறவர் தேவராவர். அதில் ஸ்நானம் செய்பவர் அமிருதமயமான சரீரமுடையவராகிறார்...மாசிமகம் கூடிய பௌர்ணமியில் கோணேசப் பெருமான் கும்ப லக்னத்தில் தீர்த்தம் கொடுக்கும்போது பக்தியுடன் அமிருதத் தீர்த்தத்தில் முழுகுவானாயின் எல்லாப் பாவங்களிலிருந்தும் நீங்கிப் பரிசுத்தனாய்ச் சிவபக்தனாய் முக்தனாகிறான்...'

இத்தனை புண்ணியம் நிறைந்த திருக்குளம் நான் கண்டபோதிருந்த நிலையை நினைத்தாலே மனம் குமுறுகிறது.

முன்னொரு காலத்தில் காஷ்மீரத்தில் சிருத்தர்மன் என்றோர் அந்தணர் இருந்தார். அவர் ஒரு வேதபண்டிதர் ; ஒழுக்கசீலர் ; சிவ பூஜையில் சிறந்தவர். ஆசார அனுட்டானங்களைத் தவறாமல் கடைப்பிடித்தவர் அவரது மனைவி சுசீலை. கற்பின் அணங்கு. பதியைத் தெய்வமாகப் பூஜித்தவள். நற்குணங்களை அணிகலன்களாகக் கொண்டவள்.

இவ்விருவருக்கும் மகனாகப் பிறந்த பிரசண்டன், நாத்தழும்பேற நாத்திகம் பேசித் திரிந்தான். சிவ பூஜை செய்து வந்த தந்தையைப் பழித்தான். தர்மம், தானம்,

சாத்திரம், விரதம், யாகம் போன்ற சொற்களையே வெறுத்தான். பணம் சம்பாதிப்பதே பிறவியின் பயன் என்றும் அந்தப் பணத்தைக் கொண்டு இன்பமாக வாழ் வதே சுவர்க்கம் என்றும் தந்தைக்கு உபதேசம் செய்து வந்தான்.

தங்களுக்கு இப்படியொரு பிள்ளை பிறந்ததைக் குறித்து மனம் நொந்த சிருத்தர்மனும் சுசீலையும், வீட்டை விட்டு வெளியேறி கோகர்ணத் திருத்தலம் சென்று வாழ்ந்தனர். 'தொலைந்தது சனி' என்று மகிழ்ந்த பிரசண்டன், தன்னிஷ்டத்திற்கு வாழ்ந்தான். சிற்றின் பங்களில் ஈடுபட்டான். தந்தை ஈட்டிய செல்வத்தை யெல்லாம் விலைமாதருக்காகச் செலவு செய்தான். சிவ நிந்தையாலும், பெற்றோரைப் பழித்ததாலும், சிற்றின்ப லீலைகளில் ஈடுபட்டதாலும் தொழுநோய் அவனைப் பற்றிக் கொண்டது. பார்க்கக் குரூபியானான். அவனி டம் இன்பம் பெற்றவர்களெல்லாம் அவனை வெறுத்து ஒதுக்கினர். அவன் பணத்தில் உண்டு களித்த உறவி னர்கள், அவனை விரட்டினர். ஊரைவிட்டுக் கிளம்பிய வன், வழி நெடுகிலும் நரக வேதனை அனுபவித்து, உடல் மெலிந்து, உள்ளம் நலிந்து, உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு குடவாயில் கோணேசர் ஆலயம் வந்து சேர்ந்தான். முன்பிறவியில் ஸ்ரீசைலத்தில், பிர தோஷ காலத்தில் மல்லிகார்ஜுன சுவாமியைத் தற்செய லாய் தரிசித்த புண்ணியம்தான் இந்தப் பிறவியில் பாவம் செய்திருந்தாலும் அவனைக் கோணேசப் பெரு மானிடம் கொண்டு வந்து சேர்த்தது.

அப்போது கோணேசருக்கு மகோற்சவம் நடைபெற் றுக் கொண்டிருந்தது. மாசி, பௌர்ணமி, கும்ப லக்னத் தில் கோணேச சுவாமி அமிர்த தீர்த்தத்தில் தீர்த்தம் கொடுக்கும் நேரம். விண்ணுலக தேவர்களும் மண்ணுலக ஆத்திகர்களும் சிவ பெருமான் புகழை நெஞ்சார

நினைத்து, வாயாரப் பாடினார்கள். வாத்தியங்களின் ஒலி, வானில் முட்டி எதிரொலித்தது. அங்கு கூடியிருந்த பக்தர்கள் அனைவரும் அமிர்த தீர்த்தத்தில் மூழ்கி திளைத்தார்கள். பிரசண்டன், நடைப்பிணமாகத் திருக் குளத்தை நோக்கி நடந்தான். கால் தடுக்கிக் கீழே விழுந் தான். படிகளில் உருண்டு, தண்ணீரிலும் விழுந்தான் அங்கிருந்தவர்கள், 'ஐயோ பாவம்' என்று அலறி அவனைக்கரை சேர்த் தனர். அமிர்த தீர்த்தம் அந்தப் பாவியைப் புண்ணியனாக்கியது. தொழுநோய் அடியோடு நீங்கப்பெற்று, அவன் அழகனானான். ரிஷப வாகனத்தில் அமர்ந்திருந்த கோணேசப் பெருமானை வணங்கினான். வாழ்த்தினான். அவர் கருணையை நினைந்தான். அவன் கன்னங்கள் நனைந்தன.

தூயவனாக மாறிய பிரசண்டன், வேதம் ஓதினான். எந்நேரமும் சிவபக்தியில் மூழ்கினான். கோணேசப் பெருமானின் சேவைக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டான். இறுதியில் அவர் திருவடிகளைச் சேர்ந்து நற்கதியடைந்தான்.

அன்று பிரசண்டனின் நோயைத் தீர்த்த திருக்குளம், இன்று நோய்களைப் பரப்பும் சூழலில் இருப்பதைக் காணும்போது மனம் வேதனை அடைகிறது. அமிர்த தீர்த்தத்தை வலம் வர முடியாமல் பாதை முழுவதும் கல்லும், மண்ணும், மணலும் கருங்கற்பாறைகளுமாகக் குவிக்கப்பட்டிருக்கின்றன. படிக்கட்டுகளெல்லாம் அசுத் தம் செய்யப்பட்டிருக்கின்றன. அருகில் சென்றாலே வயிற்றைக் குமட்டுகிறது. வாய்க்காலிலிருந்து வரும் நீர் வெளியே செல்ல வழியின்றி, குட்டையாகத் தேங்கி, பாசி படிந்து, மோசமான நிலையிலிருக்கிறது. அருகிலுள்ள திருச்சேறை ஸ்ரீ சாரநாதப் பெருமாள் ஆலயத்தின் திருக் குளமும், நாச்சியார்கோயில் ஸ்ரீ ஸ்ரீநிவாசப் பெருமாள்

ஆலயத்தின் திருக்குளமும் சீராகப் பராமரிக்கப்படுவது போல், கோணேச சுவாமியின் திருக்குளத்தையும் பாது காக்கக் கூடாதா? அவ்விரு குளங்களுக்கும் உயர்ந்த மதிற்சுவர்கள் எழுப்பப்பட்டிருப்பது போல் இதற்கும் கட்டக் கூடாதா? ஆலயங்களுக்கு மட்டும் திருப்பணி செய்து விட்டால் போதுமா? ஆலயத்தின் ஓர் அங்க மான திருக்குளம் நல்ல முறையில் பராமரிக்கப்பட வேண் டாமா? மூர்த்தி, தலம், தீர்த்தம்—மூன்றுமே சிறப்பாக அமையும்போது தானே, ஆலய வழிபாடு சிறந்து, ஆத் திகம் தழைத்து, ஆன்மீகம் வளர்கிறது.

அமிர்த தீர்த்தமான குடவாயில் திருக்குளத்தின் பெருமையை மேலும் விவரிக்கும்படி நைமிசாரணிய முனிவர்கள் ஆவலுடன் கேட்க சூதர் தொடர்கிறார்:

கங்கை முதலான ஒன்பது நதிகளுக்கும் திடீரென்று ஒரு கவலை ஏற்பட்டது. ''எல்லோரும் நமது நீரின் மூழ் கித் தங்கள் பாவங்களைக் கரைத்துக் கொள்கிறார்களே, அந்தப் பாவ மூட்டைகளை நாம் சுமந்து செல்வதால், நாம் பாவம் சேர்த்துக் கொள்கிறோமே, அந்தப் பாவங் களை எப்படித் தொலைப்பது?"

இந்தக் கேள்வியுடன் கங்கை, காவேரி, கோதாவரி, யமுனை, நர்மதை, பாலாறு, சரஸ்வதி, சரயு, கன்யா குமரி—ஒன்பது நதிகளும் சிவபெருமானிடம் சென்றனர். பரமேச்வரன் அவர்களைக் கன்னிகைகளாக மாற்றி, காவிரியின் தென்கரையிலுள்ள மூன்று புண்ணய தீர்த்தங் களில் நீராடி, பரிசுத்தமாகும்படி அருளினார். அவ்வாறு ஸ்நானம் செய்ய வேண்டிய நல்ல நேரத்தையும் வேளை யையும் அவரே கூறியருளினார்:

''சூரியன் கும்ப ராசியிலும், குரு சிம்ம ராசியிலும், சந்திரன் மக நட்சத்திரத்திலும் விளங்கும் காலத்தில் அந்த மூன்று தீர்த்தங்களிலும் முழுகுங்கள். பன்னிரண்டு

வருடங்களுக்கு ஒருமுறை குரு சிம்ம ராசியில் இருக்கும் காலத்தில் மூன்று தலங்களிலும் மாசி மாதம் முழுவதும் தங்குங்கள்" என்று கூறினார்.

கன்னிகைகளாக மாறிய ஒன்பது நதிகளும், முதலில் கும்பகோணம் சென்று மகாமகக் குளத்தில் நீராடி, அடுத்து தென்கிழக்கேயுள்ள கலசநல்லூர் என்ற சாக்கோட்டைக்குச் சென்று அங்குள்ள சிவ தீர்த்தத்தில் நீராடினர். இறுதியாக குடவாயில் அமிர்த தீர்த்தக்கரைக்கு வந்தனர். திருக்குளத்தில் இறங்கி நீராடத் தொடங்கியதும், அந்த நீர் வற்றிவிட்டது! நதிக் கன்னியர் பெரும் துயருற்றனர். "எங்கள் பாவம் நீங்க வழியென்ன? அமிர்த தீர்த்தத்தை மீண்டும் எப்போது காண்போம்?" என்று ஏங்கினர். கோணேசப் பெருமானிடம் சென்று முறையிட்டனர்.

அப்போது வானில் ஓர் ஒலி முழங்கியது. "புண்ணிய நதிகளே, கவலைப்பட வேண்டாம். நீங்கள் செய்த ஒரு சிறு தவற்றினால், அமிர்த தீர்த்தம் வற்றி விட்டது. நீங்கள் முதலில் அமிர்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்யத் தவறி விட்டீர்கள். இந்திரியங்களில் கண் போன்று, உடலுக்கு முகம் முக்கியமானது. அமுத குடத்தின் முகமாகிய கோணேசரை வணங்கிவிட்டு, அமிர்த தீர்த்தத்தில் முழுகிவிட்டு, பின்னர் நடுப்பாகமான கலசநல்லூரிலும் அடிப்பாகமான கும்பகோணத்திலும் வழிபட வேண்டும். இந்த முறையை மறந்து விட்டதால், உங்களுக்கு அமிர்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்யும் பேறு கிட்டவில்லை. தற்போது அதை உணர்ந்து விட்டீர்களாதலால், அமிர்த தீர்த்தம் பொங்கிப் பெருகும். அதில் ஸ்நானம் செய்து விட்டு, கோணேச சுவாமிக்கும் பிருகத் துர்க்காம்பாளுக்கும் அர்ச்சனை செய்து, மலர் மாலைகளைச் சாத்துங்கள். திருக்குளக் கரையில் உறையும் ஆதி கஜானனருக்கு மோதகம் படைத்து, அன்னம் நிவேதனம் செய்யுங்கள்."

ஆகாசத்தில் பிறந்த அருட் கட்டளையின்படியே நதிதேவதைகள் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை மூன்று தீர்த்தங்களிலும் முறையாக ஸ்நானம் செய்து தங்கள் பாவங்களைப் போக்கிக் கொண்டு வருகின்றனர். அந்தந்த ஊரில் உள்ள தீர்த்தங்களுக்குச் சிறப்புகள் கூறி, புண்ணியங்கள் சேர்த்து, அத் திருக்குளங்களை நாம் பாதுகாக்க வேண்டும் என்பதுதான் நமது முன்னோர்களின் கருத்தாக இருந்திருக்க வேண்டும். தல புராணங்களைப் படித்தறிந்து, தலப் பெருமைகளை நன்கு உணர்ந்து, பக்தியையும் நம்பிக்கையையும் வளர்த்துக் கொண்டால், நம் ஆலயங்களின் மீது நமக்கு அக்கறை பிறக்கும்; திருக்குளங்களை அசுத்தப்படுத்தாமல் இருக்கும் மனப்பான்மை வளரும்; நம் ஊரும் கிராமமும் செழிப்பதற்காக உழைக்கும் உறுதி நம்முள் பிறக்கும்.

குடவாசல் தல புராணத்தில் உள்ள மற்றொரு கதையையும் கேட்போம்.

பண்டைக் காலத்தில் இத்தலத்தில் கௌசிகர் என்ற ஒரு சிவபக்தர் வசித்து வந்தார். நன்னெறியில் நாட்டம் கொண்டவர் அவர். சிவனடியார்களுக்குச் சேவை செய்வதையே வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டவர். ஆனால், அவருக்கு மனைவி ஒழுங்காக வாய்க்கவில்லை. சிவனடியார்களை வேஷதாரிகள் என்று ஏசுவாள். 'சிவன் எங்கே இருக்கிறார்? அப்படியொருவர் இருந்தால் என்னெதிரில் வந்து பேசட்டுமே' என்று விதண்டாவாதம் செய்வாள். 'தீர்த்த ஸ்நானங்களால் யாதொரு பயனுமில்லை. தலபுராண நிகழ்ச்சிகளெல்லாம் கட்டுக் கதைகள்' என்று பழிப்பாள்.

வடதுருவம், தென் துருவமான இத் தம்பதிக்கு ஒரு மகன் பிறந்தான். அவன் தந்தையைக் கொள்ளாமல் தாயைக் கொண்டான். வட்டிக்குப் பணம் கொடுத்துப் பெரும் பணக்காரனானான். நடத்தை கெட்டு, மகா பாவியாக வாழ்ந்தான்.

சிவபக்தியிற் சிறந்த கௌசிகருக்கு இப்படியொரு மனைவியும் மகனும் எப்படி வாய்த்தார்கள்? நியாயமான கேள்விதானே! இந்த சந்தேகத்தைச் சனகாதி முனிவர்கள், கதை சொல்லும் சூத பௌராணிகரிடம் கேட்காமல் இருப்பார்களா? முக்காலமும் அறிந்த மாமுனி அதற்கான காரணத்தைச் சொல்லாமல்தான் இருப்பாரா?

கௌசிகரின் முன் பிறவியைப் பற்றிச் சூதர் சொன்னது இதுதான்:

கடந்த பிறவியில் கௌசிகர் காஷ்மீரத்தில் ஓர் அந்தணராகப் பிறந்திருந்தார். சிவராத்திரியன்று சிவ கதை கேட்பதற்காக அவர் ஆலயத்திற்குச் செல்லும் நேரத்தில், இருட்டில் எதிரே வருவது யார் என்று தெரியாமல் ஒரு விலைமாதின் மீது முட்டி மோதிக் கொண்டார். 'சிவகதை கேட்கச் செல்லும்போது, அந்நியப் பெண்ணொருத்தியைக் கட்டித் தழுவ நேர்ந்துவிட்டதே, பெரியதொரு பாவத்திற்கு ஆளாகி விட்டேனே' என வருந்தினார் அவர்.

அவருடைய தோழர்கள் அவரை இழித்தும் பழித்தும் பேசினார்கள். 'அவளுடன் உனக்கு ஏற்கனவே தொடர்பு இருக்கிறது. அவளைத் தழுவிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில்தான் நீ அவள் மீது மோதிக் கொண்டாய்' என்று குற்றம் சாட்டினார்கள். அது அவர் நெஞ்சை உறுத்தியது. கோயிலில் சிவகதையைக் கேட்டுக்கொண்டிருந்தபோது, இருட்டில் நடந்த நிகழ்ச்சியைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தார். அடுத்த மூன்று நாட்களும் அவர் ஊண், உறக்கம் துறந்து, பூஜையை மறந்து, அந்த தாசியின் நினைவிலேயே நேரத்தைக் கழித்தார். அவரது மதிமயக்கத்தைக் கண்டு அவர் மனைவி கவலை கொண்டாள். காரணத்தைக் கேட்டறிந்தாள். சற்று யோசித்தாள். அடுத்த

கணம் தாசியின் வீட்டுக்கு ஓடோடிச் சென்றாள். அந்தப் பதிவிரதை.

கணவனின் சுகமே தன் சுகம் என்றும், அவன் மகிழ்ச்சியே தன் மகிழ்ச்சி என்றும் வாழ்ந்து வந்த அந்தக் கற்புக்கரசு, தாசிப் பெண்ணிடம் மன்றாடி அவளைத் தன் இல்லத்திற்கழைத்து வந்தாள். கணவனின் ஆசை தணிந்தது ; மயக்க நிலை ஒழிந்தது.

ஆனால், விரைவிலேயே அக்கணவன் தன் பாவத்தை உணர்ந்தான். அப் பாவத்தைப் போக்கிக் கொள்ள ராமேச்வரம் சென்று அங்குள்ள புண்ணியத் தீர்த்தங்களில் நீராடினான். புனித நீராடியதாலும், சிவ ராத்திரியன்று சிவன் கோயிலுக்குச் சென்று சிவகதை கேட்டதாலும் அவன் மந்தாரவனம் என்ற அமிருத தல மாகிய குடவாசலில் வந்து பிறந்தான். இருப்பினும் சிவ ராத்திரியன்று, தாசியின் தொடர்பு ஏற்பட்டு, சிறிது காலம் அவன் மதிமயக்கத்திலிருந்ததால், அந்தப் பாவத்தின் பலனாக அடுத்த பிறவியில் அவனுக்கு மனைவியும் மக னும் பாவிகளாக வந்து வாய்த்தார்கள். இது கௌசி கரின் முற்பிறவியைப் பற்றி சூதர் சொன்ன கதை.

இம்மாதிரி கதைகளைப் படிக்கும்போது ஓர் உண்மை புலனாகிறது. புண்ணியம் செய்வதால் நாம் செய்யும் பாவம் முழுவதும் தொலைந்து விடுவதில்லை. புண்ணியம் அதிகம் செய்யச்செய்ய, அதன் பலன் அதிக மாகி, பாவத்தின் விளைவுகள் நம்மைத் தீவிரமாகத் தாக் காமல் செய்து கொள்ளலாம், அவ்வளவுதான். இயற்கை யின் நியதிப்படி, கொஞ்சம் பாவம் செய்தாலும் அதன் பலன் பன்மடங்காகிறது ; மிக அதிகமாகப் புண்ணியம் செய்தாலும் அதன் பலன் குறைந்ததாகவேயிருக்கிறது அதனால்தான் நல் வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் நாம் நிறைய புண்ணியங்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று நமது சமய நூல்கள் கூறுகின்றன.

முற்பிறவியில் செய்த தீவினையால் அடுத்த பிறவி யில் கௌசிகருக்கு மாபாவியாக ஒரு மகன் பிறந்தாலும், தந்தை செய்த புண்ணியத்தின் பலனாக இறுதியில் அவன் தன்னையுமறியாமல் ஒரு நற்பணி புரிந்து, ஸ்ரீ கோணே சப் பெருமான் அருளால் நற்கதி பெற்றான். குழந்தை கள் நன்றாக வாழ வேண்டுமென்றால் பெற்றோர் நிறைய புண்ணியம் செய்திருக்க வேண்டும். 'தர்மம் தலை காக்கும்' என்ற பொன்மொழிக்கு, நாம் செய்யும் நல்ல காரியங்கள் நம் தலைமுறைகளைக் காக்கும்' என் பதுதான் உண்மையான பொருளாக இருக்க முடியும்.

தகாத முறையில் பணம் சம்பாதித்து பெரும் பணக் காரனாகிவிட்ட கௌசிகரின் மகன் ஒரு கொத்தனாருக்கு கடன் கொடுத்திருந்தான். அவர் அக்கடனைக் குறித்த காலத்தில் கொடுக்காமல் ஏமாற்றி வந்தார்.

ஒரு சிவபக்தர், இந்தக் கொத்தனாரை ஸ்ரீ கோணேச மூர்த்தி ஆலயத்தில் சிறு திருப்பணி செய்ய வேலைக்கு அமர்த்தியிருந்தார். கருவறை மண்டபத்தில் இடிந்து போன இடத்தைப் அவர் பழுது பார்த்துக் கொண்டிருந்த போது, கௌசிகரின் மகன் அங்கு வந்து, "கொத்த னாரே, எத்தனை நாட்களாக ஏமாற்றிக் கொண்டிருக் கிறாய்? என் கடனை இந்த நிமிஷமே திருப்பிக் கொடுத்து விட்டு மறு வேலையைப் பார்" என கையைப் பிடித்து இழுத்தான்.

அதற்குக் கொத்தனார், "ஐயா ! சற்றுப் பொறுத்துக் கொள்ளுங்கள். இதோ கையிலுள்ள கல்லை வைத்துக் கட்டி முடித்துவிட்டு, சிவ பக்தரிடம் சென்று சம்பளத்தை வாங்கித் தங்களுக்குச் சேர வேண்டிய வட்டியையாவது தந்து விடுகிறேன். திருப்பணி வேலையில் ஈடுபட்டிருக் கும் என்னைத் தடுக்காதீர்கள், அது மகா பாவம்" என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்.

கடன் கொடுத்தவனுக்குக் கடும் கோபம் வந்து விட்டது. "அந்த வேலையை நான் செய்கிறேன், இந்தக் கல்லை நான் வைத்துக் கட்ட மாட்டேனா? நீ முதலில் எழுந்து போய், அவரிடம் பணம் கேட்டு வாங்கி வா" என்று கொத்தனாரின் கையைப் பிடித்து இழுத்து விட்டு விட்டு, அவர் கையிலிருந்த கல்லை வாங்கி, தான் கட்டத் தொடங்கினான்.

பின்னர், பணத் திமிரில் எளியவரைக் கசக்கிப் பிழிந்த பாவியையும், வாங்கிய கடனைத் திருப்பித் தரா மல் ஏமாற்றிய கொத்தனாரையும் அழைத்துப் போக எம தூதர்கள் வந்தார்கள். ஆனால், சிவ தூதர்கள் அவர் களை விரட்டியடித்து விட்டு, இவ்விருவரையும் கைலாசத் திற்கு அழைத்துச் சென்றார்கள். ஆலயத் திருப்பணியில் ஈடுபட்டதால் கொத்தனார்க்கும், காரணம் எதுவாக இருப் பினும் தன் கையால் அத்திருப்பணிக்கு ஒரு கல்லை எடுத்து வைத்த கௌசிகரின் மகனுக்கும் இறுதியில் நற்கதி கிடைத்தது.

தலபுராணம் மேலும் கூறுகிறது

...கோணேச சுவாமியின் சந்நிதியில் திருப்பணி செய்ய நினைத்தவர் சிவனாவார். திருப்பணிக்கென ஒரு கூடை மண்ணேனும் கல்லேனும் கொடுத்தவர் கயிலை யிற் சிவனாய் விளங்குவார். கோணேசர் ஆலயத்தில் புல் பூண்டுகளைக் களைபவர் செல்வத்துடன் வாழ்ந்து முக்தராவார்...

ஸ்ரீ கோணேசர் ஆலயத்தில் நற்பணி புரிந்துவரும் இருவரை நான் கண்டேன். புலவர் கோ. சுப்பிரமணியன், வார வழிப்பாட்டுச் சங்கத்தின் செயலராக அக் கோவி லில் தெய்விக மணம் கமழச் செய்து வருகிறார். அடியார் களுடன் தினமும் தேவாரத் திருப்புகழ் பாராயணங்கள் செய்து வருகிறார். தலத்திற்குரிய பாடல்களைச் சுவர்

களில் எழுதி வைத்துள்ளார். திருச்சந்நிதிகளின் பெயர் களை எழுதி, விளக்கங்களும் குறித்துள்ளார். வார வழி பாட்டுக் கழகத்தினர் திருவிளக்குகளுக்கு ஏற்பாடு செய்துள்ளனர். நிர்வாக அதிகாரி மீனாட்சிசுந்தரத்தின் ஒத்துழைப்பு இவர்களது நற்பணிகளுக்குத் தூண்டு கோலாக அமைந்துள்ளதையும் அறிந்து மகிழ்ந்தேன்.

வள்ளியம்மை என்ற பக்தை அங்கு தெய்வத் தொண்டு புரிந்து வருவதைக் கண்டு புளகிதம் அடைந் தேன். இருவேளையும் கோயிலைப் பெருக்கி, நீர் விட்டுக் கழுவி, கோலம் போட்டு, சாம்பிராணி தூபம் காட்டி, பம்பரமாக, ஆனால் அடக்கமாகத் தனது அலுவல்களைக் கவனித்து வருகிறார் அந்த அம்மையார். இம்மாதிரி, ஆண்டவன் சேவைக்காகச் சிறிது நேரம் ஒதுக்கக் கூடிய வர்கள் ஊருக்கு இருவர் இருந்து விட்டால் போதும்; நமது கோயில்கள் 'பளிச்' சென்றிருக்கும். சுயநலம் சிறிது மின்றித் தங்களை அர்ப்பணித்துக் கொள்பவர்களால் தான் எந்தப் பொதுப் பணியுமே சிறக்க முடியும்.

அருணகிரியார் இத் தலத்திற்கு வந்து கோணேசர் ஆலயத்தில் உறையும் ஸ்ரீ முருகப் பெருமானை 'குடவா யிற்பதியுறைவோனே' என்று அன்புடன் விளித்து, 'குடசை மாநகர் வாழ்வுற மேவியப் பெருமாளே' என்று போற்றிப் புகழ்ந்திருக்கிறார். திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள், 'குடவாயில்தனில் நிலவும் பெருங் கோயி னிலாயவனே' என்று ஸ்ரீ கோணேசரைத் தேவாரப் பதி கங்களால் பாமாலை சூட்டி வழிபட்டிருக்கிறார். புகழ் மண்டிக் கிடக்கும் பெருங்கோயிலான இந்த அருங் கோயில் பண்டையச் சிறப்புக்களையெல்லாம் மீண்டும் பெற்று, பூரணப் பொலிவோடு திகழப் போகும் நாட் களைக் கற்பனையில் கண்டு களித்துப் பயணத்தைத் தொடரும்போது மனத்தில் கிளர்ந்தெழுந்த ஒரிரு எண் ணங்களைப் பக்தர்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்.

இரண்டொரு சந்நிதிகளில் அபிஷேகம் செய்த நீர் வெளியே பெருகி வந்ததையும், தரிசனம் செய்ய வந்தவர் களின் காலில் அது பட்டதையும் காண நேர்ந்தது. இது தவிர்க்கப்பட வேண்டும். புனிதமானவை என்று நாம் கருதுபவை கவனத்தோடு கண்காணிக்கப்படாவிட்டால், பக்தியின் அடித்தளமே தகர்க்கப்பட்டுவிடும். ஆலயத்தை நிர்வசிப்பவர்கள், சொத்துக்களைச் சேர்ப்பதிலும், அச் சொத்துக்களைப் பாதுகாப்பதிலும் மட்டுமே கவனம் செலுத்தினால் போதாது. ஆலய வழிபாட்டின் சிறப்புக் களை உணர்ந்து, மக்களின் இறையுணர்வையும் பேணிக் காப்பவர்களாக இருக்கவேண்டும்.

குடவாசல் ஆலயத்தில் ஸ்ரீ கருடன் சிவலிங்கத்தை வழிபடுவதுபோல் ஒரு கருங்கல் சிலையும், அதற்கென ஒரு தனி சந்நிதியும் அமைக்கப்பட்டு வெளியில் அதைப் பற்றிய தல புராண விளக்கமும் எழுதி வைக்கப்படுவது மிக மிகப் பொருத்தமாக இருக்கும் என்று கருதுகிறேன். ஸ்ரீ கோணேசப் பெருமானை அமிருதத்தால் அபிஷேகம் செய்து வழிபட்ட இந்தக் கருடாழ்வாருக்கு ஆலயத்தில் சிறப்பிடம் தரப்படவேண்டாமா ?

'பெருங்கோயில்' என்று சம்பந்தர் வியந்து பாடிய இக்கோயிலுக்கு ராஜகோபுரம் இல்லாதது ஒரு பெருங் குறையாகத் தோன்றுகிறது. பெரிய கோபுரம் எழுப்பு வதற்கான அடித்தளம் ஏற்கனவே அமைக்கப்பட்டியிருப் பதால் அடுத்த குடமுழுக்கின் போது, பக்தர்கள் இந்தக் குறையை நிச்சயம் தீர்த்து வைப்பார்கள் என்ற நம்பிக்கை யோடு இங்கிருந்து புறப்படுவோம்.

தலபுராணத்தில், குடவாயில் ஸ்ரீ கோணேசர் சுவாமி ஆலயத்தின் தென்மேற்கில் 'ஞானமளிக்கும் சிவபெரு மான் அமர்ந்திருக்கிறார்' என்று படித்ததும் அவரைத் தரிசிக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றவே, அக் கோயில் எங்கிருக்கிறது என்று விசாரித்தேன். முன்பு

குடவாசல் ஆலயத்தில் அர்ச்சகராக இருந்த முதியவரான சுப்பிரமணிய குருக்கள் அது 'ஆலங்குடி' யைக் குறிக்கிறது என்றும், அதற்கு 'திருஇரும்பூளை' என்ற தேவாரப் பெயர் உண்டென்றும், ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருமானால் பாடல்பெற்ற தலமென்றும் கூறுனார். ஆலங்குடிக்கு எப்படிச் சொல்வது என்று கேட்டபோது, கும்பகோணத்திலிருந்து மன்னார்குடி செல்லும் பாதையில், நீடாமங்கலத்தை அடுத்துள்ளது அத்தலம் என்று ஒருவர் வழியைச் சொன்னார். ஆனால், ஆலங்குடிக்குச் செல்வதற்கு முன், நாம் வேறு சில ஆலயங்களைத் தரிசித்து அவற்றின் புராண வரலாற்றுகளைத் தெரிந்து கொள்வோம். சற்றும் எதிர்பாராமல் கிடைத்த ஆலங்குடியைப் பற்றிய மிகப் பழைய தல புராண நூலையும் புரட்டுவோம். ஏன் என்று கேட்பவர்களுக்காக நடந்ததை அப்படியே கூறுகிறேன்.

## கொரடாச்சேரி

குடவாயிலிருந்து புறப்படுவதற்கு முன் ஓர் உள்ளூர் அன்பரிடம் 'அருகில் வேறு ஏதாவது கோயில் இருக்கிறதா ?' என்று விசாரித்தேன். அவர் கொரடாச்சேரியில் ஒரு சிவன் கோயில் இருப்பதாகவும், ஆனால் தாம் பார்த்ததில்லை என்றும் கூறினார். 'நாங்கள் தரிசித்துவிட்டு வந்து உங்களுக்குச் சொல்லுகிறோம்' என்று கூறிவிட்டுப் புறப்பட்டோம்.

வடபாதிமங்கலம் செல்லும் பாதையில் பன்னிரண்டு கிலோ மீட்டர் சென்று கொரடாச்சேரியை அடைந்தோம்

ஆனால், கோயில் பூட்டியிருந்தது. நல்லவேளையாக அருகிலேயே தியாகராஜ குருக்களின் இல்லம் இருந்த தால், அவர் சாவியை எடுத்து வந்து திறந்து தரிசனம் செய்து வைத்தார்.

பக்தர்கள் புழக்கம் அதிகமில்லாத மிகச் சாதாரண நிலையிருக்கிறது அக்கோயில். பெருமானின் திருநாமம், பஞ்சநதீச்வரர். அம்பிகை, தர்மசம்வர்த்தனி.

''அருகில் புகழ்பெற்ற கோயில் ஏதாவது இருக் கிறதா?" என்று அவரிடமும் கேட்டேன்.

"செல்லூருக்குப் பக்கத்தில் திருக்களம்புதூர் கோயில் இருக்கிறது. திருக்கொள்ளம்பூதூர் என்பதுதான் சரியான பெயர். வெட்டாற்றின் கிழக்குக் கரையிலிருக்கிறது அது" என்று கூறி அர்ச்சகர் எங்களுக்கு விடை கொடுத்து அனுப்பினார்.

## திருக்கொள்ளம்பூதூர்

சோழ நாட்டில் தேவாரப் பாடல் பெற்றுள்ள தலங்கள் மொத்தம் 274. அவற்றில் காவிரிக்குத் தென் கரையில் 127 தலங்களில் 113-வது தலமாக அமைந்துள்ளது திருக் கொள்ளம்பூதூர். திருஞானசம்பந்தரின் தேவாரம் பெற்றச் சிறப்புக் கொண்ட ஆலயம் அது.

கொரடாச்சேரிக்கும் குடவாசலுக்குமிடையேயுள்ள செல்லூரிலிருந்து அரை மைலில் இக்கோயில் உள்ளது. கும்பகோணம்—கொரடாச்சேரி பஸ்ஸில், செல்லூரில் இறங்கி இங்கு செல்ல வேண்டும். அமைதியான கிராமம்

கிராமத்திற்கு மேற்கே வெட்டாறு ஓடுகிறது. அதற்கு முள்ளியாறு, அகத்திய நதி, ஓடம்போக்கி என்ற புராணப் பெயர்கள் உண்டு. இவ்வூருக்குக் கிழக்கே திருவாரூரும், தெற்கில் திருப்பூவனூரும், மேற்கில் ஆலங் குடியும், வடக்கில் திருக்குடவாயிலும் அமைந்திருக் கின்றன.

இத்தலத்திற்கு வில்வவனம், பிரமவனம், பஞ்சாக்கர புரம், காண்டீபவனம் என்று யுகத்திற்கு ஒரு பெயராய் வழங்கப்பட்டு வந்திருக்கிறது.

வெளியுலகிற்கு அதிகம் அறிமுகமாகாத இந்தக் கிராமத்தில், இத்தனை பெரிய கருங்கல் கோயில் ஒன்று இருப்பதைக் கண்டதும் சற்று ஆச்சரியமாகத்தான் இருந்தது. ஆனால், ஐம்பது வருடங்களுக்கு முன் நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்த ஒருவர் ஆலயத்தைப் புதுப்பித்து, கருங்கல் மண்டபங்களும் சிற்பத் தூண்களும் அமைத்துக் குடமுழுக்கு செய்வித்தார் என்று அறிந்த போது வியப்பு ஏற்படவில்லை. சைவமும் தமிழும் செழிக்க நகரத்தார் செய்துள்ள, செய்து வரும் திருத் தொண்டு பெருமைக்குரியதன்றோ? இக் கோயில் திருப் பணியை நச்சாந்துப்படி பெ. ராம. இராமன் செட்டியார், பெ. ராமலெட்சுமணன் செட்டியார் குடும்பத்தினர் மேற் கொண்டனர். அவர்களது திருவுருவச் சிலைகளை ஆலய மண்டபத்தில் காண்கிறோம். அவர்களது வழித்தோன் றல்கள் 1979-ஆம் ஆண்டில் திருப்பணிகள் செய்து மீண்டும் ஒரு குடமுழுக்கு செய்வித்திருக்கின்றனர்.

சுவாமியின் திருநாமம் வில்வாரண்யேச்வரர். அம்பி கையின் பெயர் சௌந்தரநாயகி. வில்வவனநாதர், அழகு நாச்சியார் என்றும் வழங்கப்படுகிறார்கள்.

இக் கோயிலில் ஐப்பசி மாதம் தீபாவளி அமாவா சைக்கு மறு நாள் வெட்டாற்றில் நடைபெறும் ஓட விழா தனிச் சிறப்புப் பெற்றது.

அன்று ஸ்ரீ திருஞான சம்பந்தப் பெருமான், புரண்டோடும் வெள்ளத்தைப் பொருட்படுத்தாமல் அடியார்களுடன் ஓடம் ஓட்டி, இக் கரைக்கு வந்து சிவபெருமானைத் தரிசிக்கிறார். அக் காட்சியை ஆயிரக் கணக்கான பக்தர்கள் தரிசித்துப் புண்ணியம் பெறுகின்றனர்.

வெட்டாற்றில் சம்பந்தப் பெருமான் ஓடம் செலுத்தி வரக் காரணம் என்ன?

திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் சோழ நாட்டுத் திருத்தலங்களைத் தரிசித்துக் கொண்டு தேவாரத் திருப் பதிகங்களால் சிவபக்தியை வளர்த்து, தெய்வத் தமிழையும் வளமுறச் செய்யும் பணியில் வேதாரண்யம் என்ற திருமறைக்காட்டிற்கு வருகிறார். அங்கு அப்பர் பெருமானோடு சேர்ந்து, இறைவன் புகழ் ஓங்கச் செய்து கொண்டிருக்கிறார். அச்சமயம் பாண்டிய நாட்டிலிருந்து ஞானசம்பந்தப் பெருமானுக்கு அழைப்பு வருகிறது. கூன்பாண்டியன் சமண சமயத்தை மேற்கொண்டதால் அங்கு மக்கள் சைவ சமயத்தைத் துறந்து, சமணத்தைத் தழுவிக் கொண்டிருக்கின்றனர் என்ற செய்தி பரசமயக் கோளரியான சம்பந்தரை வாட்டி வதைக்கிறது. துடி துடித்துப் புறப்படுகிறார். ஆனால், அங்கு செல்வது சரியல்ல என்று சம்பந்தரிடம் நாவுக்கரசர் நயம்பட எடுத்துரைக்கிறார். சமணரின் பொல்லாத வஞ்சனை மிக்க சூழ்ச்சிகளுக்குச் சிறுவர் பலியாகி விடுவாரோ என்ற அச்சம் அவருக்கு. 'நாளும் கோளும் நல்ல நிலையில் இல்லை. தற்போது பாண்டிய நாடு செல்ல வேண்டாம்' என்று எச்சரிக்கிறார். முருகப் பெருமானின் மறு அவதாரமாகக் கருதப்படும் ஞானசம்பந்தர், தகப்பன்சாமியாக இருந்து, தகப்பன் போன்ற அப்பர் சுவாமிகளுக்கு 'உபதேசம்' செய்கிறார். சிவபெருமானது தெய்வ அருளோடு எப்பணியில் இறங்கினாலும் அது நல்லபடி

யாகவே முடியும் என்றும், அம்மையப்பனின் கருணை யிருந்து விட்டால் நாளும் கோளும் நமக்கு ஒரு தீங்கும் செய்ய முடியாது என்றும் கூறுகிறார். 'வேயுறு தோளி பங்கன்' என்ற பதிகங்கள் பிறக்கின்றன. பின்னர், மறைக் காட்டுப் பெருமானை வணங்கி, பாண்டிய நாடு சென்று, சமணர்களை வென்று, சிவசமயத்தை நிலை நாட்டிவிட்டு, வாகை சூடி மீண்டும் சோழ நாடு திரும்புகிறார். வெட்டாறு என்ற முள்ளியாற்றங்கரைக்கு வருகிறார் அவர்.

அக்கரையில் உள்ள திருக்கொள்ளம் பூதூரில் உறை யும் ஸ்ரீ வில்வவனநாதர் ஆலயத்தின் கோபுரம் கண் ணுக்குத் தெரிகிறது. அண்ணலின் திருவடி தொழ வேண் டும் என்ற ஆவல் மேலிடுகிறது. ஆனால், நந்தனார் சிவலோகநாதனைத் தரிசிப்பதற்குத் தடையாக நந்தி குறுக்கே படுத்திருந்து வழியை மறைத்தது போல், வெள் ளம் புரண்டோடிய வெட்டாறு, சம்பந்தரின் வேட்கைக் குக் குறுக்கே நின்றது. பயங்கரமான வெள்ளப் பெருக்கு சுழித்துச் சுழன்றோடும் புனலில் சந்தனம், அகில், தேக்கு போன்ற மரங்கள் வேகமாக அடித்துக் கொண்டு போகின் றன. ஓடக்காரர்கள் வெள்ளம் அடங்கிய பிறகு செல்ல லாம் என்று ஓடங்களைக் கரையில் நிறுத்திவிட்டு இல்லம் திரும்பி விட்டனர். அக்கரைக்கு எப்படிச் செல்வது? ஸ்ரீ விஸ்வாரண்யேச்வரரைத் தரிசித்தாக வேண்டுமே!

ஒரு கணம் சிவபெருமானைத் தியானித்த சம்பந்தர், கரையிலிருந்த ஓர் ஓடத்தில் ஏறிக் கொண்டார். உடன் வந்த மெய்யடியார்களையும் ஏறிக் கொள்ளச் சொன்னார். சுற்றிலும் தேடிப் பார்த்தார். அங்கு ஓடக் கோலைக் காணவில்லை. சிறிதும் கவலைப் படவில்லை. தம் நாவின் வலிமையையே துடுப்பாக நினைத்து, அண்ண லின் புகழ் பாடத் தொடங்கினார்.

கொட்டமே கமழுங் கொள்ளம்பூதூர்
நட்டமாடிய நற்பனை யுள்கச்
செல்லவுந்துக சிந்தை யார்தொழ
நல்குமாறரு ணம்பனே......

ஒவ்வொன்றாகப் பதினோரு பதிகங்கள் பிறக்கின்றன. அப் பாமாலைகள் கொள்ளம்பூதூர் கொன்றைசேர் சடையானுக்கு மலர் மாலையாக விழுகின்றன. மாதொருபாகனின் உள்ளம் மகிழ்கிறது; வெள்ளம் வடிகிறது. ஞானசம்பந்தர் இக்கரை வந்து சேருகிறார். சிவபெருமான் பார்வதியுடன் ரிஷப வாகனத்தில் அவருக்குக் காட்சித் தருகிறார். அங்கு குழுமியிருந்த அத்தனை பேருக்கும் புண்ணியம் கிட்டுகிறது.

சீகாழி தோணியப்பர் தான், சம்பந்தருக்குத் தோணியாகி அவரைத் கரை சேர்த்தார். சம்பந்தப் பெருமானின் பாடல்கள் அவருக்கு மட்டுமா துடுப்பாக இருந்து உதவின...? அந்த ஞானப் பாடல்கள், நம்மையெல்லாம் பிறவிப் பெருங்கடலைக் கடந்து, இனி பிறவாப் பெருவீடு சேர்க்கும் ஓடங்களாகும் என்பதை திருக்கொள்ளம்பூதூர் திருத்தலம் பெருமையோடு பறைசாற்றிக் கொண்டிருக்கிறது.

இப்பிறவியில் மன நிம்மதி நாடுவோர் அக்கிராமத்திற்குச் செல்லாம். சம்பந்தர் வாக்குப்படி இயற்கையெழில் பூத்துக் குலுங்கிய அப்பகுதியில் தற்போது இயற்கை வளம் வறண்டு போயிருந்தாலும், எங்கும் தெய்வமணம் கமழ்கிறது. மறுபிறவி வேண்டாதார், அங்கு ஆண்டு தோறும் ஐப்பசி மாதத்தில் நடைபெறும் ஓடத் திருவிழாவைக் கண்டு உய்யலாம்.

திருக்கொள்ளம்பூதூரிலிருந்து பார்த்தால் வெட்டாற்றின் மேல் கரையில் ஒரு சிறு கட்டடம் தெரிகிறது. அதை 'நம்பர் கோயில்' என்கிறார்கள். திருஞானசம்பந்த மூர்த்தி முன்பு அங்கு வந்து தங்கியதன் அடையாளமாக

அது எழுதப்பட்டிருக்கிறது. அந்தப் பகுதிக்கு வேடம்பூர் என்று பெயர்.

தீபாவளி அமாவாசையின் முதல் பாகத்தில் சந்திரசேகரும் கங்கையம்மனும் வெட்டாற்றுக்குச் சென்று தீர்த்தம் கொடுக்கிறார்கள். மறுநாள் ஓடத் திருவிழா. அன்று திருஞானசம்பந்தா உற்சவமூர்த்தி வடிவில் கோயிலிருந்து புறப்பட்டு வெட்டாற்றின் மேல் கரையில் உள்ள நம்பர் கோயிலில் எழுந்தருளுகிறார். இரவில், அடியார்களுடன் வெட்டாற்றில் சம்பந்தர் ஓடம் விடும் காட்சி அற்புத மாட்சியுடன் திகழும். அச்சமயம் வாத்தியங்கள் முழங்குவதும், திருக்கொள்ளம்பூதூர் தேவாரப் பாடல்கள் ஒலிப்பதும் வானோரை பூவுலகத்திற்கே வரவழைத்து விடுகின்றன. ஸ்ரீ வில்வாரண்யேச்வரர், சௌந்தரிய நாயகியுடன் விடையேறி வந்து, சம்பந்தருக்கும் பிறருக்கும் தரிசனம் தந்து அருள் பாலிக்கிறார்.

திருஞான சம்பந்தரின் தொடர்பு இத்திருத்தலத்தின் பெருமையைச் சிறப்பாக விளங்கச் செய்வதோடு, வேறு புராணக் கதைகளும் இதன் மகிமையை மணங்கமழச் செய்கின்றன.

சில காலம் பிரமன் தன் படைப்புத் தொழிலை இழந்து, செயலற்று இருந்தபோது, சிவபூஜைக்காகத் தக்கதோர் இடம் தேடிச் சோழ நாடு வருகிறார். இறுதியில் வில்வலனமாகிய திருக்கொள்ளம்பூதூர் வந்து, ஒரு வில்வவரத்தடியில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து, தீவிர சிவவழிபாட்டில் ஈடுபடுகிறார். அதன் பலனாக அவருக்குத் தரிசனம் தந்த சிவபெருமான், பிரமனுக்குப் படைப்புத் தொழிலை மீட்டுத் தந்ததோடு, அவர் வழிபட்ட சிவலிங்கத்தில் சர்வ சக்திகளோடு என்றென்றும் உறைவதாக வாக்களித்து விட்டு மறைகிறார். ஆலயத்திற்கு முன்புறம் பிரமன் ஏற்படுத்திய திருக்குளம். பிரமதீர்த்தம் என்ற பெயர் பெற்றது. இத் திருத்தலம் பிரமபுரமாயிற்று.

இங்கு தமிழ் முனிவரான அகத்திய மகரிஷி தவமியற்றியிருக்கிறார். ஆலயத்திற்கு வட திசையில், அகத்திய தீர்த்தத்தை உண்டு பண்ணி, சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து அவரை வழிபட்டு, பல மந்திர உபதேசங்கள் பெற்றார். அகத்திய முனிவருடன் தொடர்பு கொண்டதால் வெட்டாறு இவ்விடத்தில் 'அகத்திய காவேரி' யாக விளங்குகிறது,

பஞ்சபாண்டவர்களில் ஒருவனான அர்ஜுனனும் இங்கு சிவபெருமானின் அருளைப் பெற்றான். அதனால் இங்குள்ள ஒரு குளத்திற்கு 'அர்ஜுனதீர்த்தம்' என்றும் இத்தலம் 'காண்டீபவனம்' என்றும் அழைக்கப்படுகிறது

புராண பெருமை மட்டுமின்றி, இயற்கை வளம் நிறைந்து பெருமையடைந்த தலம் இது. திருஞானசம்பந்தரின் தேவாரத்தில் காணும் இயற்கை வர்ணனைகளைப் படிக்கும்போது......

'இத்தலத்தில் எந்நேரமும் நறுமணம் கமழ்ந்திருக்கும்; கழனிகளால் சூழப் பெற்றிருக்கும் ; குலைகள் செறிந்த தென்னை மரங்கள் மண்டிக் கிடக்கும் ; குவளை மலர்கள் மலர்ந்திருக்கும் ; பொன் நிறக் கொன்றை மலர்கள் பூத்திருக்கும்; ஓடம் வந்தணையப் பெற்றிருக்கும்; குரங்குக் கூட்டம் குதித்துக் கும்மாளம் போடும்; சோலைகளும், வரால் மீன்கள் துள்ளி விளையாடும்; நீர்வளமும் மிகுந்திருக்கும் ; நீர்வளம் மிக்க வயல்கள் கண்ணுக் கட்டிய வரை பரந்திருக்கும்' ஆகா... !

இப்போது தஞ்சை மாவட்டத்தைச் சுற்றி வரும் போது அக்காலத்தில் உண்மையாகவே இவ்வாறெல்லாம் இருந்ததா. அல்லது கவி நயத்திற்காக எல்லாத் தலங்களையும் இப்படியெல்லாம் பாடி வைத்தார்களா என்ற சந்தேகம் எழத்தான் செய்கிறது !

சுற்றுப்புறங்கள் பெரிதும் மாறியிருந்தாலும் ஆலயத்தில் வளம் கொழிக்கிறது. தினம் ஆறுகால பூஜைகளும் மாதாந்திர விழாக்களும் முறையோடு நடைபெறுகின்றன தென்புறம் லெ.அ.வயி. அண்ணாமலைச் செட்டியாரின் பசுபடமும், பெ. ராமநாதன் செட்டியாரின் நந்தவனமும் நல்ல உள்ளங்களுக்கு அடையாளமாக அமைந்துள்ளன. திருக்குளம் பழுது பார்க்கப்பட வேண்டிய நிலையிலுள்ளது. சிவலிங்கம் சிறிய திருமேனியானாலும் உற்சவ விக்ரகங்களெல்லாம் பெரிதாக இருக்கின்றன. அதற்குரிய கோஷ்டத்தில் துர்க்கை இல்லாமல் வெற்றிடமாக இருக்கிறது.

# திருவிடைவாயில்

திருக்கொள்ளம்பூதூரிலிருந்து திருவிடைவாயிலுக்குச் சென்றோம். கொரடாச்சேரியிலிருந்து ஒரு மையில், கூத்தாநல்லூர் செல்லும் பாதையில், பாண்டவாய் ஆற்றின் தென்கரையில் உள்ளது அத்தலம். சரியான வழியை விசாரித்துக்கொண்டு போவதுதான் நல்லது அப்படி அங்கு போய்ச் சேர்ந்தாலும் அர்ச்சகர் இருப்பார் என்பது நிச்சயமில்லை. அவர் இருக்குமிடத்தைக் கொரடாச்சேரியில் விசாரித்துத் தெரிந்து கொண்டு அவரை அழைத்துச் செல்ல வேண்டும். கொரடாச்சேரி காமராஜர் சாலையிலுள்ள அரிசி மண்டி வேம்பியனிடம் சென்றால் அர்ச்சருக்குச் சொல்லியனுப்பி, கோயிலைத் திறக்கச்சொல்லி நமக்கு தரிசனம் செய்து வைப்பார். நாங்கள் அப்படித்தான் செய்தோம்.

திருவிடைவாயில் சம்பந்தர் தேவாரம் பெற்றச் சிறப்புடையது. திருக்கொள்ளம்பூதூர் தேவாரத்திற்கு அடுத்த

தேவாரம். அந்தப் பதினோரு பாடல்களும் மண்டபம் தின் வெளிச்சுற்றுச் சுவரில் பொறித்து வைக்கப்பட்டுள் ளன. பாடல்கள் பொறிக்கப்பட்ட கற்கள் அக்கோயி லிலேயே இருந்திருக்கின்றன. முன்பு நல்ல நிலையிருந்த இக்கோயில் கால வெள்ளத்தில் கரைந்து, பாழடைந்து, பூஜை நின்று போய் முட்புதருக்குள் புதைந்து போயிருக் கிறது. 1917-ல் இக்கோயிலைக் கண்டுபிடித்தவர் திருக் களர் மு. சுவாமிநாத உபாத்தியாயர்.

இந்த விவரம் கோயிலுக்குச் சென்றபோது எனக்கு கிடைக்கவில்லை. அது 1917-ல் கண்டுபிடிக்கப்பட்ட தாகக் கூறினார்களே தவிர, யாரால், எப்படிக் கண்டு பிடிக்கப்பட்டது என்று அறிய முடியவில்லை. ஒரு மாதம் கழித்து நான் கும்பகோணம் சென்றிருந்தபோது, தன் சொந்தத் தொழிலைவிடத் தொல்பொருள் ஆராய்ச் சிக்கே அதிக நேரத்தைச் செலவிட்டுக் கொண்டிருக்கும் அன்பர் என். சேதுராமன், தான் சேர்த்து வைத்திருக்கும் பல ஆலயங்களின் தலபுராணங்களைப் பெட்டி நிறைய அடைத்து என்னிடம் கொடுத்துவிட்டு, "இதோ, உங் களுக்கு ஸ்பெஷலாக ஒரு பொக்கிஷம் வைத்திருக் கிறேன்" என்று தனி கவரில் போட்டு வைத்திருந்த ஒரு சிறு புத்தகத்தைக் காட்டினார். அது கந்தல் கந்தலாக இருந்தது. காகிதத்தைப் தொட்டபோது அப்பளம் போல் நொறுங்கியது.

"இது என்ன?" என்று கேட்டேன்.

"எங்குமே கிடைக்காத புத்தகம். கொரடாச் சேரிக்கு அருகில் திருவிடை வாசல் என்று ஒரு கோயில் இருக்கிறது. அதைக் கண்டுபிடித்தவரே வெளியிட்ட பிரசுரம். இந்தக் கோயிலை நீங்கள் அவசியம் பார்த்து எழுத வேண்டும்" என்றார்.

"நான் திட்டமிடாமல் அந்தக் கோயிலுக்குச் சென்ற மாதம் சென்றிருந்தேன்" என்றேன்.

ஆச்சரியத்துடன் என்னைப் பார்த்தார் சேதுராமன்.

"நான் அக்கோயிலைப் பார்த்தது அதிசயமில்லை. அதைப் பற்றிய விவரங்களை எனக்காகக் காப்பாற்றி வைத்ததுபோல், நீங்கள் தந்து உதவியிருக்கிறீர்களே, அதுதான் அதிசயம்" என்றேன் நான். ஒரு கணம் மௌனமாய் நின்றார் சேதுராமன்.

பன்னிரண்டு ஆண்டுகளாய்—ஆலய தரிசனக் கட்டுரைகள் எழுதத் தொடங்கியதிலிருந்து-நம்மையெல்லாம் இயக்கிக்]கொண்டிருக்கும் பேரருட்சக்தி ஏதுமே அறியாத எனக்குத் தக்க தருணத்தில் கைகொடுத்து உதவிய நிகழ்ச்சிகளை நினைத்து நினைத்து, நன்றியோடு நெஞ்சம் நெகிழ்ந்து கொண்டிருக்கும் நான், இத்தகைய பணியில் ஈடுபடுவோர் அனைவருக்குமே தெய்வத்தின் கருணை கிட்டும் என்பதைப் புரிந்து கொள்ள திரு. சேதுராமன் தந்த இந்தச் சிறு நூல் உதவியாயிருந்தது.

எழுபது ஆண்டுகளுக்கு முன் திருக்களர் மு. சுவாமிநாத உபாத்தியாயர் ஆலய தரிசனம் செய்து கொண்டிருந்தார். 'ஐயடிகள் காடவர்கோனாயனார்' இயற்றிய திருவெண்பா ஏழாவது பாடலில், பாண்டவாயாற்றின் தென்கரையிலிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கும் சிவத்தலத்தைத் தரிசிக்க எண்ணம் கொண்டார். காவலகுடி முதல், ஆற்றின் இறுதிவரை சென்று தேடிப் பார்த்தார். ஆனால், அவரால் அந்த ஆலயத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

'திருப்பாலைத்துறை' என்னும் சிவத்தலத்தில் அவர் தரிசனம் செய்துகொண்டிருந்தபோது, ஒருவர் 'திருவிடைவாசல் சென்றீர்களா ?' என்று கேட்டு, அங்கு செல்வதற்கான வழியையும் தெளிவாகக் கூறினார். பாண்டவாயாற்றின் தென்கரையோடு சிறிது தூரம் கிழக்கே சென்று

சாலையை விட்டுப் பிரிந்து கரையில் போகும் வண்டிப் பாதையோடு கிழக்கே அரை மைல் தொலைவு சென்று, பாலாக்குடியைக் கடந்து, தென்னந்தோப்பு, வெற்றிலைக் கொடிக்கால் மத்தியில் அக் கோயிலைத் தரிசித்தார்.

அங்கே கோயில் மூடப்பெற்று, வெடித்துச் சரிந்து, கதவுகளின்றி, பூசையின்றிக் காட்சி தந்தது. விநாயகர், மகாலிங்கம், தேவியார், தாண்டவ கணபதி, பைரவர், சூரியன், ஆதிசேஷன், திருஞானசம்பந்தர் முதலிய திருவுருவங்கள் இருந்தன. காட்டுப்பூனை, மரநாய், கீரிப்பிள்ளை, பாம்பு, வௌவால் முதலியவை குடியிருந்த அந்தக் காட்டினுள் மிகச் சிரமத்துடன் புகுந்து புறப்பட்டு அங்கிருந்த பல கல்வெட்டுக்களைப் பார்வையிட்டார். சம்பந்தரின் தேவாரப் பாடல்கள் அர்த்தமண்டபத்தின் தென்புறத்திலும், மகாமண்டபத்தின் மேல்புறத்திலும் பொறிக்கப்பட்டிருப்பதைக் கண்டார். ஆனால், செடிகளும் முட்புதர்களும் மண்டிக் கிடந்ததால் அவற்றைப் படிக்க முடியவில்லை. பின்னர், திருக்களர் வந்து நண்பர்களை அழைத்துச் சென்று, செடிகளை அகற்றி அப்பாடல்களைப் படித்தார். ஆறாம் பாடலில் எழுத்துச் சிதைவுகள் இருந்ததைக் கண்டார். அவற்றை நிறைவுபடுத்தி அச்சேற்றினார். ஆலயத்தைக் கண்ட விவரங்களையும், அப்பாடல்களையும் திருவாவடுதுறை மகாசந்நிதானத்துக்கு அனுப்பி வைத்தார்.

அற்புதத் தேவாரங்களைக் கண்ட ஆதீனகர்த்தர் கோயிலைச் சீர்படுத்தி, பூஜைகள் தொடங்கப் பொருள் உதவி செய்ய முன் வந்தார். அக்கோயிலில் மீண்டும் விளக்கெரிந்தது, நைவேத்திய ஆராதனைகள் தொடங்கின.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் 'விடைவாயே என்று இத்தலத்தை விளிக்கிறார். 'திருவிடைவாய்' என்பதுதான் திருவிடைவாசலாகியிருக்கிறது.

மறியார்கரத் தெந்தையும்
மாதுமையோடும்
பிறியாத பெம்மானுறையு
மிடமென்பர்
பொறிவாய் வண்டுதன்பூம்
பெடைபுல்கி
வெறியார் மலரிற்
றுயிலும் விடைவாயே

என்று திருவிடைவாயில் தேவாரம் தொடங்குகிறது.

இப்பதிகங்கள், மறைந்து போன தேவாரப் பதிகங்களைச் சேர்ந்தவையாகும். சுவாமிநாத உபாத்தியாயர் கண்டபோது இவற்றுக்குப் 'பண்ணடைவு' இல்லை. முன்னும் பின்னும் 'திருச்சிற்றம்பலம்' இல்லை. 'அடங்கன் முறை' இல்லை.

இப்பதிகங்களை முதன் முதலில் கண்டுபிடித்தது மூன்றாம் ராஜராஜ சோழன். தனது 18-வது ஆட்சியாண்டில் *(கி பி. 1234)* அவற்றைக் கருவறை தெற்குச் சுவரில் வெட்டிவைத்த மன்னனின் தெய்வீகப் பணியை நினைவு கூர்ந்து போற்றவேண்டும்.

அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவராகிய 'ஐயடிகள் காடவர் கோனாயனார்' இக்கோயிலில் திருப்பணி செய்து திருவெண்பா ஒன்று இயற்றியிருக்கிறார்.

மாண்டுவா யங்காவா முன்ன மடநெஞ்சே
வேண்டுவாயாகில்வி ரைந்தொல்லைப்பாண்டவாய்த்
தென்னிடைவாய் மேயசிவனார் திருநாம
நின்னிடைவாய் வைத்து நினை.

இந்த வெண்பா பதினோராம் திருமுறையிலிருக்கிறது. திருநாவுக்கரசு நாயனார் 'அடைவு' திருத்தாண்டகம் மூன்றாம் பாடலில் 'விடைவாய்க்குடி' என்று இத்தலத்தைக் குறிப்பிட்டிருக்றார்.

சுவாமியின் பெயர் புண்ணியகோடி நாதர். அம்பாளின் பெயர் அபிராமியம்மை. இத்தலம் 'விடையவன்' என்னும் சூரியகுலத்தரசன் உண்டு பண்ணியது. இடப தேவர், ஆதிசேஷன், அகத்திய முனிவர் அத்திரி முனிவர் முதலியோர் பூசித்தது.

பாடல் பெற்ற இத்தலம் இருக்குமிடத்தைத் தேடித் தரிசனத்திற்கு வருபவர்கள் குறைவாக இருக்கிறார்கள். கொரடாச்சேரியிலிருந்து திருவிடை வாசலுக்குச் செல்லும் பாதையைச் சீர்படுத்தி, ஒரு பேருந்தும் விட்டால் இத் தலத்திற்கு 'நல்ல காலம்' பிறக்க வழியுண்டு. இச்சிறு கிராமத்தில் ஸ்ரீ ரங்கநாதப் பெருமாள் கோவில் ஒன்றும் இருக்கிறது.

## பத்தூர்

குடவாசல் செல்லும் பாதையில் உள்ள பத்தூர் அபிவிருத்தீச்வரம் என்ற ஊர்களில் சிவன் கோயில்கள் இருப்பதாகவும், அவை சுந்தரமூர்த்தி நாயனாருடைய சரி தத்தோடு தொடர்புகொண்ட புராதனக் கோயில்கள் என்றும் கொரடாச்சேரி கோயில் அர்ச்சகர் தியாகராஜ குருக்கள் கூறியிருந்தது நினைவுக்கு வந்தது. எனவே, திருவிடைவாசலிருந்து திரும்பும்போது, கொரடாச்சேரியி

லிருந்து ஒரு கி.மீ. தொலைவிலுள்ள பத்தூருக்குச் சென்றோம். சாலையிலிருந்து சற்று இறங்கி, மண்பாதை வழியாக அக் கிராமத்திற்குச் செல்ல வேண்டும்.

முதலில் கண்ணில்பட்ட ஒரு பெண்மணியிடம், 'சிவன் கோயில் எங்கேயிருக்கிறது ?' என்று விசாரித்தோம். 'அதோ, அப்படிப் போங்க' என்று கையைக் காட்டி விட்டுப் போய்விட்டார் அந்த அம்மாள். அவர் காட்டிய திசையில் சென்றோம். வீடுகளுக்கிடையே புகுந்து புறப்பட்டோம். அடர்த்தியான முள் வேலிகளைக் கடந்து சென்றோம். கோயில் எதுவும் கண்ணில் தென்படவில்லை.

"இங்கே சிவன் கோயில் எங்கே இருக்கிறது ?" என்று அவ்வழியே வந்தவரிடம் கேட்டோம்.

"அதோ தெரிகிறதே, அதுதான்" என்று கையைக் காட்டினார்.

"இதுவா !" என்று கேட்டேன் ஆச்சரியத்துடன்.

"ஆமாம்" என்றார் அவர்.

"இது பாழடைந்து போயிருக்கிறதே. இந்தக் கிராமத்தில் வேறே ஏதாவது சிவன் கோயில் இருக்கிறதா ?" என்று கேட்டேன்.

"இல்லை. இது ஒரு கோயில்தான். இது இடிந்து போய்விட்டது. பூஜையெல்லாம் நின்று போய் பல வருஷங்கள் ஆகின்றன: பாம்புகள்தான் வாழ்ந்து கொண்டிருக்கின்றன. போன வாரம் நானே பத்து பதினைந்து பாம்புகளை அடித்தேன்" என்று கூறிவிட்டு அவர் சென்றுவிட்டார்!

முதலில் எனக்கு ஏற்பட்ட ஆச்சரியம் வருத்தமாக மாறியது. உள்ளம் பூகம்பமாக அதிர்ந்தது. ஒரு காலத்தில் கோயிலாக இருந்தது, தற்போது கருங்கல்களாகச் சிதறிக்

கிடந்தது. சிவலிங்கம் பூமியிலிருந்து பெயர்ந்து, மண் மேட்டில் தன்னந்தனியாகக் கிடந்தது. ஓரிரு இடங்களில் குழிகள் தோண்டப்பட்டிருந்தன. மண்டபங்கள் இடிந்து சரிந்து விழுந்திருந்தன. அந்தக் கோயிலில் மட்டும் திடீரென்று பூமி அதிர்ச்சி ஏற்பட்டு, அக்கோயிலைத் தலைகீழாகப் புரட்டி விட்ட மாதிரி தோன்றியது.

இந்தக் கோயிலுக்கு ஏன், எப்போது இப்படியொரு நிலை ஏற்பட்டது என்று அறியும் பொருட்டு, ஓரிருவரிடம் விசாரித்துப் பார்த்தேன். சரியான தகவல் கிடைக்க வில்லை.

அவ்விடத்தைச் சற்று ஆராய்ந்தோம். அகலமான பிராகாரங்களோடு அது ஒரு பெரிய கோயிலாக இருந் திருக்க வேண்டும் என்பது புரிந்தது. கோயில் நிலத்தில் நிறைய வீடுகள் எழும்பியிருப்பதை அறிய முடிந்தது. கோயிலை அடுத்து பெரிய குளம் இருக்கிறது. கோயில் மண்டபத் தூண்கள், அதன் கரையில் துணி துவைக்கும் கற்களாகப் படுத்திருப்பதைக் கண்டபோது நெஞ்சம் அழுதது.

## அபிவிருத்தீச்வரம்

பத்தூரிலிருந்து இரண்டு கி. மீ. தொலைவிலுள்ள அபிவிருத்தீச்வரம் என்ற கிராமத்திற்குச் சென்றோம். அங்குள்ள சிவன் கோயிலைக் கண்டபோது உள்ளம் மீண்டும் அழுதது. உள்ளே செடிகொடிகள் காடாக வளர்ந்திருந்தன. முட்புதர்கள் மண்டிக் கிடந்தன. விமான கோபுரங்களிலும் செடிகள் தழைத்திருந்தன.

மண்டபங்களில் வெடிப்புகள் காணப்பட்டன. 'இப் படியே விட்டால் இந்தக் கோயிலும் பத்தூர் கோயில் கதியைத்தான் அடையும் என்று உள்மனம் கூறிற்று.

அக்கம்பக்கத்தில் ஆள் அரவமே காணோம். எங்களைப் பார்த்துவிட்டு, தொடக்கப்பள்ளி ஆசிரியர் ஒருவர் வீட்டிலிருந்து வெளியே வந்தார். அவருக்குக் கோயிலைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. அசலூரைச் சேர்ந்தவராம். 'கோயிலுக்குப் பூஜை உண்டா?' என்று விசாரித்தேன். குருக்கள் இருப்பதாகக் கூறி, கோயிலை அடுத்துள்ள இடிந்துபோன ஒரு கூரை வீட்டைச் சுட்டிக் காட்டினார்.

அங்கு சென்றோம். இரு சிறுமிகளும் ஒரு பையனும் விளையாடிக்கொண்டிருந்தனர். "குருக்கள் இல்லையா?" என்று கேட்டேன்.

"அவர் எங்கப்பாதான். கும்பகோணத்துக்குப் போயிருக்காங்க."

"எப்போ வருவார்?"

"ராத்திரி பத்து மணிக்குத்தான் வருவார் துணிக் கடையிலே வேலை."

"பூஜையெல்லாம் யார் பண்ணுவாங்க?"

"காலையிலேயே பண்ணிவிட்டுப் போயிடுவார். இனிமே நாளைக்குத்தான்."

"கோயிலைத் திறந்து பார்க்க முடியுமா?"

"அம்மாகிட்டேதான் சாவியிருககு."

"அம்மா எங்கே?"

"தையல் கிளாசுக்குப் போயிருக்காங்க."

"எப்போ வருவாங்க?"

"சாயந்தரம்தான்."

"வீட்டுலே பெரியவங்க யாரும் இல்லியா?"

"இல்லே. நாங்க மட்டும்தான் தனியா இருக்கோம்."

மனம் துவண்டது. தஞ்சை மாவட்டத்தில், பத்தூர் போன்றும் அபிவிருத்தீச்வரம் போன்றும் கிராமங்கள் இருக்கும் என்று கற்பனையில்கூட நினைத்துப் பார்க்க முடியாது. நெற்களஞ்சியம் என்று பெயரெடுத்து, வளம் கொழிக்க வாழ்ந்து, ஆலயம் செழிக்கத் தர்மம் செய்த சமூதாயம் இந்நிலைக்கு வந்துவிட்ட பரிதாபத்தை நினைத்து வேதனைப்பட்டுக் கொண்டு நின்றபோது அப்பள்ளி ஆசிரியர் கடும் வெயிலில் பன்னீர் தெளித்தது போல் குளுமையான செய்தி ஒன்றைக் கூறினார்:

"இப்படியே சாலைவழியே போனீங்கன்னா, கடைத் தெரு பஸ் ஸ்டாண்டு வரும். அங்கே பலசரக்குக் கடை பன்னீர்செல்வம் யாருன்னு கேட்டா சொல்லுவாங்க. அவர் இந்தக் கோயிலின் முன்னாள் அறங்காவலர். அவருக்கு இதைப் பத்தின விவரங்களெல்லாம் தெரியும், சொல்லுவார்."

பாலைவனத்துச் சோலையாக எங்கள் மனத்தைக் குளிர்வித்த இந்தத் தகவலோடு அபிவிருத்தீச்வரம் கடைத் தெருவுக்குச் சென்றோம். அங்கு பன்னீர் செல்வத்தைச் சந்தித்து உரையாடினோம்.

பெரிய கம்பீரமான மீசையைக் கண்டதும் சற்றுப் பயந்து தயங்கிய நான், அவரது நல்ல உள்ளத்தையும் இனிய பண்பையும் ஒரே நொடியில் புரிந்துகொண்டேன். அந்தக் கோயிலின்மீது அவர் வைத்திருக்கும் பற்றும் பாசமும் என்னை மிகவும் கவர்ந்தன. தனது பதவிக் காலத்தில் கோயிலைப் பழுது பார்த்து, திருப்பணிகள் செய்து குடமுழுக்கும் செய்துவிட வேண்டும் என்று

தீவிரமாக இருந்ததைப் பற்றிக் கூறியபோது, அது நிறை வேறாமல் போனது குறித்து அவர் ஆதங்கப்படுவது தெரிந்தது.

''நீங்கள் இந்தக் கோயிலைத் தேடிக்கொண்டு வந்ததைப்பற்றி ரொம்பவும் மகிழ்ச்சி. நீங்கள் எழுதி' அதனால் இந்தக் கோயிலுக்கு நல்ல காலம் பிறந்தால் என்னை விடச் சந்தோஷப்படுகிறவன் வேறே யாரும் இருக்க மாட்டார்" என்று உளமாரக் கூறினார்.

"அதற்கு நீங்கள் உதவி புரிய வேண்டும்" என்றேன் நான்.

''என்ன சொல்லுங்க.''

''முதலில் சுவாமியைத் தரிசிக்க உதவ வேண்டும். இந்தக் கோயிலைப்பற்றிய தல வரலாறு ஏதாவது இருந்தால் கொடுக்க வேண்டும்.

''வீட்டில் ஒரு பழைய புத்தகம் இருப்பதாக நினைவு. அது ஆலங்குடி கோயிலைப் பற்றிய பழைய தலபுராணம். அதில் நம்ம ஊர்க் கோயிலைப் பற்றியும் விவரம் வருது. அதைத் தேடிப் பார்க்கிறேன். கிடைத்தால் உங்களுக்குத் தகவல் தருகிறேன். அடுத்த முறை இந்தப் பக்கம் வரும்போது எடுத்துக்கிட்டுப் போங்க. அப்போ கோயிலையும் திறந்து தரிசனம் செய்யலாம்" என்றுகூறி எங்களுக்கு விடை தந்து அனுப்பினார் பன்னீர்செல்வம்.

பத்து நாட்களுக்கெல்லாம் அவரிடமிருந்து வந்த கடிதத்தில் தல புராண நூல் கிடைத்துவிட்டதாகவும் எப்போது வேண்டுமானாலும் நேரில் வந்து பெற்றுக் கொள்ளலாம் என்றும் தெரிவித்திருந்தார். இரண்டு வாரங்களுக்குள் அப்பகுதிக்கு மீண்டும் சென்று அவரை நேரில் சந்தித்துப் புத்தகத்தைப் பெற்றுக் கொண்டதோடு, அபிவிருத்தீச்வரம் ஆலயத்தையும் சுற்றிப் பார்த்தேன்.

சுவாமியின் திருநாமம் அபிவிருத்தீச்வரர், அம்பாள் சௌந்தர்யநாயகி, அப்பனும் அம்மையும் கேட்பாரற்றிருக்கிறார்கள், பாவம்! சுவாமிக்கோ ஒரு குடம் நீர் அபிஷேகமாவது கிடைக்கிறது. அம்பிகையோ நீரோ, தைலமோ இன்றி, ஒட்டடையே விதானமாக, அழுக்கேறிய கந்தல் ஆடையுடன் அநாதையாக நிற்கிறாள்!

"இதோ பாருங்க, பழுது பார்ப்பதற்காக நான் கொண்டு வந்து சேர்த்த மணலும் கல்லும் அப்படியே இருக்குது. திருப்பணி வேலை தொடங்கற வழியாகக் காணோம்" என்று அழமாட்டாத குறையாகக் கூறினார் அன்பர்.

"இப்ப கோயில் எப்படியிருந்தாலும், இந்தக் கோயில்லே ஒரு விசேஷம் இருக்குங்க. இங்கே 'பெரிய நங்கை'ங்கிற செடி நிறைய கிடக்கு. ரொம்ப அபூர்வம். இது விஷக்கடிக்கு பெயர்போன மூலிகை. வைத்தியர்களுக்குத் தெரிஞ்சா எடுத்துக்கிட்டு போவாங்க. எழுதி வையுங்க. அப்படியாவது இங்கே நாலு பேர் வந்து போவட்டும்" என்றார் அவர், சிரித்துக் கொண்டே. பின்னர் அவ்வூர் காளியம்மன் கோயிலுக்கு எங்களை அழைத்துச் சென்றார். புதிய கருவறையுடன் அது புதுப்பிக்கப்படுவதைக் காட்டினார். பெரிய முயற்சி செய்து ஊரார் ஒத்துழைப்புடன் சிறிய அளவில் தெய்வப் பணி புரிந்து கொண்டிருக்கும் அன்பரிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டோம்.

பன்னீர்செல்வம், பெருந்தனமாக எனக்களித்த காசியாரண்ய மகாத்மியத்தைப் படித்த பின்னர்தான் பத்தூர், அபிவிருத்தீச்வரர் ஆலயங்களின் பெருமை எனக்குப் புரிந்தது. குடவாசலின் தென்மேற்கில் அமர்ந்து, ஞானமளித்துக் கொண்டிருக்கும் சிவபெருமானைத் தேடிக் கொண்டு சென்றவனுக்குப் புது தரிசனங்களும் புது விளக்கங்களும் கிடைத்தது நற்பேறன்றோ!

ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள், தமது மெய்யடியார் களுடன் சோழநாட்டுச் சிவத்தலங்களைத் தரிசித்து, சிவப்பதிகங்களால் சிவபெருமானைத் துதித்துக் கொண்டே வருகிறார். காவிரிக்குத் தென்கரையிலுள்ள ஆலங்குடி என்ற காசியாரண்யம் செல்ல வேண்டுமென்று அவருக்கு அவா மேலிடுகிறது. வெட்டாற்றைக் கடந் தால்தான் அங்கு செல்ல முடியும். ஆனால் வெட்டாறு, காட்டாறாகச் சீறிப்பாய்ந்து கொண்டிருக்கிறது. கரை புரண்டோடும் வெள்ளம் தணிவது எப்போது? அக்கரை சேர்வது எப்போது?

சுந்தரரும் பிறரும் செய்வதறியாது திகைத்துக் கொண்டிருக்கும் தருணத்தில், கையில் பற்றுக்கோலுடன் அங்கு ஓர் ஓடக்காரன் வருகிறான்:

"சிவபக்தரே, கவலைப்படாதீர்கள். உங்கள் அனை வரையும் அக்கரை கொண்டுபோய்ச் சேர்க்கும் பொறுப்பை அடியேன் ஏற்றுக் கொள்கிறேன். காசி யாரண்யத்திலுள்ள ஆபத்சகாயருக்கும் தட்சிணாமூர்த் திக்கும் நான் அடிமை. எனது வருமானத்தின் பெரும் பங்கை அவர்களுடைய சேவைக்கே அர்ப்பணித்து விடுகிறேன். இதோ இந்த நந்தவனத்தை நானே பராமரித்து வருகிறேன். இங்குள்ள மலர்களைத் தங்களைப் போன்ற அடியார்கள் எடுத்துச் சென்று பரமேச்வரனுக்கு அர்ச்சனை செய்கிறார்கள்" என்று கூறவும், சுந்தரர் புளகிதம் அடைந்து ஓடக்காரனுக்கு ஆயிரம் வராகன் பொற்காசு அளிக்கிறார்.

ஓடம் செலுத்துபவன் சுந்தரரையும் வேறு சிலரையும் அங்கேயே இருக்கச் சொல்லி விட்டு, மற்றவர்களை ஓடத்தில் ஏற்றிக் கொண்டு அக்கரையில் சேர்ந்துவிட்டுத் திரும்புகிறான். சுந்தரர் அவனது தீரத்தை மெச்சி அவனுக்கு இரண்டு பீதாம் பரங்களைப் பரிசாக அளிக்கிறார். ஓடக்காரன் அதை

ஒரு மரப் பொந்தில் பத்திரப்படுத்தி விட்டு, சுந்தரரை யும் பிறரையும் ஓடத்தில் ஏற்றிக் கொள்கிறான்.

பேய் வெள்ளம் பேரிரைச்சலுடன் பெருகிக் கொண்டிருக்கிறது. ஓடம் ஆற்றின் நடுவே போய்க் கொண்டிருக்கிறது. திடீரென்று ஒரு சுழல். ஓடம் பம்பரமாகச் சுழலுகிறது. ஓடக்காரன் திணறிப் போகி றான். அவன் கையில் இருந்த கோல் நீரில் விழுந்து விடுகிறது. அதைப் பிடிக்க முயன்றபோது, அவனும் வெள்ளத்தில் விழுந்து, பிரவாகத்தில் வேகமாக அடித்துச் செல்லப்படுகிறான். மறுகரையிலிருந்தவர்கள் இதைக்கண்டு பெருங்கூச்சலிடுகின்றனர். சுந்தரமூர்த்தி சுவாமிகள், நீரில் மூழ்கிக்கொண்டிருக்கும் ஓடக்காரனை ஆபத்திலிருந்து காத்தருளும்படி ஆபத்சகாயரைக் குறித்துத் தியானத்தில் ஆழ்கிறார். இதற்குள் ஓடம் திருக்கொள்ளம்பூதூர் வரை சென்று விடுகிறது.

சுந்தரமூர்த்தி நாயனார் அங்கு உறையும் ஸ்ரீ வில்வாரண்யேச்வரரைப் பிரார்த்திக்கிறார். அடுத்த கணம் சிவபெருமான் அவர் முன் தோன்றி, "சுந்தரரே! வீணாகக் கலங்க வேண்டாம். முன்பு ஒரு முறை ஸ்ரீ ஞான சம்பந்தமூர்த்தியை வெள்ளத்திலிருந்து காத்தது போலவே உன்னையும் நிச்சயம் காப்போம்" என்று அபயம் அளித்துவிட்டு மறைகிறார்.

இதைக் கேட்டு சுந்தரர் ஆனந்தக்கண்ணீர் பெருக்கி னார். 'சர்வலோக நாயகா, ஆபத்பாந்தவா, சம்சார மாகிற கடலிலிருந்து மானிடரைக் கரையேற்றும் உன் கருணை இந்த வெள்ளத்திலிருந்து எங்களைக் காப் பாற்றாமலா போய்விடும்?' என்று நினைத்து மன அமைதி பெறுகிறார். ஓடமோ, தட்டுத்தடுமாறித் தத் தளித்தபடி ஓடிக்கொண்டேயிருக்கிறது.

நீரில் மூழ்கி மூழ்கி வயிறு நிறைய நீரைக் குடித்து விட்ட ஓடக்காரன், நீரில் மூழ்குவதும் எழுவதுமாக

உயிருக்கு மன்றாடிக் கொண்டிருந்த கோரக் காட்சியைக் கண்டு அனைவரும் வேதனையுற்றிருந்த வேளையில், ஓடம் மற்றொரு சுழலில் சிக்கிக் கொண்டது. இதென்ன கொடுமை! ஓடக்காரனைப் போன்றே ஓடமும் வெள் ளத்தில் மூழ்கப் போகிறதா?

சிவபெருமான் மீண்டும் காட்சியளிக்கிறார். "சுந் தரரே! என் பிரிய தோழரே. உன்னையும் உன் அடி யார்களையும் காப்பாற்றுவது என் பொறுப்பு. சற்றும் பயப்படாமல் ஓடத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள்'' என்று கூறிவிட்டு மீண்டும் மறைந்து விடுகிறார். இம்முறை அவர் முகத்தில் புன்னகை யொன்று பூத்திருந்தது.

"பரமேச்வரா! உன் சித்தம் எங்களுக்கு புரிய வில்லை. இதற்கு மேலும் எங்களைச் சோதிக்காதீர். நாங்கள் பிழைகள் செய்திருப்பின் அவற்றைப் பொறுத்துக் காத்தருள வேண்டும்'' என்று பிரார்த்தித்த படி, அனைவரும் அந்த ஓடத்தை உறுதியாகப் பிடித்துக் கொண்டனர்.

சிறிது நேரத்திற்கெல்லாம் ஓடம் ஒரு பாறையில் மோதிச் சிதறுண்டு போயிற்று. அத்தனை பேரும் நீரில் தூக்கியெறியப்பட்டனர். சற்றுத் தொலைவில் மூழ்கிக் கொண்டிருந்த ஓடக்காரன், இந்தப் பரிதாபக் காட்சியை கண்டு, "ஐயோ. பாவம்! உங்கள் கதியும் என் கதியை போலவே ஆயிற்றா?'' என்று கேட்டு ஏளனமாகச் சிரித்தான். அவனுக்கு எப்படித்தான் சிரிப்பு வந்ததோ? வேதனை மிகுந்த வேளையில் விளையாட்டா?

ஆம் விளையாட்டுதான். அத்தனையும் விளை யாட்டுதான். திருவிளையாடல்கள் தான். சிவலீலைகள் தான். வெள்ளம் பெருகியதும், ஓடம் சுழலில் சிக்கியதும் ஓடக்காரன் நீரில் விழுந்ததும், படகு பாறையில் மோதிச் சிதறியதும் சிவபெருமானின் லீலா விநோதம்தான். சிவ

பெருமானே ஓடக்காரனாக வந்து, அருமைத் தோழரான சுந்தருடன் விளையாடியிருக்கிறார். ஏன் இந்த விபரீத விளையாட்டு? கேட்பதற்கு நாம் யார்? அது படைத்தவனின் பொழுதுபோக்கு. அவன் சித்தம். சித்தம் போக்கு சிவம் போக்கு!

சுந்தரர் சென்ற ஓடத்தை சிவபெருமான் பாறையில் மோதச் செய்து உடைத்த இடத்திற்குப் புராணப் பெயர் 'அமிழ்ந்தீச்வரம்.' அதுதான் 'அபிவிருத்தீச்வரம்' என்று மருவியிருக்க வேண்டும். அங்கு உறையும் சிவ பெருமானை அபிவிருத்தீச்வரர் என்றழைக்கிறார்கள். முன்பு அவர் அமிழ்ந்தீச்வரராக இருந்திருப்பாரோ, என்னவோ! எப்படியோ, அபிவிருத்தீச்வரர் கிராமமும், ஆலயமும், விரைவில் அபிவிருத்தியடைந்தால் சரி!

அபிவிருத்தீச்வரர் ஆலயத்திற்கு நேர் மேற்கே, வெட்டாறு உத்தரவாகினியாக ஓடுகிறது என்று பன்னீர் செல்வம் சொல்லவே அங்கு சென்று பார்த்தேன். வட கிழக்கேயிருந்து ஓடி வரும் ஆறு, தெற்கு நோக்கித் தான் பாய்கிறது. தெற்கேயிருந்து வடக்கே பாயும் போதுதான் நதி உத்தரவாகினியாகிறது. அதுதான் சிறப்பு என்கிறார்கள். ஆனால், அந்தச் சிறப்பிற்கான காரணத்தை இதுவரை என்னால் அறிய முடியவில்லை, நான் விசாரித்த வரையில் ஒவ்வொருவர் ஒவ்வொரு காரணத்தைக் கூறுகின்றனர். யாராவது, தக்கவிளக்கம் தந்தால் நன்றியுடையவனாக இருப்பேன்.

இது ஒரு புறமிருக்க, அபிவிருத்தீச்வரத்தில் வெட்டாறு சந்தேகத்திற்கிடமின்றி உத்தரவாகினியாகச் செல்லவில்லைதான். ஆனால், சற்றே உற்றுக் கவனித்தால் அங்கு நீரோட்டம் சற்றே சுழன்று, மேற்கே திரும்பி, வடக்கே ஓடி, மீண்டும் தெற்கில் பிரவகிப்பதுபோல் காணப்படுகிறது. தெற்கேயிருந்து பத்தடி வடக்கே

பாய்ந்தாலும் உத்தரவாகினியாகக் கருதுவதுதான் முறை. காசியில் கங்கையிருப்பதுபோல் ஒருவேளை, வெட்டாறு முன்பு இங்கே தெளிவான உத்தரவாகினியாக இருந்திருக் கலாம். அதனாலேயே அதன் கரையில் உள்ள ஆலங்குடி தலம் காசியாரண்ய க்ஷேத்திரமாக வழங்கப்பட்டிருக் கலாம்.

மீண்டும் கதைக்குச் செல்வோம். சுந்தரரும் அடியார்களும் ஓடத்தின் உடைந்த பலகைகளைப் பற்றிக் கொண்டு மிதக்கத் தொடங்கினர். சிலர் வயிறு புடைக்க நீரைப் பருகி, மூச்சுத் திணறிக் கொண்டிருந் தனர். மாயாஜால ஓடக்காரனும் பயங்கரச்சூழலில் சிக்கிச் சுழன்று கொண்டிருந்தான். "ஆண்டவா, எங்களை இன்னுமா சோதிக்க வேண்டும்? உன் திருவிளையாட லுக்கு எல்லையே இல்லையா?" என்று சுந்தரமூர்த்தி நாயனார் குரலெழுப்பினார். அப்பிரார்த்தனையைக் கேட்டு தயாநிதியான சிவபெருமான், தன் நீண்ட கரங் களை நீட்டினார். சுந்தரரும் மெய்யடியார்களும், அவற்றைப் பற்றிக் கொண்டனர். ஆபத்சகாயர் அவர் களை மெல்லக் கரையேற்றியருளினார்.

அடியார்கள் ஆண்டவனின் கைபற்றிக் கரையேறிய இடத்திற்கு 'கைப்பத்தூர்' என்ற பெயர் ஏற்பட்டது. அங்கு உறையும் பெருமான் 'ஹஸ்தாவலம்பேச்வரர்' ஆனார். சுந்தரர் முதலிய அடியார்கள், வாசனை பொருந்திய மல்லிகை, தாமரை மலர்களால் அவரை அர்ச்சித்து, பதிகங்களால் தோத்திரம் செய்தார்கள்.

கைப்பத்தூர், நாளடைவில் பத்தூர் ஆயிற்று! ஆனால், கைகொடுத்து உதவிய கடவுளை அவ்வூர் மக்கள் கைவிட்டு விட்டனர்! அக்கோயில் பாழடைந்து போய், சிவலிங்கம் பெயர்த்துப் போடப்பட்டிருக்கிறது.

தலப் பெருமையை அறிந்து, புராண மகிமையை

உணர்ந்து, மறுமுறை பத்தூர் சென்று வெங்கடாசலக் கோனார் என்ற வயோதிகருடன் உரையாடினேன். அவர் பஞ்சாயத்துத் தலைவராயிருந்தவர். ஐம்பது, அறுபது வருடங்களுக்கு முன், அந்தக் கோயிலில் தாம் சுண்டல் வாங்கி உண்டதை நினைவு கூர்ந்த அவர், ஆருத்ரா தரிசனத்தின்போது சுவாமி வீதிவலம் வந்த மகிமையை விவரித்தார். ஆனால் ஆலயத்திற்கு இப்படியொரு நிலை ஏற்பட்டதற்கான காரணம் என்னவென்று அவராலும் கூற முடியவில்லை.

எதுவாக இருந்தால் என்ன? மீண்டும் அக்கோயிலை நிறுவி, பூஜையைத் தொடங்கச் செய்வதற்கு அப்பகுதி மக்கள் முழு மூச்சுடன் முனைய வேண்டும். வேலூரில் நடந்தது பத்தூரில் நடக்காதா? வட ஆற்காடு வாசிகளிடம் உள்ள உணர்ச்சி தஞ்சை வாசிகளிடம் இல்லாமல் போகுமா? இதை நடத்திக் காட்ட வேண்டும் என்ற திட வைராக்யம் பெருந்தனம் படைத்த புண்ணியவான் ஒருவர் மனத்தில் ஏற்படாமலா போகும்? முயற்சியுடையாருக்குக் கைகொடுத்து உதவ ஹஸ்தாவலம்பேச்வரர் காத்துக் கொண்டிருப்பார்; சந்தேகமே வேண்டாம்.

# ஆலங்குடி

திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கப் பெருமானுக்கு ஒன்பது பரிவாரத் தலங்கள் உள்ளன. திருவலஞ்சுழி (விநாயகர்) சுவாமிமலை (முருகன்) திருவாவடுதுறை (நந்திகேச்வரர்) சூரியனார்கோயில் (நவக்கிரகம்)

திருவாப்பாடி (சண்டேச்வரர்) சிதம்பரம் (நடராஜர்) சீர்காழி (பைரவர்) திருவாரூர் (சோமஸ்கந்தர்) ஆலங்குடி (தட்சிணாமூர்த்தி).

ஆலங்குடி, தஞ்சை மாவட்டத்தில் பாபநாசம் வட்டத்திலுள்ள நீடாமங்கலம் ரயில் நிலையத்திற்கு வடக்கே 8 கி. மி. தொலைவிலுள்ளது. கும்பகோணத்தி லிருந்து பஸ்ஸில் செல்லலாம்.

இது குருத்தலமாகக் கருதப்படுகிறது. இங்கு கோஷ்ட தேவதையாக அமர்ந்திருக்கும் தட்சிணாமூர்த்தி, தனிச் சந்நிதிக்கு உள்ள சிறப்பையும் மகிமையையும் பெற்று விளங்குகிறார். எங்கும் காணாத அதிசயமாக, மூலவரைப் போன்றே, குருமூர்த்தியின் பெரிய உற்சவ விக்ரகமும் இருக்கிறது. நடராஜருக்குப் பக்கத்தில், கல்லால மரத் தடியில் அமர்ந்து, நான்கு ரிஷிகளுக்கு ஞானோபதேசம் செய்து கொண்டிருக்கிறார் அவர். நுணுக்கமான சிற்ப வேலைப்பாடுகள் அமைந்த இத்தனை பெரிய தட்சிணா மூர்த்தியின் உற்சவ விக்ரகம் வேறு எங்காவது உண்டா என்பது தெரியவில்லை. சித்திரை மாதம் பிரும்மோற்சவத் தின்போது, ஏழாவது நாள் தேரில் தட்சிணாமூர்த்தி புறப்பாடு கண்கொள்ளாக் காட்சியாயிருக்குமாம். மாசி மாதம் மூன்றாவது வியாழக்கிழமை மகாகுருவாரம் கொண்டாடப்படுகிறது. குருப்பெயர்ச்சியின்போது இவருக்குச் சிறப்பான அபிஷேக ஆராதனைகள் நடை பெறுகின்றன. குருவுக்குப் ப்ரீதியாக நடராஜருக்குண் டான ஆறு அபிஷேகங்களும் தட்சிணாமூர்த்திக்கும் உண்டு. குருபகவானை இருபத்து நான்குமுறை வலம் வந்தால் வேண்டிய பலன் கிட்டும் என்கிறார்கள். இருபத்துநான்கு என்ற எண்ணுக்குத் தத்துவார்த்த விளக்கம் தெரியவில்லை. அறிந்தவர்களை நாடினால் விடையறியலாம்.

ஆலங்குடி தட்சிணாமூர்த்தியை சுந்தரமூர்த்திசுவாமி

கள் வழிபட்டு, பஞ்சாட்சர உபதேசம் பெற்று, ஞான முக்தியடைத்தார்.

'ஓம் நமசிவாய' என்ற பஞ்சாட்சர மந்திரத்தை எவரொருவர் உதய, அஸ்தமன காலங்களில் மிக பக்தி சிரத்தையோடு ஜபித்து வருகிறாரோ அவர் ரிஷிசிரேஷ்டராவார் என்கிறது காசியாரண்ய மகாத்மியம். அது மேலும் கூறுகிறது:

'அவன் யம பயத்தையும் யமவேதனையையும் ஒரு நாளுமடைய மாட்டான். எவ்விதத்திலாவது நல்ல ஆசாரியனைத் தேடி, உத்தமமானதும் சம்சார சாகரத்தினின்று கரையேற்ற வல்லதுமான, நியாசம், தியானம் இவற்றுடன் கூடியதும், இருபத்தைந்து பேதங்களுடையதுமான பஞ்சாட்சரத்தை எப்போதும் ஜபம் செய்பவனிடம் பூதம், பிரேதம், பைசாசம், வேதாளம், டாகினி முதலியவை நெருங்கவே நெருங்காது. விலகி திக் ந்த் திக்காக ஓடிவிடும். சகல வியாதிகளும் நீங்கும். நானாவிதத் துன்பங்களும் அற்றுப்போம்.

காசியில் இறப்பவர்களுக்கு ஸ்ரீவிச்வநாதர் தாரக மந்திரமான ராமநாமத்தை உபதேசிக்கிறார். ஆலங்குடி என்ற காசியாரண்யத்தில் இறக்கும் தருவாயிலிருப்பவர்களுக்கு ஈச்வரன் பஞ்சாட்சர உபதேசம் செய்து முக்தியளிக்கிறார். இங்கு இறக்கும் பாக்கியத்தைப் பெற்ற பசு, பறவை, மிருகம், மனிதன் முதலானோர் நிச்சயம் மோட்ச சாம்ராஜ்யத்தை அடைகிறார்கள்.

இத்தலத்திற்கு ஸ்ரீ ஆதிசங்கரர் வருகை தந்திருக்கிறார். ஸ்ரீ தட்சிணாமூர்த்தியிடம் மகா வாக்கிய உபதேசமும் அறுபத்து நான்கு கலைகளைப் பற்றிய ஞானத்தையும் பெற்று குருமூர்த்தியைத் தோத்திரம் செய்திருக்கிறார்.

ஸ்ரீ மகாலட்சுமி ஸ்ரீ தட்சிணாமூர்த்தியை வழிபட்டு சந்தானபாக்கியம் பெற்றாள். சிவபெருமானின் அருளால்

கீர்த்தி, மணி, நிசரன், சாதவேதசன், காமன், மனோகரன் என்ற ஆறு புத்திரர்களைப் பெற்று, மகிழ்ச்சியின் அடையாளமாகப் பரமேச்வரனுக்கு யானையின் மீது புனிதநீர் கொண்டு வந்து திருமஞ்சனம் செய்து வைத்தார். பின்னர், ஆலங்குடிப் பெருமானின் புகழ் பாடிய மகாவிஷ்ணுவும் ஸ்ரீதேவி சமேதராய், மேற்குப்புறம் அபய வரதராஜப் பெருமாளாகத் திருக்கோயில் கொண்டார்.

தெற்குப் பார்த்த ராஜகோபுரம். கோபுரத்தில் பழமையான சிற்பங்கள் நிறைய இருக்கின்றன கோபுர வாயிலைக் கடக்கும்போது மேலக் குடவரையில் 'கலங்காமல் காத்த கணபதி'யை வழிபடலாம். கஜமுகாசுரனிடமிருந்து தேவர்களைக் காத்த தும்பிக்கையான், நம்மையும் காத்தருளக் காத்திருக்கிறார்.

கிழக்கே பூளை வள ஆறு உளது. துலா மாதத்தில் இதன் நீரைக் கொணர்ந்து இறைவனுக்கு அபிஷேகம் செய்கிறார்கள். பூளை என்பது வெற்றிக்கு அடையாளமாகச் சூடப்படும் ஓர் அரிய மலர். திருஞானசம்பந்தர் தமது தேவாரத்தில் ஆலங்குடியை 'திருஇரும்பூளை' என்று குறிப்பிடுகிறார்.

சீரார் கழலே தொழுவீ ரிதுசெப்பீர்
வாரார்முலைமங் கையொடும் உடனாகி
ஏரா ரிரும்பூ ளையிடங் கொண்ட ஈசன்
காரார் கடல்நஞ் சமுதுண் டகருத்தே

அடுத்த பாட்டில் 'எழிலாரிரும்பூளை யிடங்கொண்ட ஈசன்' என்று விளிக்கிறார். திருநாவுக்கரசர் திருவீழிமிழலை திருத்தாண்டகத்தில் இத்தலத்தை 'இரும்பூளையுள்ளார்' என்று குறிப்பிட்டுள்ளார்.

பாற்கடலைக் கடையும்போது உண்டாகிய விஷத்தினால் துன்புற்ற தேவர்கள் சிவபெருமானிடம் தஞ்சமடைய, அவர் ஆலமாகிய அந்த நஞ்சை நெஞ்சில்

அடக்கிக் காத்த தலமாதலால் இது ஆலங்குடியாயிற்று. அதன் காரணமாக பாம்பு விஷத்தினால் இந்த ஊரில் யாரும் இறப்பதில்லையாம்.

ஆலங்குடியைப் பற்றி காளமேகப் புலவர் ஒரு பாடல் பாடியுள்ளார்:

ஆலங் குடியானை ஆலாலம் உண்டானை
ஆலங் குடியான் என்றுஆர்சொன்னார்—ஆலம்
குடியானே யாகில் குவலயத்தோ ரெல்லாம்
மறியாரோ மண்மீதினில்

ஒருநாள் கைலாசத்தில் பந்து விளையாடிக் கொண்டிருந்த பார்வதி தேவி, உயரே சென்ற பந்தைப் பிடிப்பதற்காகக் கையைத் தூக்கியபடி காத்திருக்க, சூரியன் தன்னைத்தான் நிற்கச் சொல்கிறாள் என்று நினைத்துத் தன் தேரை நிறுத்த, அதனால் உலக இயக்கம் தடைப்படுகிறது. இது குறித்து உலக மாந்தர் சிவபெருமானிடம் முறையிட, இதற்குக் காரணமான பார்வதியைப் பரமசிவன் கடிந்து சாபமிடுகிறார். மனைவி ஸ்தானத்தை இழந்த பார்வதி பூலோகம் சென்று காசியாரண்யத்தில் பிறந்து, தவமியற்றி மீண்டும் தம்மைக் கணவனாக அடையுமாறு பணிக்கிறார். அவ்விதமே உலகநாயகி அமிருத புஷ்கரணியிலுள்ள தாமரைமலரின்மீது குழந்தையாகப் பிறக்க, குழந்தைச் செல்வமற்ற ஒரு தம்பதி அதை எடுத்துச் சென்று வளர்க்க, மங்கைப் பருவமடைந்த அப்பெண் சிவபெருமானைக் குறித்து கடுந்தவமியற்ற, அவர் அவள் முன் தோன்றித் திருமணம் புரிந்து கொள்கிறார். இந்தக் காட்சியைக் காண பூர்ணாபுஷ்களையோடு சாஸ்தா, வீரபத்திரர், கணபதி, தட்சன் முதலானோர் வருகிறார்கள். அவர்களுடைய திருச்சந்நிதிகளைக் கோயிலுக்கு வெளியே தென்புறத்திலும், தேர்முட்டிக்கருகிலும் காண்கிறோம். கிழக்கு வாசலுக்கு வெளிப்புறம்,

சப்தமாதாக்கள் இருக்கின்றனர். ஈசான்யத் திக்கில் பாதாள பைரவி காளியம்மன் ஆலயம் இருக்கிறது.

சுவாசனன் என்ற ஒரு கொடிய அரசன், பஞ்சமா பாதகங்களும் செய்து குடிமக்களைச் சித்ரவதை செய்து வந்தான். பிற மன்னர்களால் கொல்லப்பட்ட அவனை, யமதூதர்கள் யமதர்மராஜன் முன்னால் கொண்டு நிறுத்தி, அவன் செய்த பாவச் செயல்களைப் பட்டியல் போட்டுக் கூறினர். பூலோகத்தில் பிசாசாக அலையும்படி யமதர்மன் அவனுக்குத் தண்டனையளித்தான். முன்வினைப் பயனால் பிசாசாகத் திரிந்த சுவாசனனுக்கும் பூலோகத்தில் அகத்திய முனிவரின் தரிசனம் கிடைத்தது. அவர் கட்டளையின்படி காசியாரண்யத் தலத்திற்கு வந்து புண்ணிய நீராடி, ஆபத்சகாயரை வழிபட்டு, சாபம்நீங்கி இழந்த நாட்டையும் செல்வத்தையும் மீண்டும் பெற்றான்.

மூசுகுந்த சக்கரவர்த்தியின் முக்கிய மந்திரி அமுதோகர். சகல சாஸ்திர பண்டிதர். சிவபக்தர். ஆபத்சகாயருக்கு ஆலயம் கட்டி வைக்கும்படி அரசன் அவரிடம் தந்த பெரும் செல்வத்தைப் பயன்படுத்தாமல், தன் சொந்த வெல்வத்தைக் கொண்டே ஆலயம் எழுப்பி, புண்ணியம் ஈட்டினார். இதையறிந்த சக்கரவர்த்தி, அப்புண்ணியத்தில் ஓர் அணுப் பகுதியையாவது தனக்குத் தத்தம் செய்து தரும்படிக் கேட்டான். அமுதோகர் உறுதியாக மறுத்துவிட்டார். கோபமடைந்த சக்கரவர்த்தி மந்திரியின் தலையைத் துண்டித்து விடும்படி உத்தரவிட்டான். ஆனால் வீரர்களுக்கு மனமில்லை. தப்பித்துப் போகுமாறு மந்திரியிடம் மன்றாடினார்கள். அமுதோகர் அதற்கு ஒப்புக் கொள்ளவில்லை. அரசனுக்குத் துரோகம் செய்வது மகாபாவம் என்றும் சேவகர்கள் அரச கட்டளையை நிறைவேற்றி, கடமையைச் செய்யும்படியும் கோரினார். வேறு வழியில்லாமல் சேவகன் அவர் தலையைத் துண்டிக்க வாளை ஓங்கினான். அதற்குள்

ஆபத்சகாயர் அமுதோகரின் உடலிலிருந்து உயிரைப் பறித்துவிட்டார். ஜீவன் பிரியும்போது, அக்கோயிலெங்கும் 'அமோதக' 'அமோதக' என்ற பேரொலி பரவி எதிரொலித்தது. இதைக் கேட்டு முசுகுந்த சக்கரவர்த்தி துணுக்குற்றார். நடந்த விவரத்தையறிந்து ஆபத்சகாயரிடம் மன்னிப்புக் கேட்டு கதறியழுதார். அபசாரம் நீக்கப் பெற்று நற்கதியடைந்தார்.

இன்றும் கருவறையின் வெளியே, கோமுகியின் கீழ், அமுதோகரின் சரீரம் இருப்பதாக நம்பப்படுகிறது. அபிஷேக நீர் விழும்போது 'சிவ சிவ' என்ற ஒலி கேட்கிறதாம். மிக உன்னிப்பாக கேட்பவர்களுக்கு அது காதில் விழுமாம்.

இத்தலத்தின் பெருமையை விளக்கும் வகையில் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வாழ்க்கைத் தொடர்பாக ஒரு நிகழ்ச்சி கூறப்படுகிறது.

திருவாரூரில் ஆட்சி புரிந்து வந்த ஒரு சோழ அரசன் திருவிழாவின் போது எல்லா ஆலயங்களிலுமிருந்தும் சுந்தரரின் விக்ரகங்களை எடுத்துச் சென்று திருவாரூர் ஆலயத்தில் வைத்தான். பின்னர், மிக அழகிய ஆலங்குடி விக்ரகம் மட்டும் திருவாரூரிலேயே இருக்கட்டும் என்று உத்தரவிட்டு அதற்குக் கடுமையான காவலும் போட்டான். ஆலங்குடி கோயில் அர்ச்சகருக்கு அந்த மூர்த்தி திருவாரூர் ஆலயத்தில் இருப்பதில் சிறிதும் விருப்பமில்லை. மீண்டும் ஆலங்குடிக்கே எடுத்து வந்து விடலாமென்றாலோ, காவலாளிகள் கண்களில் விளக்கெண்ணெய் போட்டுக்கொண்டு பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். செய்வதறியாது மனதுக்குள்ளேயே மறுகிக் கொண்டிருந்தார் அவர்.

அன்றிரவு சுந்தரர் அவர் கனவில் தோன்றி, "வைசூரி போட்ட குழந்தையாகி விடுகின்றேன். என்னை நீங்கள்

தூக்கிக்கொண்டு போய்விடுங்கள். அப்போது உங்களை யாரும் தடுக்க மாட்டார்கள்." என்று கூறினார்.

வைசூரி முத்துக்களுடன் கூடிய குழந்தையைத் துணியில் சுற்றி வெளியே எடுத்து வந்து விட்டார் அர்ச்சகர். அதைக் கண்ட காவலாளி, அர்ச்சகர் தன் குழந்தையை எடுத்துப்போவதாக நினைத்து அனுமதித்து விட்டான். அந்நிலையில் கோயிலில் குழந்தையை வைத்திருப்பது தவறுதானே?

திருக்கொள்ளம்பூதூர் வந்து சேர்ந்த அர்ச்சகர், வாயு மூலையில் கூவாலடி என்ற கிராமத்தில் உள்ள ஒரு வடவால மரத்தின் கீழ் குழந்தையைப் பாயில் சுருட்டி வைத்துவிட்டு, நீராடச் சென்றார். திரும்பி வந்து குழந்தையைக் கையிலெடுக்க முனைந்தபோது, முடியவில்லை. அவரால் அசைக்கக்கூட முடியவில்லை. 'ஓ' வென்று கதறியழுதார். ஆலங்குடிக்குச் ஓடிச் சென்று அன்பர்களிடம் நடந்ததைக் கூறி அவர்களை அழைத்து வந்தார்.

அவர்கள் பாயை விலக்கிப் பார்த்தபோது, குழந்தை இருக்கவில்லை. மாறாக, சுந்தர மூர்த்தியின் பழைய அழகிய விக்ரகத் திருமேனிதான் இருந்தது. உடலெங்கும் அம்மை முத்துக்கள் காணப்பட்டன. மகிழ்ச்சியுடன் ஆலங்குடிக்கு எடுத்துச் சென்றனர்.

சுந்தர மூர்த்தியின் அந்த விக்ரகத்தை தற்போதைய அர்ச்சகர் எங்களுக்குக் காட்டினார். வைசூரித் தழும்புகள் அப்படியே இருக்கின்றன. சோமாஸ்கந்தரின் சன்னதியில் இருக்கும் அந்த மூர்த்தி மூன்றரையடி உயரமிருக்கும். ஆண்டுதோறும் ஆருத்ராவின்போது அவர் வெளியே உலா வருகிறார்.

இக்கோயிலில் ராஜகோபுரம், மதிற் சுவர், வசந்த மண்டபம் முதலியவை மிகவும் புராதனமானவை. இதர கட்டடங்கள், மண்டபங்கள் அனைத்தும் ஐம்பது அறுபது வருடங்களுக்குள் தோன்றியவை. 1930-ம் ஆண்டில்

தேவகோட்டை லெட்சுமணன் செட்டியார்— பழனியப் பச்செட்டியார் சகோதரர்கள் திருப்பணி செய்து சிறப்புுறக் குட முழுக்கும் செய்து வைத்தார்கள்.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் இங்கு மீண்டும் திருப்பணிகள் தொடங்கி மந்தமாக நடை பெற்று வருகின்றன. கோபுரமும், விமானங்களும் சீர்படுத்தப் படவேண்டும். மேல் தட்டோடுகளும் பழுது பார்க்கப்படவேண்டும். ஆனால், சுறுசுறுப்பைக் காணோம். குரு பார்வை சரியாகப் படவில்லை போலும்!

இத்தனை பெருமைகள் பெற்ற தலத்தில் பல வருடங்களாக பிரம்மோற்சவம் நடைபெறவில்லை என்பதைக் கேட்க வருத்தமாகத்தான் இருந்தது.

# அழகாபுத்தூர்

குடவாசல் தலபுராணத்தில், ஸ்ரீகோணேச்வர சுவாமி கோயிலுக்கு 'மேற்கே ஒரு நாழிகைத் தொலைவில் சுவர்ணபுரிச்வரர் இருக்கிறார்' என்று காணப்படுகிறது. அவர் உறையும் கோயிலைத் தேடிச் சென்றோம்.

கும்பகோணத்திலிருந்து நாச்சியார் கோயில் போகிறவர்கள், சாக்கோட்டையிலிருந்து இரண்டு கிலோ மீட்டரைக் கடந்ததும், பஸ் பாதைக்குத் தென்புறம் வயல்களுக்கு நடுவே ஒரு பழைய கோயில் இருப்பதைப் பார்த்திருப்பார்கள். நாங்களும் அவ்வழியே செல்லும்போதெல்லாம் அக்கோயிலைப் பார்ப்போம். என்றுமே அங்கு ஜன நடமாட்டத்தைக் கண்டதில்லை. கோயிலில் பூஜை இருக்கிறதா என்ற சந்தேகம்கூட ஏற்பட்டது உண்டு.

குடவாசல் கோயிலுக்கு மேற்கு எல்லையாகக் குறிப்பிட்டிருக்கும் கோயில் இதுவாக இருக்குமோ என்று ஒரு நாள் தோன்றவே, சாலையில் 'அளகாபுத்தூர்' என்று போர்டு போடப்பட்டிருந்த சிற்றூரில் காரை நிறுத்தி அங்கு நின்றிருந்த ஒரு பெரியவரிடம், 'அதோ, அந்தக் கோயிலில் உள்ள சுவாமியின் பெயர் என்ன?' என்று விசாரித்தோம். 'சுவர்ணபுரீச்வரர்' என்று அந்தப் பெரியவர் சொன்னதும் எங்கள் ஊகம் சரியாகிவிட்டது என்று மகிழ்ந்தோம்.

ஊரிலிருந்து ஒதுங்கி, தொல்பொருள் இலாகாவினரின் பிடியில் சிக்கிய கோயிலைப் போல் 'களை' யின்றித் தோற்றமளித்த அந்தக் கோயில் பாடல் பெற்ற சிவத் தலங்களில் ஒன்று. இது 66-வது தலம். சாக்கோட்டைக்கு இரண்டு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள புகழ் பெற்ற சிவபுரம் 67 வது திருத்தலம்.

மூவர் தேவாரத் திருப்பதங்களைப் பெற்று பெருமை கொண்ட தலம் அளகாபுத்தூர்.

அன்னங்கள் நீந்தி விளையாடுகின்ற அரிசிலாற்றின் அலைகள் பொன்னையும் மணியையும் சேர்க்கும் தென் கரை மீது அமைந்த புத்தூர், மின்னல் போல் ஒளிரும் சடைக்கற்றை மீது இள வெண்திங்கள் விளங்க, கடலில் தோன்றிய நஞ்சை உண்டதால் இருண்ட கண்டத்தராய்த் திகழும் சிவபெருமான் எழுந்தருளிய பழமையும், தொன்மையும் உடைய ஊராகும்.

தமது முதல் பதிகத்தில் திரு அரிசிற்கரைப்புத்தூர் என்ற அழகாப்புத்தூரைப் பற்றி ஸ்ரீ ஞான சம்பந்தப் பெருமான் மேற்கண்டவாறு புகழ் பாடியிருக்கிறார்.

அங்கு உறையும் சிவபெருமானின் பெருமை என்ன? சம்பந்தர் கூறுவதைக் கேட்போம்...

நெல்லரிகளை உடைய வயல்களால் சூழப்பட்டு அழ

கியதாய் விளங்குவதும், புங்கமரங்கள் பொரி போன்ற மலர்களை சிந்தும் சோலைகளை உடையதுமாகிய புத்தூர் உமையம்மை அஞ்சுமாறு தம்மை நோக்கி வந்த யானையை உரித்துப் போர்த்திய இறைவனது ஊராகும்.

அரிசிலாற்றின் தென்கரையில் திருக்கோயிற் கொண்ட புத்தூர் புனிதரைப் போற்றிப் புகழும் அழகே அழகு...

முத்துக்களைத் தாங்கி வரும் நீர் நிறைந்த அரிசிலாற்றின் கரைமீது அமைந்த புத்தூரில் உறையும் பெருமான் திருவடிகளைப் 'போற்றி' என்று கூறி வணங்குவோர் அனைவரும் பொய்யுடைய ஐம்புல இன்பங்களின் நுகர்ச்சியால் வரும் வினைகளை மாற்றும் வல்லமை பெற்றவர்களாவார்கள்.

ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள், அரிசிலாற்றையும் அதன் கரையிலுள்ள சோலைகளின் எழிலையும், அருகில் உறையும் அழகரையும் தீந்தமிழால் நா இனிக்க, மனங்குளிர வர்ணித்துவிட்டு, இத்தலத்தின் புராணப் பெருமையொன்றையும் ஒரு பதிகத்தால் புலப்படுத்துகிறார்.

அகத்தடிமை செய்யும் அந்தணன்றான்
அரசிற்புனல் கொண்டு வந்தாட்டுகின்றான்.
மிகத் தளர்வெய்திக் குடத்தையும் நும்
முடிமேல் விழுத் திட்டு நடுங்குதலும்
வகுத்தவனுக்குநித் தற்படியும்
வரும் என்றொரு காசினை நின்றநன்றிப்
புகழ்த்துணை கைப்புகச் செய்துகந்தீர்
பொழிலார் திருப்பத்தூர் புனிதனீரே.

அழகாபுத்தூர் என்றழைக்கப்படும் அரிசிற்கரைப் புத்தூருக்கு செருவிலிபுத்தூர் என்னும் பழம் பெயர் உண்டு. அங்கு சிவ வேதியர் குலத்தில் தோன்றியவர்

புகழ்த்துணை நாயனார். சுவர்ணபுரீச்வரருக்குச் சிவகாம முறைப்படி பூஜைகள் செய்து வந்தார் அவர். ஐயனின் பணிக்கே தம்மை முழுமையாக அர்ப்பணித்துக் கொண் டார். அவருக்கு வாழ்க்கையில் வேறு நினைவோ, ஆசையோ கிடையாது. வயது ஆகிவிட்டது. தள்ளாமை ஆட்கொண்டது. இருப்பினும் தினமும் அரிசிலாற்றி லிருந்து நீரைக் கொண்டு வந்து அபிஷேகம் செய்வதை நிறுத்தவில்லை. சுமக்க முடியாமல் நீர்க்குடத்தைத் சுமந்து வந்து, தள்ளாடித் தள்ளாடித் திருச் சந்நிதியை அடைந்து, அம்மையப்பனுக்கு அபிஷேகம் செய்ததும் அவரது உடல் வலியெல்லாம் மறைந்து உள்ளம் ஆனந்தப் பூரிப்பில் லயிக்கும்

முதுமையின் துயரம் போதாதென்று ஊரில் கடும் பஞ் சம் ஏற்பட்ட காரணத்தினால் புகழ்த்துணை நாயனாரை வறுமையும் பற்றிக் கொண்டது. அப்படியும் தம் கடமை யிலிருந்து அவர் வழுவவில்லை. பசியால் வாடி உயிரிழக்க நேர்ந்தாலும், ஆலயப் பணியைத் துறக்கும் எண்ணம் அவர் மனத்தில் எழவேயில்லை.

ஒரு நாள் ஆற்றுக்குச் சென்று குடத்தில் நீரை நிரப்பிக் கொண்டு திருச் சந்நிதிக்கு வந்தார். பசியின் கொடுமை அவரை வாட்டியது. காதுகள் அடைத்தன; கால்கள் தள்ளாடின கைகள் நடுங்கின; அபிஷேகத்திற்காகக் குடத்தைத் தூக்கினார். திடீரென்று குடம் நழுவி, சுவாமி யின் திருமுடியின் மீது விழுந்தது. பலமான அடி.

"ஐயோ என்ன காரியம் செய்துவிட்டேன். எத்தனை பெரிய அபசாரத்திற்கு ஆளாகி விட்டேன். என் அப் பனே! உன் பொன் முடியில் காயம் பட்டதோ? நீ வலி யால் துடிப்பதைக் காண நான் என்ன பாவம் செய் தேனோ!" என்று அலறியவர் மூர்ச்சையாகி கீழே விழுந்து விட்டார். இத்தனை ஆண்டுகள் இந்த சிவலிங்கத்தை கல் லாகவா நினைத்து ஆராதித்து வந்தார்...? சாட்சாத் சிவ

பெருமானாகக் கருதித்தானே தொண்டு புரிந்து வந்தார். அதுதானே உண்மையான பூஜையின் இலட்சணம்.

மூர்ச்சித்துக் கிடந்த அர்ச்சகரின் கனவில் சிவபெருமான் தோன்றினார்:

"பக்தனே உண்மையான அன்பில் தோய்ந்த உன் பணிக்கு நான் அடிமையானேன். உறுதியான உன் நெஞ்சம் தவறவில்லை. வறுமையில் வாடிய உன் உடலே தவறியது. கவலையை விடு. பஞ்சம் நீங்கும்வரை தினமும் உனக்கு ஒரு பொற்காசு தருவேன். உன் துன்பங்கள் தீரும்" என்று அருளி மறைந்தார். மயக்கம் தெளிந்து எழுந்து பார்த்தபோது சுவாமியின் பீடத்தில் ஒரு பொற்காசு இருக்கக் கண்டார் அர்ச்சகர். அதே இடத்தில் தினமும் அவருக்கு ஒரு பொற்காசு கிடைத்து வந்தது. அதைக் கொண்டு வறுமையை விரட்டி, ஆண்டவனுக்கு மேலும் சிறந்த தொண்டாற்றி, இறுதியில் அவன் திருவடி நிழலில் ஐக்கியமானர்.

இதனால் ஸ்ரீசுவர்ணபுரீச்வரருக்குப் படிக்காசு நாதர் என்ற சிறப்புப் பெயர் ஏற்பட்டது. 'படிக்காசு அளித்த பரமன்' என்றும் அழைக்கப்படுகிறார்.

அர்ச்சகர் தொழிலுக்கே உதாரணமாகவும் இலக்கணமாகவும் திகழ்ந்த புகழ்த்துணை நாயனாரின் மரபில் வந்த ராமலிங்க குருக்கள் அக்கோயிலை எங்களுக்குச் சுற்றிக் காட்டினார்.

மேற்கே பார்த்த ராஜ கோபுரம், பழுதுபார்க்க வேண்டிய நிலையிலுள்ளது. உட்புறம் கோபுர வாசலின் இருபுறமும் சூரிய சந்திரர்கள், வானமே கூரையாக நின்றிருக்கின்றனர்! வடக்கு மூலையில் ஆறுமுகக் கடவுள், நடுவில் கெஜலெட்சுமி... தென்மேற்கில் தல விநாயகர்.

கோபுர வாசலுக்கு நேரே சிறிய கொடிமரம். மரமாகத்தான் நிற்கிறது. கவசம் இல்லை. ஒரே பிராகாரம்

தான். ஆனால் அகலமானது. கிழக்குப்பிராகார மண்டபத்தில், பைரவர் சிலையும், நவக்கிரகங்களும் உள்ளன. வலம் தந்து, உள்மண்டபத்தில் நுழைந்தால் இடப்புறம் அழகம்மை என்ற செளந்தர்யநாயகி திருச்சந்நிதி கொண்டிருக்கிறாள். எதிரே தென்புறம் ஒரு வாசல் இருக்கிறது. வாசலை அடுத்துள்ள மேடையில், வடக்கே பார்த்துப் புகழ்த்துணை நாயனார், அவரது துணைவியார் லட்சுமி நாச்சியார் சிலைகள் இருக்கின்றன. ஆவணி மாதம் ஆயில்ய நட்சத்திரத்தன்று புகழ்த்துணை நாயனாருக்கு குருபூஜை சிறப்புற நடைபெறுவதாக அறிந்தோம்.

அடியாரை தரிசித்துவிட்டு ஆண்டவனைத் தரிசிக்கிறோம் உள்ளன்புடன் அர்ச்சித்தவரின் புகழ் விளங்கக் காரணமான புத்தூர் புனிதனைக் கண்டு உள்ளத்தில் புளகிதம் பொங்குகிறது. மெய்யடியார்களுக்கு சோதனைகள் தந்து, அவற்றை வெற்றிக்கொள்ள அருளும் வழங்கி முடிவில்லா லீலைகள் புரிந்து வரும் முக்கண்ணனின் திருமுகத்தில் புன்னகையொன்று அரும்பி, அழகுற விரிகிறது.

பழம்பெரும் பெருமைகள் சூழ்ந்த திருத்தலம் ஒன்றைத் தரிசித்த பூரிப்புடன் வெளியே வருகிறோம். வடப்புறத்திலுள்ள திருக்குளத்தைக் காண்கிறோம். படித்துறைகள் இடிந்து போயிருக்கின்றன. கோயிலையே கவனிக்காதபோது திருக்குளத்தைப்பற்றி யாருக்கு அக்கறை பிறக்கப் போகிறது?

இத் திருக்குளத்தைப் போன்றே அதற்கு வடக்கே ஓடும் அரிசிலாறும் தலதீர்த்தமாகக் கருதப்படுகிறது புகழ்த்துணை நாயனார் அந்த ஆற்றில் ஏழு அரசுமரத் துறை என்ற இடத்திலிருந்துதான் தினமும் அபிஷேகத் திற்குத் தீர்த்தம் கொண்டு வருவது வழக்கமாம். வில்வம் இத்தலத்தின் தலவிருட்சம்.

1925-ம் ஆண்டில் இங்கு குடமுழுக்கு நடந்ததாம் பின்னர் குடமுழுக்கு செய்யப்படவில்லை. ஆலயத்தினுள் 1971-ல் பொறிக்கப்பட்ட ஓர் அடிக்கல்லைக் கண்டேன். கும்பாபிஷேகம் செய்ய வேண்டும் என்ற நல்ல எண்ணத்தின் அடையாளமாக அது காட்சியளித்துக் கொண்டிருக்கிறது! ஒன்பது ஆண்டுகளாக முயன்று கொண்டிருக்கிறார்கள். விமானங்களெல்லாம் பழுதுபார்க்கப்பட்டிருப்பது தெரிகிறது. ஆனால், இதுவரை செய்த திருப்பணிகளும் பயனற்றுப் போய், சிலபகுதிகள் மூளியாகிக் கொண்டிருப்பதையும் கண்டு வருந்தினேன்.

பல கோயில்களில் கும்பாபிஷேகத்திற்கான திருப்பணிகள் தொடங்கப்பெற்று முற்றுப் பெறாமலும், யார் செய்து முடிக்கப் போகிறார்கள் என்று புரியாமலும் ஓர் இழுபறி நிலை இருந்து வருவதை என் பயணங்களின் போது காண்கிறேன்.

பெரிய புராணத்தைப் போற்றிப் புகழ்கிறோம். திவ்ய பிரபந்தங்களைப் படித்துப் பரவசப்படுகிறோம். ஆழ்வார், நாயன்மார்களின் சரிதங்களை நினைவு கூர்ந்து நெக்குருகிப் போகிறோம். அவர்களது தெய்வீகப் பாடல் களைப் பாராயணம் செய்து பக்தியில் கரைகிறோம். அவர்கள் பாடிப் புகழ்ந்த இறைவன், இறைவிகளைத் தேடிச்சென்று தரிசிக்கிறோம். அந்த ஆலயங்கள் இன்றுள்ள நிலையைக்கண்டு வருந்தவும் செய்கிறோம்; ஆனால்...

ஸ்ரீராமனுக்கு அணிற்பிள்ளைகள் தொண்டு புரிந்தது போல், ஆலயத் திருப்பணிக்கு நம்மால் முடிந்ததை செய்ய வேண்டும் என்ற மனப்பான்மை உண்டாவதில்லை. மனம் இருந்தால் மார்க்கம் உண்டு!

(ஓராண்டு கழித்து இந்தப் பகுதியில் பயணம் செய்த போது, அழகாபுந்தூர் கோயிலில் திருப்பணிகள் நடை பெற்று, வண்ணக் கோலத்துடன் காட்சியளித்ததைக் கண்டு மனம் குளிர்ந்தேன். குடமுழுக்கு கூட நடை பெற்றிருக்கும் என்று நினைத்துக் கொண்டேன். பின்னர் அன்பர் ஒருவர் மூலம், குடவாயில் தலபுராணத்தில் குறிப் பிடப்பட்டுள்ள சுவர்ணபுரீச்வரர் இவரல்லவென்றும், வலங்கைமானிலிருந்து பாபநாசம் செல்லும் பாதையில் அவர் திருக்கோயில் கொண்டுள்ளார் என்றும் அறிந்தேன். அக்கோயில்தான் குடவாயில் ஸ்ரீ கோணேச்வரருக்கு நேர்மேற்கே இருப்பதாகவும் அவர் கூறினார். ஆனால், அக்கோயிலுக்குச் சென்று தரிசிக்க இயலாமல் போய் விட்டது.)

# திருநறையூர்

கும்பகோணம்—குடவாசல் பாதையில் அழகாபுத் தூருக்கு அடுத்து இரண்டு கிலோ மீட்டர் தொலைவி லுள்ளது திருநறையூர். தேவாரப்பாடல் பெற்ற 65-வது தலமாகும் இது. திருநறையூர் என்பது ஊரின் பெயர். சித்தீச்சரம் என்பது சிவாலயத்தின் திருநாமம். சோலை யில் பூத்துக் குலுங்கிய மலர்களின் நறுமணம் கமழ்ந்து விளங்கியதால்தான் 'நறையூர்' என வழங்கிற்று. நறை என்றால் தேன்—தேனூறும் மலர்கள் மண்டிக் கிடக்கும் ஊர்—என்றும் கொள்ளலாம். வடமொழியில் சுகந்த வனம் என்று பெயர்.

சித்தர்கள் வழிபட்டதால் சுவாமி சித்தநாதர் ஆனார் சித்தநாதர் திருச்சந்நிதி கொண்டிருப்பதால் சித்தீச்சரம் என்ற பெயர் ஏற்பட்டது. தேவர்கள் வழிபட்டதால்

வேதலிங்கம், வேதேச்வரர் என்ற திருநாமங்களும் உண்டு. அம்பிகை, சௌந்தரியநாயகியாக—அழகம்மை யாக எழுந்தருளியிருக்கிறாள்.

சம்பந்தர், சுந்தரர் இருவரால் பாடப்பெற்று, நாவுக் கரசரின் திருத்தாண்டகத்தில் குறிக்கப்பட்டுள்ள இத் தலம் மிகப் பழமையானது. மூலமூர்த்தி நம்மைக் கவர்ந்து இழுக்கும் காந்த சக்தியும் அழகும் பெற்றுத் திகழ்கிறார். மாசி மாதத்தில் மூன்று நாட்களும், ஆவணி மாதத்தில் மூன்று நாட்களும் சூரிய கிரணங்கள் மூலலிங்கத்தின்மீது படுவதால், சூரியனே வழிபடுவதாகக் கருதப்படுகிறது.

இத்தலத்தின் புராணப் பெருமைகளை சனத்குமார ருக்கு முருகப் பெருமானே எடுத்துக் கூறினாராம்.

இத்தலத்தில் நரன்-நாராயணர் இருவரும் தவமியற்றி வந்தனர். தவவாழ்க்கை மேற்கொள்பவர்களுக்கு இடை யூறு செய்வதற்காக அங்கு ஓர் அசுரன் வந்தாக வேண் டுமே! அதன்படி ஓர் அசுரன் அவர்களைத் துன்புறுத்தத் தொடங்கினான் அவன். ஆயிரம். கவசங்களை உடைய வன். எளிதில் வென்றுவிட முடியாதவன். நர-நாராயணர் கள், நாரத மகரிஷியிடமிருந்தும் சூரிய பகவானிடமிருந் தும் அந்த அசுரனைத் தோற்கடிப்பதற்கான தந்திரங் களைத் தெரிந்துகொண்டனர். ஓர் அந்தணர் மூலம் அசுரனின் கவச குண்டலங்களை யாசித்துப் பெற்றுக் கொண்டு, அவனைத் தற்காப்பு அற்றவனாக்கிப் போர் புரிந்து கொன்றனர். அந்தப் பாவத்தைப் போக்கிக் கொள்ள, சித்தநாதரை வழிபட்டு அவரருளைப் பெற்று, அங்கேயே சிவநிஷ்டையில் ஆழ்ந்திருந்தனர்.

கோபத்திற்குப் பெயர்போன துர்வாச மகரிஷி நர-நாராயணர்களுடைய பர்ணசாலைக்கு வந்தார். இருவரும் சிவ தியானத்தில் ஆழ்ந்திருந்ததால் இவரை உபசரிக்க முடியவில்லை. வந்தது கோபம் முனிவருக்கு. 'பிடி சாபம்'

என்று முழங்கி 'நீங்கள் பறவைகளாகப் போகக் கடவீர்' என்று சபித்து விட்டார்.

தெரியாமல் செய்த பிழையை மன்னித்தருளும்படி நர-நாராயணர்கள் வேண்ட, வழக்கப்படி சாப விமோசனமும் கிடைத்தது. நாரையாகப் பிறந்த நாராயணர் வியாக்ரபாதரைத் தரிசித்து சாபம் நீங்கப் பெற்றார். அத்தலம்தான் நாரையூர். நரனோ, நரையான் என்ற பறவையாகப் பிறந்து, சித்தீச்சரப் பெருமானை வழிபட்டு பழைய வடிவம் பெற்றார். கருவறை மண்டபத்தின் பின்புறம், லிங்கோற்பவருக்குப் பக்கத்தில் ஒரு பறவையின் சிற்பம் காணப்படுகிறது. அது நரையான் பறவை உருவத்திலிருக்கும் நரனின் சிற்பமாகக் கருதுகிறார்கள்.

ரகுகுணன் என்ற பாரத வம்சத்து மன்னன், மாயூரத்தை யடுத்துள்ள கமண்டலி நதிக்கரையில் கோர தவம் புரிந்து ஜடபாதர் என்னும் முனிவரின் தரிசனத்தைப் பெற்றான். அவரிடமிருந்து அனிமா முதலிய சித்திகளைப் பெற்று, கோரசித்தர் என்ற காரணப் பெயரைப் பெற்றான். கோரசித்தர் பவழமல்லிக் காடாக இருந்த திருநரையூர் வந்து, பெருமானை வழிபட்டு மேலும் பல சக்திகளைப் பெற்றார். அவரது சிற்பமும் கோயிலில் உள்ளது.

ஏரண்ட முனிவரின் சீடர், நிதாகர். அவர் கோர சித்தருக்குத் தொண்டு புரிந்து வந்தார். நிதாகருக்கு மேதாவி முனிவர் சீடரானார். எப்படி?

மேதாவி முனிவர் சிவத்தலங்களைத் தரிசனம் செய்து கொண்டு வருகையில், திருவீழிமிழலைக்குச் சென்றார். அங்கு தவம் புரிந்து கொண்டிருந்த காத்தியாயனரிடம் சிவப்பேறு கிடைப்பதற்கான வழியைக் கேட்க, அவர் சித்தீச்சரத்தின் பெருமைகளையும், நிதாகர் முனிவரின் சக்திகளையும் கூறி இவரை அங்கு அனுப்பி வைக்க,

நிதாகர் முனிவர் இவரைச் சீடராக ஏற்றுக் கொண்டு சித்தநாதரை தஞ்சம் புகும்படி பணித்தார். "பெருமானின் அருளால் ஸ்ரீலட்சுமிதேவி உன்னை மகளாக வந்தடைவாள். அவளை நீ கண்ணும் கருத்துமாக வளர்த்து வா. பின்னர் திருமாலே தேடி வந்து உன் வளர்ப்புப் பெண்ணை திருமணம் செய்து கொள்வார்" என்றும் கூறினார் நிதாகர் முனிவர்.

காட்சி மாறுகிறது. ஸ்ரீவைகுண்டத்தில் திருமாலும் லட்சுமிதேவியும் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருக்கின்றனர். ஆட்டத்தைப்பற்றி இருவருக்குமிடையே வாக்குவாதம் ஏற்படுகிறது. வாதமும் எதிர்வாதமும் முற்றவே, திருமாலுக்குக் கணவருக்குரிய கோபம் வருகிறது. லட்சுமிக்குச் சாபமிட்டு விடுகிறார். அவள் பூமியில் சாதாரணப் பெண்ணாகப் பிறக்க வேண்டும் என்று சபித்தவர், அதற்கு விமோசனமும் கூறுகிறார். பூலோகத்திற்கு வந்து லட்சுமிதேவியைத் திருமணம் புரிந்து கொள்வதாகச் சமாதானப்படுத்துகிறார். சிவபெருமானாகட்டும், மகாவிஷ்ணுவாகட்டும், இம்மாதிரி லீலைகள் புரிவதில் தனி இன்பம் காண்கின்றனர். ஊடலும் கூடலும் தெய்வங்களுக்கும் இன்றியமையாதவை!

காட்சி மாறுகிறது. ஒருநாள் திருநரையூரில் நீர் நொச்சி என்ற வஞ்சு மரத்தடியில் லட்சுமி பிராட்டியார், ஒரு பெண் குழந்தையாகக் காணப்பட்டாள். அக்குழந்தையைக் கண்ட மேதாவி முனிவர் ஆச்ரமத்திற்கு எடுத்துச் சென்று தம் மகளாகவே நினைத்துப் பாசமும் பரிவும் காட்டி வளர்த்து வந்தார். வஞ்சு மரத்தடியில் கிடைத்த குழந்தையாதலால் அவள் வஞ்சுளவள்ளி என்ற திருநாமத்துடன் விளங்கினாள்.

திருமால் முன்பு லட்சுமி தேவிக்கு வாக்களித்தபடி பூலோகத்திற்கு ஸ்ரீநிவாசனாக வந்தார். ஆனால், அவ

ருக்கு லட்சுமி எங்கு குழந்தையாகப் பிறந்து மங்கையாக வளர்ந்து வருகிறாள் என்பது தெரியவில்லையாம்! தவியாய்த் தவித்திருக்கிறார். பாவம்! சுவாமியின் ஏக்கம் கருடாழ்வருக்குப் புரியாமல் இருக்குமா? எங்கெல்லாமோ பறந்து திரிந்து இறுதியில், திருநறையூரில் அவள் வஞ்சுள வல்லியாக வளர்ந்து வருவதை அறிந்து, அச்செய்தியை ஸ்ரீநிவாசனிடம் சொன்னார்.

ஸ்ரீநிவாசப் பெருமான் தனது லீலையைப் பூர்த்தி செய்யப் புறப்பட்டார். சாதாரண மானிடனைப்போல் ஆச்ரமத்திற்குச் சென்று தாகத்திற்கு நீர் கேட்டார். முனிவர் கொண்டுவந்து கொடுத்ததை வாங்கிக்கொள்ளா மல் கன்னிப் பெண்ணின் கையால் தீர்த்தம் பருகுவ தென்று விரதம் ஏற்றுக் கொண்டிருப்பதாகக் கூறுகிறார். முனிவரும், வஞ்சுளவல்லியிடம் நீர் கொடுத்தனுப்புகிறார். தனிமையில் இருக்கும் பெண்ணின் கையைப் பற்றுகிறார் பெருமாள் விளையாட்டாக. 'ஐயோ, அப்பா! வாருங் களேன், வந்து இந்த அக்கிரமத்தைப் பாருங்களேன்' என்று அலறினாள் மங்கை. மேதாவி முனிவர் ஓடோடி வந்து, அவனைச் சபிப்பதற்காகக் கோபத்துடன் கையை ஓங்கினார். அப்போது சங்கு சக்ர கதா பாணியாகப் பெருமாள் காட்சி தந்து, முனிவருக்கு அருளாசி வழங்கு கிறார். பெண்ணின் கைத்தலம் பற்றியதால், அவளைத் திருமணம் செய்து கொண்டு அந்த ஊரிலேயே தங்கி விடும்படி முனிவர் கேட்க, ஸ்ரீநிவாசனும் பிராட்டியுடன் அங்கேயே எழுந்தருளுகிறார்.

திருமாலுக்கு மாமனார் உறவுமுறையான மேதாவி முனிவரின் சிற்பம் சித்தநாதர் கோயில் கருவறை மண்ட பத்தின் தென்புறம் காணப்படுகிறது.

இந்தத் திருக்கல்யாணத்தின் காரணமாக, திருநறை யூருக்கு நாச்சியார் கோயில் சம்பந்தி இல்லம் ஆகிறது. எனவே, இவ்விரண்டு கோயில்களுக்கும் ஏதாவது

தொடர்பு இருக்கிறதா என்று பரமேச்வர குருக்களிடம் விசாரித்தேன்.

"ஓ! இருக்கிறதே. மார்கழி தெப்பத்தன்று சுவாமி புறப்பட்டு நாச்சியார் கோயில் போகிறார் குளக்கரையில் எழுந்தருளிவிட்டு, கோயில் மரியாதைகளைப் பெற்றுக் கொண்டு திரும்புகிறார். திருவாதிரை அன்று நடராஜர் புறப்பாடாகி நாச்சியார் கோயில், மண்டகப்படி மரியாதைகளைப் பெற்றுக் கொண்டு திரும்புகிறார். பின்னாலேயே நாச்சியார் கோயில் பட்டாச்சாரி இந்தக் கோயிலுக்கு வருவார். சம்பந்தி வீட்டிலிருந்து வருபவர் ஆயிற்றே! அவருக்குக் கோயில் மரியாதைகள் எல்லாம் முறைப்படி செய்து வைத்து அனுப்பி வைப்போம்" என்றார் அவர்.

திருநறையூர்க் கோயில் தஞ்சை மாவட்டத்தில் உள்ள பழம்பெரும் கோயில்களில் ஒன்று. பெரிய கோபுரமும் பெரிய மண்டபங்களும் கொண்டது. ஆனால் பல கோயில்களைப் போலவே, இதுவும் திருப்பணி செய்யப் பட வேண்டிய பரிதாபநிலையிலுள்ளது. .பல இடங்களில் காரை பெயர்ந்து போயிருக்கிறது. அநேக சிலைகள் பின்னமாகிப் போயிருக்கின்றன. குடமுழுக்காகிக் கிட்டத் தட்ட இருபத்தைந்து வருடங்கள் ஆகப்போகின்றன.

## நாச்சியார் கோயில்

ஆலயங்களின் பெயர்களிலேயே ஊர்கள் அமைவதுண்டு. மாரியம்மன் கோயில், பசுபதி கோயில், வைத்தீச்வரன் கோயில், சிங்கப்பெருமாள் கோயில், நாச்சி ய கோயில் - இவை சில உதாரணங்கள். திருநறையூர் என்பதைவிட 'நாச்சியார்கோயில்' என்ற பெயரே தற்காலத்

தில் புகழ் அடைந்துள்ளது. ஸ்ரீநிவாஸப் பெருமாள் நாச்சியாரைத் தேடிக்கொண்டு வந்து திருமணம் செய்து கொண்டதோடு, மனைவியின் ஊரிலேயே தங்கியும் விட்டதால் இக்கோயிலில் நாச்சியாருக்குச் சிறப்பிடம் தரப்பட்டிருக்கிறது. மூலஸ்தானத்தில் ஸ்ரீவஞ்சுளவல்லித் தாயாருடன் ஸ்ரீநிவாசன் ஸ்ரீவாசுதேவனாகவும் திருமணக் கோலத்துடன் சேவை சாதிக்கிறார். வரப்பிரசாதியான தாயாருக்கு முக்கியத்துவம் தரப்படுவதற்கு அடையாள மாக சேர்த்தியாசனத்தில் பெருமாளைவிட நாச்சியார் சற்று முன்னால் எழுந்தருளியிருப்பதைக் காணலாம். இங்கு சகல மரியாதைகளும் முதலில் நாச்சியாருக்குத் தான். இந்தக் கோயிலில் பெருமாளும் தாயாரும் ஒரே ச[illegible]ல் எழுந்தருளியிருப்பது தனிச் சிறப்பாகும்.

[illegible]றையில் பஞ்சவ்யூகங்களோடு காட்சி தருகிறார் [illegible]ளாப் பெருமாள். பிரும்மதேவன், பிருத்யும்னன், பலராமன், அநிருத்தன், புருஷோத்தமன் இந்த ஐவரும் பெருமாளுக்காகப் பிராட்டியைத் தேடியலைந்தவர்களா யிற்றே! இவர்கள் பல காடுகளில் தேடியும் பிராட்டியைக் காணாமல் களைத்துப் போய் மேதாவி முனிவரின் ஆசிர மத்தில் இளைப்பாறிக் கொண்டிருந்தபோதுதான் கருடாழ் வார் ஆகாயத்திலிருந்து பார்த்தார். கீழிறங்கி வந்ததும் அங்கு லட்சுமிதேவி வஞ்சுளவல்லியாக வளர்ந்து வரும் உண்மையை அறிந்து பெருமாளிடம் கூறினார்.

ஸ்ரீநிவாசப் பெருமாளும் வஞ்சுளவல்லியும் திருமணம் புரிந்து கொள்ளக் காரணமாக இருந்த வினதாசுதனான பட்சிராஜனுக்கும் நாச்சியார் கோயிலில் சிறப்பிடம் தரப் பட்டிருப்பது நியாயமே. கருவறைக்குச் சற்றே முன்னால் தனிச்சந்நிதியில் கருடாழ்வார் எழுந்தருளியிருக்கிறார். அந்தக் கல் கருடமூர்த்தி மிகமிக அழகாக இருக்கிறது. உற்சவ காலத்தில் அவரே பெருமாளுக்கு வாகன மாகிறார். இந்தப் புதுமையும் தனிச்சிறப்பும் வேறெந்த திவ்ய தேசத்திலும் கிடையாது.

மார்கழி மாத, பங்குனி மாத உற்சவங்களின்போது நாலாம் திருநாள் கல்கருடன் புறப்பாடாகிறார். திருச் சந்நிதியிலிருந்து அவரை வாகன மண்டபத்திற்கு அழைத்து வருவது தரிசித்துப் புண்ணியம் பெற வேண் டிய அரிய காட்சியாகும். அந்தப் புறப்பாட்டில் நிகழும் ஓர் அதிசயம் அனைவரையும் பிரமிக்க வைக்கிறது. கருவறையிலிருந்து நான்கு பேர் எளிதாக அவரைச் சுமந்து வந்து விடுகிறார்கள். அப்போது அத்தனை லேசாக இருக்கிறார். பின்னர், அவரைத் தாங்கிச் செல்ல எட்டு பேர் தேவைப்படுகிறது. சற்றுத் தொலைவு சென்ற தும் பளு இன்னும் அதிகமாகிறது. அப்போது பதினாறு பேர் சேர்ந்தால்தான் அவரைச் சுமக்க முடியும். பெருமாளை முதுகில் தாங்கிக்கொண்டு திருக்கோயிலுக்கு வெளியே வந்து வீதி உலா புறப்படும்போது அந்தக் கல் கருடனை 128 பேர் சுமந்து செல்கிறார்கள்! இவ்வாறு படிப்படியாக அவரது கனம் அதிகரித்துக் கொண்டு போகும் அதிசயம் இத்தலத்தின் பெருமையைப் பன்மடங் காக்குகிறது.

இங்கு கருடாழ்வார், பூஜைக்கு உரியவராக விளங்கு கிறார். அவர் பிரார்த்தனைக்கு உரியவராக இருப்பதும், ஆறுகால பூஜைகளுடன் ஆராதிக்கப்படுவதும் தனிச் சிறப்புகளாகும்.

சாதாரண மானுடனாக வந்து வஞ்சுளவல்லியைத் திருமணம் செய்து கொண்டதாலோ என்னவோ ஸ்ரீமத் நாராயணன் இங்கு இரு கரங்களோடு எழுந்தருளியிருக் கிறார். திருமங்கையாழ்வாருக்கு சுவாமியே சமாச்ரயணம் செய்து வைத்ததால் ஆழ்வாரால் 'நம்பி' என்று மங்களா சாசனம் செய்யப்பட்டவர்.

'செம்பியன் கோச்செங்கணான் சேர்ந்தகோயில்

திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே'

என்று திருமங்கையாழ்வார் இத்திருக்கோயிலுக்கு நம்மையெல்லாம் அன்போடும் அருளோடும் அழைக்கிறார். இது ஒரு மாடக்கோயில். படிகளேறிச் சென்றுதான் பெருமாளை தரிசிக்க வேண்டும். கோபுர வாயிலில் நுழைந்ததுமே திருச்சந்நிதியைச் சேவிக்கும்படி அதன் அமைப்பு உள்ளது. மூலஸ்தானம் சிறு குன்றுபோல் இருப்பதால் இதற்கு 'சுகந்தகிரி' என்ற பெயர் வழங்கப் படுகிறது.

இந்தக் கோயிலின் கோபுரமும் மதிற்சுவரும், திருமேணிமுத்தாறு என்றழைக்கப்படும் திருக்குளமும் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றன.

இங்கு ஆவணி மாதம் விசாக நட்சத்திரத்தன்று திருக்கல்யாணம் நான்கு நாட்கள் வெகு விமரிசையாக நடைபெறுகிறது. ஆண்டு தோறும் இரு உற்சவங்கள். மார்கழி மாதம் வைகுண்டஏகாதசிக்குத் தெப்போற்சவம். பங்குனி மாதம் திருத்தேர்.

தெற்கு வெளிப் பிரகாரத்தில் ஸ்ரீ ஆஞ்சநேயமூர்த்தியைத் தரிசிக்கிறோம். மேற்கில், ஒருபுறம் ஸ்ரீ சக்கரத்தாழ்வாரும், மறுபுறம் ஸ்ரீ நரசிம்மமூர்த்தியும் வடிக்கப் பட்டிருக்கும் ஓர் அழகிய சிலா வடிவம் இருக்கிறது. ஆண்டு தோறும் இச்சந்நிதியில் சுதர்சனஹோமம் நடைபெறுகிறது.

உட் பிரகாரத்தில் யோக நரசிம்மர், லட்சுமி நரசிம்மர் அரங்கநாதர், வரதராஜர், ஆஞ்சநேயர் மூர்த்திகள் உள்ளன.

நாச்சியார் கோயில், சிவ, வைணவம் தவிர மத்வ மதத்திற்கும் தொடர்பு கொண்ட ஒரு தலம் என்று நாச்சியார் கோயிலைச் சேர்ந்த் எம். சாந்தா என்ற சகோதரி எனக்கு எழுதியுள்ள கடிதத்தில் குறிப் பிட்டிருந்தார். திருக்குளத்தின் கிழக்கே, உத்ராதிமாடத்

தின் நிர்வாகத்தின் கீழுள்ள ஒரு மடத்தில் ஸ்ரீ சத்யாபி நவதீர்த்தர் என்ற மகானின் பிருந்தாவனம் இருப்பதாக வும், அவர் மேதாவி மகரிஷியின் மறு அவதாரமாகக் கருதப்படுவதாகவும் கூறியுள்ளார். பல்லாண்டுகளுக்கு முன், கல்யாண உற்சவத்தின்போது பெருமாளும் நாச்சி யாரும் இந்த மடத்திற்கு எழுந்தருளும் பழக்கம் இருந்து வந்ததாகவும் கூறியுள்ளார். அந்த மடம் தற்போது கிலமாகி, பாழடைந்து போயிருப்பதைக் குறித்துக் கண்ணீ ரும் வடித்திருக்கிறார்.

மூலஸ்தானத்திலுள்ள விக்ரகங்கள் முன்பு சுதையால் மூடப்பட்டிருந்தனவாம். 1977-ம் ஆண்டில் திருப்பணிகள் நடந்தபோதுதான் அது கண்டு பிடிக்கப்பட்டு, அகற்றப் பட்டதென்றும், அதனுடனே இருந்த உருவச்சிலைகளே தற்போது ஆராதிக்கப்பட்டு வருவதாகவும் அறிந்தேன்,

நாச்சியார் கோயிலில் அளிக்கப்படும் அமிருதக் கலசப் பிரசாதம், திருப்பதி லட்டுவைப் போன்று புகழ் பெற்றது என்றும் கேள்விப்பட்டேன்.

# திருச்சேறை

குடவாசல் ஸ்ரீகோணேச்வர சுவாமி கோயிலுக்கு வாயு மூலையில் இரண்டு நாழிகை வழி தூரத்தில் சார க்ஷேத்திரவாசியாக சிவபெருமான் வீற்றிருப்பதாகக் குடவாசல் தல புராணம் கூறுகிறது. சாரக்ஷேத்திரத்தின் மறு பெயர் திருச்சேறை. நாச்சியார் கோயிலுக்குத் தெற்கே ஐந்தாவது கிலோ மீட்டரில் உள்ளது.

இத்திருத்தலத்தின் பெருமைகளைப் பரமசிவன் நாரத மகரிஷியிடம் கூறுகிறார்:

ஸ்ரீ மகாவிஷ்ணு கல்ப முடிவில் பிரும்மாவை அழைத்து, "நான்முகனே! மண் எடுத்து ஒரு குடம் செய்து, அதில் நான்கு வேதங்களையும், அனைத்து சாஸ்திரங்களையும் இதிகாச புராணங்களையும் வைத்து, பாரதக் கண்டத்தில் ஸ்தாபனம் செய்யுங்கள்" என்று பணித்தார். நான்முகனும் பல தலங்களுக்குச் சென்று புனித மண் எடுத்து ஒருகுடம் செய்தார். ஆனால் அந்தக் குடம் உடைந்து போயிற்று. அந்தக் குடம் மட்டுமல்ல; அடுத்தடுத்துச் செய்யப்பட்ட பல குடங்களும் அம் மாதிரியே விரிசல் கண்டு உடைந்து போய்க் கொண் டிருந்தன.

பிரும்மாவுக்கு அதன் காரணம் புரியவில்லை. கலக்கமுற்றார்.

எங்கெல்லாமோ சென்று, தேடித் தேடி எடுத்து வந்த மண்ணால் செய்த குடங்கள் உடைந்துபோன செய் தியை மகாவிஷ்ணுவிடம் எடுத்துக் கூறினார் பிரும்மா. திருமால் சிரித்துக் கொண்டார்.

"எமக்காக அமைந்துள்ள 108 திவ்ய தேசங்களில் திருவரங்கம், திருப்பதி, காஞ்சி, திருநாராயணபுரம், ஸ்ரீமுஷ்ணம், நைமிசாரண்யம், விருஷபாத்ரி, கும்ப கோணம், திருவனந்தபுரம், அயோத்தி, பதிரிகாசிரமம், சாரக்ஷேத்திரமான திருச்சேறை ஆகிய பன்னிரண்டும் எமக்கு மிகவும் பிரியமானவை. அங்கு பராசர, வியாச, பிருகு, மார்க்கண்டேய, சௌனக, ருத்ர, பிரும்ம, ரோமச, சாரதீர்த்தம் என்ற ஒன்பது புண்ணிய தீர்த்தங்கள் உண்டு. இவற்றில் மிகச் சிறந்தது சாரதீர்த்தம் என்ற திருக்குளம். அதில் நீராடி, அதன் மண்ணை எடுத்துத் தாங்கள் குடம் செய்தால், அது உடையாமல் பூரணமாக இருக்கும்" என்று அருளினார்.

பிரும்மா சாரபுஷ்கரணியில் மண் எடுத்துக் குடம் செய்து அதில் வேத சாஸ்திரங்களையும், இதிகாச புராணங்களையும் பத்திரப்படுத்தி, பிரளயத்தின்போது காப்பாற்றியதால், இதற்குச் சாரக்ஷேத்திரம் என்ற திருநாமம் ஏற்பட்டது. அந்தக் கும்பம் நிறுவப்பட்ட இடம் கும்பகோணம் என்றும் அதன் வாசல்தான் குட வாசல் என்றும் கூறப்படுகிறது.

திருச்சேறையில் உள்ள சிவன் கோயிலும் பெருமாள் கோயிலும் புராணச் சிறப்புப்பெற்றவை. சிவபெருமானை 'செந்நெறியப்பர்' என்று அழைக்கிறார்கள். செம்மை தரும் நெறியை—முக்தி நெறியை அளிக்கும் அப்பனல் லவா அவர்?

பெருமாளை சாரநாதர் என்றும் தாயாரை சாரநாயகி என்றும் விமானத்தை சாரவிமானம் என்றும் தீர்த்தத்தை சாரபுஷ்கரணியென்றும் திருத்தலத்தை சாரக்ஷேத்திரம் என்றும் அழைப்பதாலோ என்னவோ, இங்கு உறையும் சிவபெருமானும் 'சார பரமேச்வரர்' என்று புகழ் பெற்றுள் ளார். அம்பிகை ஞானவல்லியம்மை.

சிவாலயத்தை உத்தமர் கோயில் என்றும் உடையார் கோயில் என்றும் கூறுகிறார்கள். மார்க்கண்டேய மகரிஷி இத்தலத்தில் ஒரு சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டிருக்கிறார். அந்தச் சிவலிங்கமும், அவரது திரு வுருவமும் உட்பிரகாரத்தில் காணப்படுகின்றன.. தௌமிய மகரிஷியும் இத்தலத்தில் வழிபட்டிருக்கிறார் மாசி மாதம் 13, 14, 15 தேதிகளில் விடியற்காலை சூரிய கிரணங்கள் செந்நெறியப்பரின் மீது படுகின்றன. அப் போது சூரிய பூஜை நடைபெறுகிறது. ஒரு காலத்தில் வைகாசி விசாகப் பெருவிழா இங்கே மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டிருக்கிறது.

திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளும், திருநாவுக் கரசு நாயனாரும் திருச்சேறைத் திருத்தலத்தையும், செந்

நெறியப்பரையும் பரவசத்துடன் பாடியுள்ளனர். 'சடை முடி அடிகள் தம் வள நகர் சேறையே' என்று கூறிய சம்பந்தப் பெருமான், இறைவனது திருவிளையாடல்கள் சிலவற்றை இனிது விவரித்துள்ளார். அப்பர் அடிகளோ, 'சேறைச் செந்நெறிச் செல்வனார்' என்று ஒவ்வொரு பாடலிலும் அப்பனைப் புகழ்ந்து பாடியுள்ளார். திருக் குறுந்தொகையில்'என்ன மாதவம் செய்தனை நெஞ்சமே, மின்னுவார் சடைவேத விழுப்பொருள் செந்நெலார் வயல் சேறையுள் செந்நெறி மன்னுசோதி நம்பால் வந்து வைகவே' என்று போற்றுகிறார்.

'இலங்கு சேறையில் செந்நெறி மேவிய அலங்கனார். உளர். எனவே நான் எதற்கும் அஞ்ச வேண்டுவதில்லை அப்பன் அருகில் இருக்கும்போது எனக்கு எமபயமும் கிடையாது!' என்று திருநாவுக்கரசர் கூறும்போது நம் உள்ளத்தில், செந்நெறியப்பர் நிச்சயம் துணை நிற்பார் என்ற நம்பிக்கை பிறக்கிறது.

கிழக்கு நோக்கியுள்ள திருக்கோயிலின் முன்னுள்ள திருக்குளத்திற்குப் 'பிந்துசுதா' என்று பெயர். அமுதத்தின் ஒரு சொட்டு அதில் விழுந்ததாம்.

சாரநாதப் பெருமாள் கோயிலின் ராஜகோபுரம், அழகும் கம்பீரமும் வாய்ந்தது. சாரபுஷ்கரணியும் அதன் மேற்கரையிலுள்ள கோயிலின் அமைப்பும், ஓவியச் சிறப்புடன் கூடிய அருமையானதொரு காட்சியாக விளங்குகிறது.

ஸ்ரீ சாரநாதப் பெருமாளுக்கும், ஸ்ரீசாரநாயகிக்கும் தனித் தனி சந்நிதிகள். மூலஸ்தானத்தில் நின்ற திருக் கோலத்துடன் தரிசனம் தரும் பெருமாளுக்குத் தென்புறம் மார்க்கண்டேயரும் வடபுறம் காவேரித் தாயாரும் சிலா வடிவங்களாக இருக்கின்றனர். ஸ்ரீதேவி, பூதேவி, நீளா தேவி சமேதராய் உற்சவமூர்த்தி விளங்குகிறார்.

மாமதலைப்பிரான் — பாலகிருஷ்ணன் — தவழும் திருக் கோலத்தில் நம் நெஞ்சைக் கொள்ளை கொள்கிறார்.

காவேரித் தாயார் சாரபுஷ்கரணியின் தென்மேற்கு மூலையில், தலவிருட்சமான அரசமரத்திற்கு அருகில் சின்னக் கண்ணனை அணைத்தவாறு அமர்ந்திருக் கிறாள். இத்திருத்தலத்தின் பெருமையைக் காவேரி யன்னை பற்றிய புராண வரலாறு மேலும் உயர்த்துகிறது.

ஒரு சமயம் விந்திய மலையின் அடிவாரத்தில் கங்கை யமுனை, கோதாவரி, சரஸ்வதி, நர்மதை, சிந்து, காவேரி ஆகிய ஏழு கன்னிகையர் விளையாடிக் கொண்டிருந் தனர். அந்த வழியாகச் சென்ற விச்வாவசு என்ற கந்தர் வன் இவர்களைப் பார்த்துப் பொதுவாக நமஸ்காரம் செய்துவிட்டு, அங்கிருந்து நகர்ந்தான். அவன் சென்ற பிறகு, 'கந்தர்வன் யாருக்கு நமஸ்காரம் செய்தான்?' என்ற விவாதம் தொடங்கியது. அதற்கு முடிவு காண முடியாமல் போகவே அந்தக் கந்தர்வனையே கேட்டு விடுவது என்று முடிவாயிற்று.

உத்தராயண காலத்தில் வடபுலம் திரும்பிய கந்தர்வ னிடம் அந்தக் கன்னிகையர், "நீ யாருக்கு நமஸ்காரம் செய்தாய்?" எனக் கேட்டனர். எந்தப் பெயரைச் சொன் னாலும், மற்ற அறுவரும் சபிப்பார்களே என்ற அச்சத் தில், அந்தக் கந்தர்வன் சாமர்த்தியமாக 'உங்களில் யார் பெரியவரோ அவருக்கு என் நமஸ்காரம்' என்று கூறித் தப்பித்துக் கொண்டு விட்டான். இதைக் கேட்டதும், கங்கையையும் காவிரியையும் தவிர மற்றவர்கள் விலகிக் கொண்டு விட்டனர். கங்கையும் காவிரியும் தங்களிருவர் களில் யார் பெரியவள் என்று பிரும்மாவிடம் கேட்டுத் தெரிந்துகொள்வது என்று தீர்மானித்து நான்முகனிடம் சென்றனர்.

அப்போது பிரும்மா கூறினார்:

"மகாவிஷ்ணு வாமனராய் வந்து மகாபலியிடம் மூன்றடி மண் யாசித்து, பின்னர் விச்வரூபம் எடுத்து, முதலிரண்டு அடிகளால் ஈரேழு உலகங்களையும் அளந்துவிட்டு, மூன்றாவது அடியால் மகாபலியை பாதாளத்தில் அழுத்தியபோது, அத்திருப்பாதத்தைப் புண்ணிய தீர்த்தத்தால் அபிஷேகம் செய்தேன். அது பெருக்கெடுத்து ஓடி புனித கங்கை ஆயிற்று. எனவே கங்கையே அனைத்து நதிகளையும் விட சிறப் பெய்தியவள்."

இதைக் கேட்டதும் காவிரி தலை கவிழ்ந்து போனாள். மேற்கு மலைத் தொடர்ச்சியைச் சேர்ந்த ஸஹ்யபர்வதத்தில், பிரும்மாவைக் குறித்துக் கடுந்தவம் இருந்தாள். இவள் தவத்திற்கு இரங்கிய நான்முகன் இவள் முன் தோன்றி, "உனக்கு கங்கைக்குச் சமமான பதவி தருகிறேன்" என்று கூறினார். ஆனால் காவேரி திருப்தியடையவில்லை. தனக்கு கங்கையைவிட உயர்ந்த ஸ்தானம் வேண்டும் என்று மன்றாடிக் கேட்டாள். "அதைத் தர எனக்கு அதிகாரமில்லை. நீ மகாவிஷ்ணு விடம் மனுப்போட வேண்டும். எனவே சாரக்ஷேத்திரம் சென்று, சாரபுஷ்கரணியின் கரையில் அமர்ந்து தவமிருந் தால் உன் எண்ணம் நிறைவேறும்" என்று கூறி மறைந்து விட்டார்.

அதன்படி அத் திருக்குளக்கரையில் காவேரி நெடுங் காலம் கடுந்தவம் இருந்தாள். இறுதியில் மகாவிஷ்ணு ஒரு தை மாதம், புஷ்ய நட்சத்திரமும் குரு வாரமும் பௌர்ணமியும் கூடிய சுபதினத்தில் அவள் முன் தோன்றி னார். எப்படி? யசோதை இளஞ்சிங்கமாய், மதலைப் பிரானாய் தவழ்ந்து வரும் சின்னக் கண்ணனாய் வந்து உள்ளத்தைக் குளிர்வித்தார். ஆனந்தக் கண்ணீர் பெருக கரம் குவித்துப் பிரார்த்தித்தாள் காவேரி: "கண்ணா உன் சுயரூபத்தை நான் தரிசிக்கலாகாதா?"

பெருமாள் காவேரிக்கு கருடாரூடராயும் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி சமேத சங்கு சக்கர கதாபாணியாயும் சேவை சாதித்தார். பின்னர் மின்னல் வேகத்தில் தசாவ தாரக் கோலங்களைக் காட்டியருளினார். காவேரி யன்னை எம்பிரானின் எழிற்பாதங்களில் தண்டம் சமர்ப் பித்தாள்.

''உன் விருப்பங்களைக் கூறு'' என்றார் திருமால் சட்டென்று கேட்டாள் காவேரி: ''சுவாமி! தாங்கள் சாரக்ஷேத்திரத்திலேயே என்றென்றும் வாசம் செய்ய வேண்டும். இங்கு வசிக்கும் சகல ஜீவராசிகளுக்கும் சுவர்க்க பதவி தந்தருள வேண்டும். எனக்குக் கங்கை யிலும் மேலான பதவியை அளிக்க வேண்டும்!''

காவேரியின் மூன்று பிரார்த்தனைகளும் நிறைவேற் றப்பட்டன. பின்னர் 'கங்கையிற் புனிதமாய காவேரி' என்று தொண்டரடிப்பொடி ஆழ்வார் மங்களாசாசனமும் செய்து வைத்தார்.

மார்க்கண்டேயர் இத்தலத்தில் சிவபெருமானை வழிபட்டது போலவே பெருமாளையும் குறித்துத் தவ மியற்றி, அவரது அருளாசியைப் பெற்றார்.

சத்தியகீர்த்தி என்ற சோழ தேசத்தரசன் சாரபுஷ் கரணியில் தன் பத்தினியுடன் நீராடி, அரசமரத்தை வலம் வந்து, பெருமானை வழிபட்டு சத்புத்திரனைப் பெற்று ஆலயத்தைப் புதுப்பித்து, பல திருப்பணிகள் செய்து இறுதியில் விஷ்ணுபதம் அடைந்தான்.

இந்தக் கோயிலைப்பற்றி செவி வழி வந்துள்ள ஒரு கதையுண்டு.

தஞ்சையை ஆண்ட அழகிய மணவாள நாயக மன்னன் காலத்தில், ராஜமன்னார்குடியிலுள்ள ஸ்ரீராஜ கோபால சுவாமி ஆலயத் திருப்பணிக்காக, கருங்கல்

வரவழைக்கப்பட்டது. அது திருச்சேறை வழியாக வந்தது. அப்போது அக்கோயிலைப் புதுப்பிக்க எண்ணிய அமைச்சர் நாசபூபாலன் வண்டிக்கு ஒரு கல்லாகப் பெருமாள் கோயிலில் இறக்கிக் கொண்டான். இது அந்தக் காலத்து ஊழல்! எதிரிகள் அரசனிடம் மனுக் கொடுத்தார்கள். அரசன் நேரில் வந்து விசாரிப்பதாகத் தகவல் வந்தது. இதையறிந்த மந்திரி, அரசரின் மனம் அறிந்து அவரது இஷ்ட தெய்வமான ராஜகோபால சுவாமியை ருக்மிணி பாமா சமேதராய் முன் மண்டபத்தில் எழுந்தருளச் செய்தான். அரசர் வந்ததும், தனது இஷ்ட தெய்வத்தைத் தரிசித்து, மனம் மாறி, அமைச்சரைப் பாராட்டி, ஸ்ரீசாரநாதப் பெருமாளின் அருளைப் பெற்றான்.

# நாலூர் திருமயானம்

திருச்சேறையிலிருந்து குடவாசலை நோக்கிச் செல்லும் பாதையில், இரண்டாவது கிலோ மீட்டரில் நாலூர் என்ற சிற்றூர் இருக்கிறது. அங்கிருந்து ஒரு பர்லாங் கிழக்கில் நாலூர் திருமயானம் என்ற திருத்தலம் இருக்கிறது. அது தற்போது திருமெய்ஞானம் என்றழைக்கப்படுகிறது. சோழர் காலத்தில் இவ்விரு தலங்களும் இணைந்த ஊர்களாகவே திகழ்ந்திருக்கின்றன. பிரம்ம தேயமாக — சதுர்வேதிமங்கலமாக — அறம் வளர்த்த அந்தணர்கள் மானியங்கள் பெற்று வாழ்ந்த ஊர்களாக இவை சிறப்புப் பெற்றிருக்கின்றன. திருஞானசம்பந்தப் பெருமான் இவ்விரு தலங்களையும் இணைத்தே பாடியிருக்கிறார். குடவாயிற்கோட்டத்துடன் இணைந்த

நாலூர் சரித்திரப் புகழும் பெற்றுள்ளது. வேத சாஸ்திரங்களில் ஆழ்ந்த புலமை பெற்றவராகவும், முதலாம் குலோத்துங்கச் சோழனின் சிறந்த படைத்தலைவனாகவும் விளங்கிய பிரமாதிராஜன் என்ற ஞானமூர்த்திப் பிறந்த ஊர் திருநாலூர் ஆகும்.

திருநாலூரில் இருப்பது பிலாசவனேச்வரர் ஆலயம். அம்பாள் பெரியநாயகி. கஜப்ருஷ்ட விமானம். சுயம்பு லிங்கம். அதன் மேற்பகுதி பலாப்பழம் போன்று முள்ளு முள்ளாக இருக்கிறது. தல விருட்சம் பலாமரம். பிலாசவனம் என்றால் புரசுமரக் காடு. பிலாசவனநாதர் கிழக்கே பார்த்து எழுந்தருளியிருக்க, அம்பாள் தெற்கே நோக்கி திருச்சந்நிதி கொண்டிருக்கிறாள். இங்கு சுவாமியை ஆபஸ்தம்ப மகரிஷி வழிபட்டிருக்கிறார். சிவபெருமான் அர்ஜுனனுக்குப் பாசுபதாஸ்தரம் கொடுத்தருளிய புராணத்துடன் தொடர்பு கொண்ட தலம் இது.

அக்காலத்தில் திருத்தலங்களாக விளங்கி, திருவிழாக்களோடு ஒளிர்ந்து, தற்போது ஒளி குன்றி, கவனிப்பாரற்று இருக்கும் கோயில்களில் நாலூர் ஆலயமும் ஒன்றாகும். குருக்கள் வெளியூரிலிருந்து வந்து போகிறார். நாம் செல்லும்போது அவர் கோயிலில் இருப்பார் என்பது நிச்சயமில்லை. பிலாசவனநாதரின் அருளாசிருந்தால் அர்ச்சகரின் தரிசனம் நமக்குக் கிடைக்கும்!

நாலூருக்குக் கிழக்கே ஒரு பர்லாங்கில் நாலூர்திருமயானம் இருக்கிறதென்றாலும் குறுக்கு வழியில் கார் போக முடியாது. எனவே, இரண்டு மூன்று கிலோ மீட்டர் சுற்றிக் கொண்டுதான் செல்ல வேண்டியிருந்தது. மிகவும் சுமாரான கிராமப்புறக் கப்பி பாதைதான். ஊருக்குள் சென்றதும் மேலே நகர முடியாமல் எங்கள் கார் நின்று விட்டது. தெருவில் உளுந்துச் செடிகளைக் காயப் போட்டிருந்தார்கள். அவர்கள் வழக்கப்படி தெருவை ஆக்கிரமித்துக் கொண்டது சரிதான்! எதிர்பாராமல்

காரில் நாங்கள் அங்கு சென்றதுதான் தவறு! எங்கள் தவற்றை உணர்ந்து, இறங்கி, நடந்து கோயிலுக்குச் சென்றோம்.

மொத்தம் ஐந்து திருமயானங்கள். கடையூர் மயானம், காழி மயானம், வீழி மயானம், கச்சி மயானம், நாலூர் மயானம்.

சுவாமியின் திருநாமம் ஞானபரமேச்வரர்; அம்பாள் ஞானாம்பிகை. தல விருட்சம், வில்வ மரம்.

ஒரு காலத்தில் வேத முழக்கங்கள் கலந்த யாகப் புகை வானில் சூழ, தர்மமும் செல்வமும் கொழித்த ஊரின் இன்றுள்ள நிலையைக் காண்பவர் கண்களில் நிச்சயம் குருதி பெருகும். சந்நிதித் தெருவில் குருக்கள் வீடு ஒன்று தான் சற்று உருப்படியாக இருக்கிறது. மற்ற வீடுகள் பாழடைந்து போய்ப் பூட்டப்பட்டிருக்கின்றன. கோயிலுக்குச் செல்லும் வழி படுபயங்கரமாயிருக்கிறது. இருட்டி விட்டால் அந்தப் பக்கம் போகவே நடுக்கமாயிருக்கும்!

முன்பு இருந்த கோபுரம் சிதிலம் அடைந்து விட்டதால் அதை இடித்து விட்டு மொட்டைக் கோபுரமாகக் கட்டிச் சிற்ப மாடம் அமைந்திருக்கிறார்கள். உள்ளே நுழைந்தால் 'குப்'பென்று வௌவால் நாற்றம் மூக்கைத் துளைக்கிறது. ஒரு காலத்தில் பெரிய கோயிலாக இருந்ததற்கான அடையாளங்களை அங்கே காணமுடிகிறது. தற்போது பல இடங்களில் சீலமாகியிருக்கிறது. சுவாமி, அம்பாள், விநாயகர், முருகர் சந்நிதிகள் பழுதுபார்க்கப் பட வேண்டும். திருச்சேறை, ஈ. ஓ. பார்வையில் இருக்கும் இக்கோயிலில், ஓரளவு திருப்பணிகள் செய்து கும்பாபிஷேகம் செய்யப் பெருமுயற்சி செய்யப்பட்டு வருவதாகக் கணேச குருக்கள் கூறினார். அவருடைய பிள்ளை நாகராஜன், ஏதுமறியாத அப்பாவி. அப்பாவுக்கு உதவியாகக் கோயிலில் கற்பூராரத்தி காட்டிக் கொண்டிருக்கிறான்.

இந்தக் கோயிலின் திருப்பணியில் பெரும் அக்கறை காட்டி வருபவர் திருச்சேறையை அடுத்த இஞ்சிக் கொல்லை குஞ்சிதபாதம் ஐயர். கிராமங்களில் வசிக்கும் ஓரிருவர் தங்கள் ஊரிலோ, அடுத்துள்ள கிராமங்களிலோ உள்ள கோயில்களின் அபிவிருத்திக்காகத் தனிப்பட்ட முறையில் தங்களால் முடிந்ததைச் செய்து வருகிறார்கள். ஆனால், அனைவரது முழு ஒத்துழைப்பும் இருந்தாலன்றி சிறிய திருப்பணிகள் செய்வது கூடக் கடினம்தான்.

கிராமத்தைச் சேர்ந்தவர்கள், வெளியூர்களுக்கும் கடல் கடந்து வெளிநாடுகளுக்கும் சென்று செல்வமும் புகழும் ஈட்டி வருகிறார்கள். வறுமையிலும் நோயிலும் வாடும் தங்கள் தாயார்களுக்கு உதவி புரிய ஓடோடி வருவது போல், தாங்கள் பிறந்த கிராமத்தின் இடிந்து போன பழைய கோயில்களைச் சீர்படுத்திக் கும்பாபி ஷேகம் செய்வதற்காக மாதா மாதம் பணம் ஒதுக்கி வைத்து உதவி புரியவேண்டும். இத்தகைய நற்பணியில் ஈடுபட்டுள்ள சிலரை நான் சந்தித்து வருகிறேன். இதை விடச் சிறந்த தர்மமோ, புண்ணியமோ இருக்க முடியாது.

கூடவாசலுக்கு வடமேற்கில் வசிஷ்டாச்ரமம் இருப்ப தாக அந்தப் புராணத்தில் காணப்படுகிறது. பலரிடம் விசாரித்தும் அது எங்குள்ளது என்று என்னால் அறிய முடியவில்லை. இஞ்சிக்கொல்லை குஞ்சிதபாதம் ஐயரிடம் விசாரித்தால் தெரியும் என்று நண்பர் சேதுராமன் கூறியதால், அவரிடம் சென்றேன். அவரும் யோசித்துப் பார்த்துவிட்டு, 'எனக்குப் புலப்படவில்லை. நாலூர் மயானம் கோயில் குருக்களைக் கேட்டுப் பாருங்கள் என்று கூறியதால் கணேச குருக்களிடம் விசாரித்தேன்' அவர், நாச்சியார்கோயிலுக்கும் பூந்தோட்டத்திற்கும் இடையேயுள்ள இரவாஞ்சேரியாக இருக்கலாம் என்றார். ஆனால், அது வேறு திக்கில் உள்ளது. இருப்பினும், அங்கும் சென்று வந்தேன். அப்படியே மணவாளநல்லூர்

சிவன் கோயிலையும் கண்டேன். தரிசிக்க முடியவில்லை; பூட்டியிருந்தது. அர்ச்சகர் எப்போது வருவார் என்று ஒருவருக்கும் தெரியவில்லை. பிராகாரங்களில் முட்செடிகள் மண்டிக் கிடக்கின்றன.

தலபுராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள வசிஷ்டாச்ரமம் எதுவென்று விவரம் அறிந்தவர்கள் எனக்குத் தெரிவிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

குடவாசல் தலபுராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மற்றொரு சிவன்கோயில், ஸ்ரீ கோணேச்வர சுவாமி ஆலயத்திற்குத் தெற்கே வெகு அருகில் உள்ள ஓகை கோயிலாகும். அங்கு பிரணாவாம்பிகையுடன் ஸ்ரீ கைலாச நாதர் உறைகிறார். தட்சிணாமூர்த்திக்குத் தனிச் சந்நிதி உள்ளது. நுழைவாயிலுக்கு இருபுறமும் வீரபத்திரரும் பைரவரும் இருக்கின்றனர். ராஜகோபுரத்தில் இருந்த சாஸ்தா தனியாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறார். சபரி மலைக்குப் போகிறவர்கள் பூஜை செய்வதற்காகச் சிறிய அளவில் பதினெட்டாம் படியும் கட்டி வைத்திருக்கிறார்கள். கோபுரம், முன்மண்டபம் எல்லாம் இடிந்து போயிருக்கின்றன. ராஜகோபுரத்திற்கு அடித்தளம் போட்டது போட்டபடியே இருக்கிறது. ஸ்ரீ கோணேச்வர சுவாமியின் அருட்பார்வை தென்புறம் திரும்புவது எப்போதோ?

## கரவீர நாதர்

குடவாசல் தலபுராணத்தில், ஸ்ரீ அமிருதலிங்கேச்வரர் என்ற கோணேச்வர சுவாமி ஆலயத்தைச் சுற்றிலும் குறிப்பிடப்பட்டுள்ள தலங்களில் கடைசியாக நாம்

தரிசிக்கப்போவது கரவீரநாத சுவாமி ஆலயம். அது குட வாசலிலிருந்து திருவாரூர் செல்லும் பாதையில் எட்டாவது மைலில் உள்ளது. திருவாரூரிலிருந்து சுமார் ஐந்து மைல்; வெட்டாற்றின் கரையிலுள்ளது. சம்பந்தர் தேவாரம் பெற்றுச் சிறப்பெய்தியது. திருநாவுக்கரசு சுவாமிகள் 'காந்தம் கமழுங் கரவீரம்' என்று புகழ்ந்துள்ளார்.

கரவீரநாத சுவாமிக்கு 'பிரும்மபுரீச்வரர்' என்ற திரு நாமமும் உண்டு. ஆவுடையாருடன் சேர்த்து ஆறடி உயரமுள்ள சிவலிங்கம் கௌதம ரிஷியால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. கிழக்கே பார்த்த திருச்சந்நிதி. நாகூர் கடலைப் பார்த்துக் கொண்டிருக்கிறார் சுவாமி. கடற்கரை ஆலயத்திலிருந்து இருபது மைல் இருக்கும். ஆலயத்திற்கு எதிரிலுள்ள ஏரி வற்றிப் போய் விட்டிருக்கிறது.

சுவாமிக்கு வலப்புறம், அன்னை பிரத்யட்சன்னம் பிகையாக எழுந்தருளியிருக்கிறாள். பெரிய வடிவம்.

பிராகாரத்தில் விநாயகரும் சுப்ரமணியரும் கோயில் கொண்டிருக்கிறார்கள். கிழக்குப் பிராகாரத்தில் வடப்புறம் சந்திரன், சனீச்வரர், பைரவர் இருக்க, இடப்புறம் சூரிய தேவன் எழுந்தருளியுள்ளார் நந்தி, தனி மண்டபத்தில் வீற்றிருக்கிறார், அரளிச்செடி, தல விருட்சம்.

இப் பெரிய கோயிலில் திருப்பணிகள் தொடங்கி இருபது வருடங்கள் ஆகின்றன! உண்மைதான். 1960ம் ஆண்டில் திரு. எம். பக்தவத்சலம் அவர்களால் தொடங்கி வைக்கப்பட்டு, திருப்பணிகள் நடைபெற்று வருகின்றன. விமானங்களெல்லாம் பழுது பார்க்கப் பட்டிருப்பது தெரிகிறது. வேலைகள் பாதியில் நின்று விட்டிருக்கின்றன. எப்போது திருப்பணிகள் வெற்றி கரமாக முடிவுற்று, எப்போது குடமுழுக்கு நடைபெறும் என்பது கரவீரநாதருக்கே வெளிச்சம்!

(வழக்கறிஞர் சபா சிதம்பரநாதன் என்னும் மெய் யன்பர், 70வது பக்கத்தில் நான் குறிப்பிட்டுள்ள ஒரு செய் தியை, தன் கடிதத்தில் உறுதி செய்து மேலும் சில விவ ரங்கள்கூறியுள்ளதை இங்கு குறிப்பிட விரும்புகிறேன்...

"நீங்கள் குறிப்பிட்டுள்ள 'அரிசிற்கரைப் புத்தூர்' என்ற அழகாபுத்தூரில் உறையும் சுவர்ணபுரீச்வரர், குடவாயிற் கோயிலுக்குத் தென் மேற்கில் எழுந் தருளியிருக்கிறார். ஆனால், புராணத்திலோ, அவர் மேற்கே ஒரு காத தூரத்தில் இருப்பதாகக் கூறப் பட்டுள்ளது. அப்படியானால், அக் கோயில், குட வாசலுக்கு மேற்கே, பாபநாசம் செல்லும் பாதையில் ஐந்து கல் தொலைவிலிருக்கும் 'ஆண்டான் கோயில்' என்றழைக்கப்படும் 'திருக்கடுவாய்க்கரை தென்புத்தூர்' எனும் ஊரில் அமைந்துள்ள கோயிலாகத்தான் இருக்க வேண்டும். ஏனெனில், இங்குள்ள இறைவனின் திருநாமம் சுவர்ணபுரீச்வரர் எனும் செம்பொன்னாதர். அம்பிகையின் பெயர் 'சிவசேகரி' எனும் சீவாம்பிகை)".

# திருவீழிமிழலை

மயிலாடுதுறையிலிருந்து திருவாரூருக்குச் செல்லும் இருப்புப் பாதையில் உள்ள பூந்தோட்டம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து மேற்கே பத்து கிலோ மீட்டர் தொலை விலுள்ளது திருவீழிமிழலை திருத்தலம். குத்தாலம் ரயில் நிலையத்துக்குத் தெற்கே ஆறு மைல். பேரளம் ரயில் நிலையத்திலிருந்து தென்மேற்கே எட்டு மைல். நாச்சியார் கோயிலிலிருந்தும் செல்லலாம். திருவாரூரிலிருந்தும் கும்பகோணத்திலிருந்தும் இவ்வூருக்குப் பேருந்து வசதி கள் உண்டு.

ஊர் சிறியது; கோயில் பெரியது. சுவாமியின் திருநாமம், நேத்திரார்ப்பணேச்வரர். வீழியழகர் என்று தமிழ்ப் பெயர். அம்பாள், சுந்தரகுசாம்பிகை-அழகிய மாமுலையம்மை.

வீழிச் செடிகள் நிறைந்திருந்ததால் இவ்வூருக்குத் திருவீழிமிழலை என்ற பெயர் ஏற்பட்டது. தலவிருட்சம், வீழிமரம். கிழக்கு நோக்கிய ராஜகோபுரத்துக்கு முன் பெரிய, அழகிய திருக்குளம் உள்ளது.

இது திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த திருக் கோயில். அந்த தேவஸ்தானத்தார் 1982-ல் வெளி யிட்டுள்ள திருவீழிமிழலைத் தல வரலாற்று நூலில் கூறப்பட்டுள்ள தலப் பெருமையை அறிந்துகொள்வோம்.

திருக்கைலாயத்தில் கைலாசபதி பார்வதி சமேதராய் சிவகணங்கள் புடைசூழ, வேதங்களும் ஆகமங்களும் ஒலிக்க திருக்கொலுவீற்றிருக்கிறார்.

அப்போது திருமால் அங்கு வருகை தந்து ஒரு விண் ணப்பம் செய்கிறார்.

"பெருமானே! எனது சக்கரம் சக்தி இழந்து போயி ருக்கிறது. முன்பு தாங்கள் சலந்தரனை வதைத்தருளிய திருச்சக்கரத்தை எனக்குத் தந்தருள வேண்டும்."

அதைப் பெறுவதற்காக, காவிரிக்குத் தெற்கேயுள்ள தேஜிநீவனம் என்ற தலத்தையடைந்து பூஜை செய்யு மாறு திருமாலிடம் சிவபெருமான் கூறினார்.

அவ்வாறே இத்தலத்துக்கு வந்த திருமால் காவிரியை அழைக்க, அது திருவலஞ்சுழியில் அரிசொலாறாகப் பிரிந்து இங்கு தென்திசையில் ஓடிவந்தது. பின்னர், வடக்கு நோக்கிச் சென்று, க்ஷீர நதியோடு (முட்டை யாறு) சங்கமாகிக் கிழக்கே சென்று காரைக்காலுக்கு அருகில் கடலில் கலந்தது.

பின்னர், திருமால் ஒரு தடாகத்தை உண்டாக்கி, அதில் செந்தாமரை மலர்களைத் தோற்றுவித்தார் அதுவே பத்ம தீர்த்தம். பதினாறு சிங்கங்கள் தாங்கு கின்ற விண்ணிழி விமானத்தைக் கொண்டு வந்து அதில் பரமனை எழுந்தருளச் செய்தார். தினந்தோறும் ஆலயத் தின் முன்புறமுள்ள தீர்த்த புட்கரணியிலும் அரிசொல் ஆறு (அரசலாறு) சங்கமத்திலும் நீராடி சிவபெருமானை ஆயிரம் தாமரை மலர்களால் அர்ச்சித்து வழிபட்டார்.

நாள்தோறும் இவ்வாறு பூஜை செய்து வருகையில் ஒரு நாள் ஆயிரம் மலர்களில் ஒரு தாமரை மலர் குறைந்து காணப்பட்டது. 999 தாமரை மலர்கள்தான் அர்ச்சிக் கப்பட்டிருந்தன. வழிபாட்டில் குறையிருக்கலாமா? அதனால் தனது வலக் கண்ணைப் பறித்து அதையே தாமரை மலராகப் பாவித்து, ஈச்வரனின் திருவடிகளில் சமர்ப்பித்தார். சிவபெருமான் உளம் மகிழ்ந்து திருமால் முன் தோன்றி, சலந்தரனை வதைத்த சக்கரப்படையைத் திருமாலுக்குத் தந்தருளினார். தன் கோரிக்கை நிறை வேறியதன் அடையாளமாக திருமால் தமது பெயரால் அங்கு விஷ்ணு தீர்த்தத்தை உண்டாக்கிவிட்டுத் தன் னுலகு சென்றார்.

இக்கோயில் மகா மண்டபத்தின் தனி மண்டபத்தில் இத்தலத்தின் தனிச்சிறப்புக்குரிய மாப்பிள்ளைசுவாமி எனும் கல்யாண சுந்தரர் விளங்குகிறார். அவரே உற்சவமூர்த்தி.அவரது வலப்பாதத்தின் மேலே திருமால் அர்சித்த கண்மலரும், அதன் கீழே சக்கரமும் இருக்கக் காணலாம்.

இத்தலம் தேஜினீவனமாய் (வீழிச்செடிக்காடு) சந்தனம், சண்பகம், பலா, விளா முதலிய மரங்களடர்ந்த காடாய்ப் பல காலம் இருந்தது. அப்போது மிழலைக் குறும்பர் என்னும் வேடுவர் ஒருவர் வசித்து வந்தார். அவர் தினம் ஒரு விளாங்கனி நிவேதனம் செய்து வீழி

யழகரை வழிபட்டு வந்தார். அதன் பலனாக சிவபெரு மான் அவர் முன்தோன்றி அருளாசி வழங்க, அவர் தவக் கோலம் பூண்டு, அருந்தவங்கள் செய்து அட்டமகாசித்தி கள் கைவரப் பெற்றார்.

ஒரு சமயம் காத்தியாயன முனிவர் திருவீழிமிழலைத் திருத்தலத்துக்கு வந்து தீர்த்த புட்கரணியின் கரையில் ஆச்ரமம் ஒன்று அமைத்து, தர்மபத்தினி சுமங்கலையுடன் அருந்தவம் புரிந்து வந்தார். சந்தான பாக்கியம் பெற வேண்டி அரிய வேள்விகளையும் செய்தார்.

அப்போது அம்பிகை, சாட்சாத் அன்னபூரணியாக அவர் முன் காட்சியளித்து, ''முனிவரே, தங்களுக்கு வேண்டும் வரத்தைக் கோளுங்கள்'' என்று கூற, முனி வரும், ''தாயே, தாங்கள் எங்களுக்குப் புத்திரியாகப் பிறந்து எங்களைக் கரையேற்ற வேண்டும்" என்று வேண் டினார். ''நீங்கள் விரும்பியபடியே நடக்கும்'' என்று முனிவருக்கு உறுதிமொழி தந்துவிட்டு உமையவள் மறைந்தாள்.

பின்னர், நடந்ததைப் பரமனிடம் கூறிவிட்டு, முனி வரின் ஆச்ரமத்துக்கு அருகில், தீர்த்த புட்கரணியில் ஒரு நீலோற்பல மலரில் சிறு குழந்தையாகத் தோன்றினாள். அதைக் கண்ட முனிவரின் பத்தினி மகிழ்ச்சி பொங்க. மகவை வாரி அணைத்து, கணவரிடம் எடுத்துச் சென்று காட்டினாள். அம்பிகையின் பெருங்கருணையால் நெகிழ்ந்து போன காத்தியாயன முனிவர், ஆனந்தக் கண்ணீர் பொங்க அப் பெண் மகவுக்குக் காத்தியாயனி என்று பெயர் சூட்டி, இருவரும் அன்போடும் பாசத் தோடும் பெண்ணை வளர்த்து வந்தார்கள்.

காத்தியாயனிக்குத் திருமணப் பருவம் வந்தது. எல்லாப் பெற்றோர்களையும் போன்றே, முனிவரும் சுமங் கலையும் தங்கள் பொறுப்புக்களை உணர்ந்தனர்.

பரமனைக் குறித்துத் தவமியற்றினார் முனிவர். வீழி யழகர் காட்சி தந்தார். அவர் திருவடிகளில் விழுந்து, "சுவாமி, தாங்கள் திருமணக் கோலத்தில் வந்து காத்தியா யனியைத் திருமணம் முடித்துச் செல்ல வேண்டும்" என்று பிரார்த்தித்தார் காத்தியாயன முனிவர். சுவாமி புன்னகை யொன்றைப் படர விட்டபடி, "சித்திரை மாதம் மக நட் சத்திரத்தன்று வந்து மணம் முடிப்போம்" என்று கூறி விட்டு மறைந்தார்.

அவ்வாறே கைலாசபதி சித்திரை மாதம் மக நட்சத்தி ரத்தன்று திருமால், பிரமன், நந்தி, சிவகணங்கள் சகல ரும் புடைசூழ, மணவாளநாதராய் சர்வாலங்காரங்களை யும் செய்து கொண்டு விடை மேலேறி திருவீழிமிழலைக்கு வர, காத்தியாயன முனிவர் சகல மரியாதைகளுடன் மாப்பிள்ளை சுவாமியை எதிர்கொண்டழைத்து, சாஸ்திர சம்பிரதாயங்களோடு கைலாசபதிக்கும் காத்தியாயனி அம்மனுக்கும் திருமணம் செய்து வைத்தார்.

திருமணம் முடிந்து திருவீதிவலம் வந்து, தெய்வீகத் தம்பதி திருக்கோயிலுக்குள், நுழையும்போது காத்தியா யன முனிவருக்கு ஒரு சந்தேகம் தோன்றியது. காலங்கடந்த சந்தேகம் அது. அங்கு வந்து தம் மகளின் திருக்கரம் பற்றிய மணவாளர், பரமன்தானா என்ற வரக்கூடாத சந்தேகம்! கேட்பதா, வேண்டாமா என்று தவித்துக் கொண்டிருக்கிறார். அவரது உள் மனத்தை அரித்துக் கொண்டிருப்பது சுவாமிக்குத் தெரி யாமலா போய்விடும்? லேசாகச் சிரித்துக் கொண்டார். அடுத்த கணம் திருமால், தாமரைப் பூவுக்குப் பதிலாக அர்ச்சித்த கண்மலரும், பரம பக்தரான மிழலைக் குறும்பர் படைத்த விளாங்கனியும் ஜோதி வடிவமாக மணக் கோலத்தோடு நின்ற கைலாசபதியின் திருவடி களில் வந்து விழுந்தன. 'இப்போது சந்தேகம் தீர்ந் ததா?' என்று கேட்பது போல் முனிவரைப் பார்த்து லேசாகச் சிரித்தார் சுவாமி.

சந்தேகம் தீர்ந்த முனிவர் ஆனந்தக்களிப்பு மேலிடக் கூத்தாடினார். "தாங்கள் என்றென்றும் இத்திருக் கல்யாண கோலத்துடன் இங்கு காட்சி தந்து கொண்டிருக்க வேண்டும். ஒவ்வொரு ஆண்டும் சித்திரை மாதம் தங்களது திருக்கல்யாண வைபவம் நடைபெற வேண்டும்'' என்று பிரார்த்தித்துக் கொண்டார். "அவ்வாறே ஆகுக'' என்று பரமனும் அருளினார்.

ராஜகோபுரத்தைக் கடந்து உள்ளே சென்றதும், வலப்பக்கம் ஒரு பெரிய திருக்கல்யாண மண்டபம் உள்ளது. நடுவில் தூண்கள் இல்லாமல், சுண்ணாம்பு கொண்டு வளைவான கூரையுடன் அமைக்கப்பட்ட இந்த மண்டபம், கட்டட வேலைப்பாட்டில் மிக மிக அபூர்வமானது. வௌவால் வந்து வசிக்க முடியாதவாறு கூரை அமைக்கப்பட்டுள்ளது இதன் தலச்சிறப்பு. சித்திரை மாதத்தில் இங்குதான் இறைவன் இறைவி திருக் கல்யாணம் நடைபெறுகிறது.

உலகநாயகி, உலகநாதனைத் திருமணம் புரிந்து கொண்ட புண்ணியத் தலம் திருவீழிமிழலை. திருமணம் ஆகாத பெண்கள் இங்கு வந்து, கல்யாணசுந்தரேச்வரருக்கு மாலை அணிவித்து, சுவாமிக்கும் அம்பாளுக்கும் அபிஷேக அர்ச்சனைகள் செய்து, நாற்பத்தைந்து நாட்கள் தினமும் காலையில் நீராடி, கீழ்க்கண்ட சுலோகத்தைப் பக்தியோடு சொல்லி வந்தால் திருமணம் நிச்சயமாவதாகக் கூறப்படுகிறது.

தேவேந் திராணி நமஸ்துப்யம்
தேவேந்திரப் பிரியபாமினி
விவாக பாக்யம் ஆரோக்யம்
புத்ரலாபம் ச தேஹிமயம்
சௌபாக்யம் தேஹிமே சுபே
சௌபாக்யம் சுபம் ஞானம்
தேஹிமே சிவசுந்தரி

காத்யாயனி மகாமாயே
மகாயோக நிதீச்வரி
நந்தகோபம் சுதம் தேவம்
பதிம்மே குருதே நம :

வட இந்தியாவில் சயந்தன் என்றோர் அரசன் இருந்தான். அவனுக்குப் புத்திர பாக்கியமில்லை. எனவே அருந்தவம் புரிந்து ஓர் ஆண் மகவைப் பெற்றான். அக்குழந்தைக்கு சுவேதகேது என்று பெயரிட்டு ஆசையோடு வளர்த்து வந்தான். அரண்மனை ஜோஸ்யர்கள் அவனது ஜாதகத்தைக் கணித்துப் பார்த்துவிட்டு' குழந்தை அல்ப ஆயுசில் மரணமடைந்துவிடுவான் என்று கூறினார்கள். தவமிருந்து பெற்ற மகன், பதினாறு வயதுக்குள் இறந்து விடுவான் என்று கருதி அரசனும் அரசியும் பெருந்துயருற்றனர்.

பின்னர், அரசன் முனிவர்களை அணுகி மரணத்திலிருந்து மகன் தப்ப வழியுள்ளதா என வினவியபோது அவர்கள், காவிரிக்குத் தென்கரையிலுள்ள தேஜிநீவனம் என்ற திருவீழிமிழலைத் திருத்தலத்தின் மகிமைகளை எடுத்துக் கூறி, அங்கு சென்று சிவபூஜை செய்தால் காலமிருத்யுவை வெல்லலாம் என்று நம்பிக்கையளித்தார்கள். அவ்வாறே, சுவேதகேது தனது பதினாறாவது வயதில், திருவீழிமிழலைக்கு வந்து, தட்சிண காவிரியாகிய அரிசில் ஆற்றிலும் தீர்த்த புட்கரணியிலும் முறைப்படி நீராடி, விதிப்படி பரமனைத் தினமும் ஆராதித்து வந்தான்.

நாட்கள் பல கடந்தன. சுவேதகேதுவின் உயிர் பிரிய வேண்டிய நேரம் நெருங்கிற்று. எமதூதர்கள் தங்கள் தலைவனின் ஆணைப்படி சுவேதகேதுவை அணுகினர். அரசகுமாரனோ, திருவெண்ணீரும் உருத்திராக்கமும் அணிந்து, மூடிய கண்களோடு, சிவப்பழமாய் சிவபூஜையில் தன்னை மறந்த நிலையில் இருந்தான்

அந்நிலையில் அவனது உயிரைப் பறிக்கத் தைரியமற்ற எமதூதர்கள் பின்வாங்கி, எமதர்மராஜனிடம் சென்று தங்கள் நிலையை விளக்கினார்கள்.

இதைக் கேட்ட எமதர்மனுக்குக் கடுங்கோபம் வந்தது. 'என் ஆணை நிறைவேறுவதற்கு இடையூறாக இப்படியெல்லாம் நடக்க அனுமதிக்க முடியாது' என்ற உறுதியோடு சுவேதகேதுவிடம் விரைந்து வந்தான். சுவேதகேது தனது பூஜையை மேலும் தீவிரமாக்கினான். சிவலிங்கத்தை இறுக அணைத்தான். அதைக் கண்ட எமதர்மன் தன் பாசக் கயிற்றை வீசினான். அது சிவலிங்கத்தையும் சேர்த்துச் சுற்றிக் கொள்ளவே சுவேத கேதுவோடு சேர்த்துப் பெருமானையும் இழுத்தான் எம தர்மராஜன். அப்போது சிவலிங்கத்தினின்றும் சிவபெரு மான் வெளிப்பட்டு, எமனைக் காலால் உதைத்து, மார்க் கண்டேயனைக் காத்ததுபோல், சுவேதகேதுவைக் காப் பாற்றினார்.

உயிரிழந்து கீழே கிடந்த எமதர்மனைப் பார்த்துத் தேவர்களும் முனிவர்களும் இரக்கம் கொண்டனர். உலக இயக்கம் தடைபடாமல் நடக்கும் பொருட்டு, அவன் பிழையைப் பொறுத்து அவனை உயிர்ப்பிக்க வேண்டும் என்று பரமசிவனிடம் பிரார்த்தித்தார்கள்.

கருணைக் கடலான பரமேச்வரர், காலதேவனுக்கு உயிர்ப் பிச்சையளித்து, இனி தன் பக்தர்கள் சிவபூஜை யில் ஈடுபட்டிருக்கும் போது உயிரைப் பறிக்க வரக் கூடாது என்று அருளாணையிட்டார். சுவேதகேது சிரஞ் சீவியாய் வாழ்ந்து வந்தான்.

வட நாட்டில் புருவரசு என்னும் அரசன், குடிமக்கள் மகிழ்ச்சியடையும் வகையில் நல்லாட்சி புரிந்து வந்தான். அவனுக்குப் பத்திரவல்லி என்று ஒரு மனைவி. குமரகண்ட நோய் அவளைப் பற்றிக் கொண்டது. அரசன்

அதற்காகப் பல்வேறு பரிகாரங்கள் செய்தும் பலனேது மில்லை. நோய் நீங்குவதற்கான அறிகுறியையே காணோம். மிக வருந்திய புருவரசு செய்வதறியாது, முனிவர்களிடம் தன் மனக்கவலையைத் தெரிவித்தான். அவர்கள் திருவீழிமிழலைப் பெருமானைச் சரணடையச் சொன்னார்கள்.

அதன்படி புருவரசுவும் பத்திரவல்லியும் திருவீழி மிழலைக்கு வந்தார்கள். அப்போது ஆலய கோபுரங் களும் மதிற்சுவர்களும் மண்டபங்களும் பழுதடைந்த நிலையில் இருந்ததால், கைதேர்ந்த கட்டடக் கலைஞர் களையும் சிற்பிகளையும் வரவழைத்துத் திருப்பணிவயத் தொடங்கினார்கள். அச்சமயம் மூல லிங்கத்தினிடம் எவ்வாறு திருப்பணி செய்வது என்று சற்றுக் கவலை யோடு யோசித்தான் அரசன். அன்றிரவு மிழலைநாதர் அவனது கனவில் தோன்றி, 'கிழக்குப் பீடத்தருகே நாம் மேற்கு நோக்கி வீற்றிருப்போம். நத்தி கிழக்கு நோக்கி இருப்பார். தினந்தோறும் வேலை நடைபெற நடைபெற, நாங்கள் சற்று உயர்வான நிலைக்கு வந்துவிடுவோம்' என்றார். அவ்வாறே திருப்பணிகளை முடித்த புருரவசு வும் பத்திரவல்லியும் தெற்கு வீதிக்குத் தெற்கே பத்திர வல்லீசலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து, அங்கு ஒரு தீர்த்தம் உண்டாக்கி வழிபட்டு, அரசியின் குமரகண்ட நோய் நீங்கப் பெற்று, தம்முடைய தேசத்தைச் சென்ற டைந்து இன்பமாக வாழ்ந்து வந்தனர். இத்தீர்த்தத்தில் அந்நோயுள்ளவர் மூழ்கி வழிபட்டால் இன்றும் நோய் நீங்குவதாகக் கூறப்படுகிறது.

திருவீழிமிழலைத் தல வரலாற்று நூலில் குறிப்பிடப் பட்டுள்ள குமர கண்ட நோய் என்பது என்னவென்று புரியாததால், பழைய அகராதியொன்றைப் பார்த்தேன். அது ஒரு வகை வலியென்றும், அவ்வலி, 'வாத சிலேட்டு மத்தாற் பிறந்து, முன் கழுத்தையும் முகத்தையும்

முறுக்கித் தோளினது பக்கத்தில் வைத்தல்; தாடை, கண், செவி, உதடு இவற்றைக் கோணச் செய்தல்; ஆகிய வற்றுடன் மிகு உபத்திரவத்தையும் சன்னி பாதசுரக் குறிகளையும் உண்டாக்குவது' என்ற குறிப்பு அதில் காணப்படுகிறது.

சிபிச் சக்கரவர்த்தி இங்கு வந்து, ஆலயத் திருப் பணிகள் செய்து, வேதாகமங்களை நன்கு உணர்ந்த ஐந்நூறு மறையவர்களைத் திருவீழிமிழலைக்கு அழைத்து வந்து அவர்களுக்கு இல்லங்களும் விளைநிலங்களும் தானம் செய்தார். அப்போது பரமனே மறையவர்களில் ஒருவராக மாய வேஷம் புனைந்து, சக்கரவர்த்தியிடம் தானம் பெற்றதை நாரத மகரிஷி அறிந்து கொண்டு, அரசனுக்குக் காட்டினார். உடனே பரமன் மறைந்து விட்டார். பின்னர், சிபி வேந்தன் பிற மறையவரைக் கொண்டு மிழலைநாதருக்கு நித்திய பூஜைகளும் அர்ச் சனைகளும் செய்வித்து, வரம் பல பெற்று உய்ந்தான்.

இத்தலத்தில் வசிட்டமுனிவர் வழிபாடு செய்தபோது காமதேனுவும் வந்து பரமனுக்கு நிறைய பாலபிஷேகம் செய்வித்தது. அபிஷேகத்துக்காகப் பெருக்கெடுத்த பால்தான் க்ஷீர நதியெனப் பெயர் பெற்று (தற்போது முட்டையாறு) அரசலாற்றுடன் சங்கமம் ஆயிற்று.

மனு, திருவீழிமிழலைக்கு வந்து ஈசனை முறைப்படி ஆராதித்து, தென்கிழக்குத் திசையில் சற்றுத் தொலைவில் ஒரு தவச்சாலையை அமைத்து அங்கே அருந்தவங்கள் புரிந்தார். அங்கே சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து ஒரு தீர்த்தத்தையும் உண்டாக்கினார். 'மனுதவச்சேரி' என்ற இடம்தான் ஒரு காலத்தில் மனுதவம் செய்த இடமாக இருந்திருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது.

வீழிநாதர் சுயம்புலிங்கம். கிழக்குப் பார்த்த சந்நிதி. உயரமான, அழகான லிங்கம். மூலத்தானத்தின் பின்புறம் பரமசிவன்-பார்வதி இருக்கின்றனர்.

கருவறைத் தென்பிராகார வெளிச்சுவரில் உள்ள தட்சிணாமூர்த்தி சிலையில் முயலகன் இல்லை. சுவரில் இரண்டு ரிஷிகள் இருக்கின்றனர். அருகில் ஸ்ரீ முன்னை விநாயகர் சந்நிதி உள்ளது.

97-ம் பக்கத்தில் வெளியிடப்பட்டுள்ள சுலோகத்தில் பிழைகள் யுள்ளதால், நூலில் உள்ளபடி மீண்டும் அதை வெளியிடுகிறேன்.

தேவேந்திராணி நமஸ்துப்யம்
 தேவேந்திரப் பிரியபாமினி
விவாக பாக்யம் ஆரோக்யம்
 புத்ரலாபம் ச தேஹி மே
பதிம் தேஹி சுதம் தேஹி
 சௌபாக்யம் தேஹி மே சுபே
சௌமாங்கல்யம் சுபம் ஞானம்
 தேஹிமே சிவ சுந்தரி
காத்யாயனி மகாமாயே
 மகா யோக நிதீஸ்வரி
நந்தகோப சுதம் தேவம்
 பதிம்மே குருதே நம:

திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தப் பெருமானும் திருப்பாம்பரம், திருச்சிறுகுடி முதலிய திருத்தலங்களைத் தரிசித்து, இறைவனைப் பாடி, திருவீழிமிழலைக்கு வருகை தருகின்றனர். அவர்கள் வருவதைக் கேள்வியுற்ற ஐந்நூறு மறையவர்களும் பிற மெய்யடியார்களும், பூர்ண கும்ப மரியாதைகளோடும் வழி நெடுகத் தோரண அலங்காரங்களோடும் வேத மந்திர ஒலியோடும் எதிர் கொண்டழைத்து வருகின்றனர்.

ஞானசம்பந்தரும் அப்பர் அடிகளும் ஆலயத்துக்கு வடபால் உள்ள திருமடங்களில் தங்கி, வீழிநாதரைப் பணிந்து, பாடி இன்புற்றிருந்தனர். அச்சமயம் நாட்டில்

கடும் பஞ்சம் ஒன்று தலைவிரித்தாடத் தொடங்கியது. மழையின்றி நிலமெல்லாம் வறண்டு போய், பூமியில் வெடிப்புக்கள் கண்டு, விளைச்சலின்றி, மக்களோடு கால்நடைகளும் பசியால் வாடின. தாகத்தால் தவித்தன. இந்நிலையில் உடன் வந்த அடியார்களுக்கு எங்ஙனம் உணவளிப்பது? இது சமயப் பெரியார்களுக்கும் இது பெரும் பிரச்னையாகி விட்டது.

இயற்கை சதி செய்யும்போது இறைவனைத் தவிர வேறு அடைக்கலம் ஏது? மகான்கள் இருவரும் ஆலயத் தினுள் சென்று, நேத்திர அர்ப்பணேச்வரரிடம் தஞ்சம் புகுந்தனர். தீந்தமிழ்ப் பாக்களால் உள்ளம் உருகி, கண்ணீர் மல்கி மக்களது உயிர் காக்கும்படி மன்றாடி னார்கள். கைமேல் பலன் கிடைத்தது.

அன்று இரவு இருவரின் கனவிலும் வீழிநாதர் தோன்றி, "வருந்தாதீர்கள், உங்கள் அடியவர்கள் துயர் தீர்க்கும் பொருட்டுத் தினமும் ஒரு படிக்காசு தருகிறேன். பஞ்சம் உள்ளளவும் அது உங்களுக்குக் கிடைத்துக் கொண்டிருக்கும் என்று கூறியருளி மறைந்து விட்டார்.

மறுநாள் விடியற்காலை அப்பரும் சம்பந்தரும் ஆலய தரிசனத்துக்குச் சென்ற போது கிழக்கேயுள்ள பீடத்தில் ஒரு பொற்காசு இருப்பதைக் கண்ட சம்பந்தர், அதை எடுத்துக் கொண்டார். பின்னர் வலம் வரும்போது, மேற்குப் பீடத்திலும் ஒரு காசு இருப்பதைக் கண்ட அப்பர் சுவாமிகள் அதை எடுத்துக் கொண்டார். பரமனின் கருணையை நினைந்து நினைந்து, ஆனந்தக் கண்ணீரில் இரு மகான்களும் நனைந்தனர்.

இவ்விரு காசுகளையும் இவர்கள் சமையல் செய் வோரிடம் தர, அவர்கள் அவற்றை ஆவண வீதிக்கு எடுத்துச் சென்று, உணவுப் பண்டங்கள் வாங்கி வந்து, அமுது படைத்து அடியார்களுக்கெல்லாம் படைத்

தார்கள். இவ்வாறு தினமும், இரண்டு வேளையும் "நல் விருந்துண்ண வாருங்கள், வாருங்கள்" என்று பறைசாற்றி திருத்தொண்டர்களை வரவழைத்து, அறுசுவை விருந் தளித்துக் களித்தனர்.

சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் நாவுக்கரசரின் மடத்தில் அடியவர்கள் நேரத்தோடு உணவருந்திச் செல்வதையும், தமது மடத்தில் நேரம் கழித்துச் சாப்பாடு போடப்படுவதையும் சம்பந்தர் கண்டார். இப்படித் தொடர்ந்து நான்கு ஐந்து நாட்கள் நடைபெறவே சமையலுக்குப் பொறுப்பானவர்களிடம் இது குறித்து விளக்கம் கேட்டார். அதற்கு அவர்கள், 'நாவுக்கரசரின் பொற்காசைக் கடைவீதிக்கு எடுத்துச் சென்றால் உடனே பண்டங்கள் தருகிறார்கள்...தங்களுக்குரிய காசை எடுத்துச் சென்றால் வட்டம் கேட்கிறார்கள். அது தீர்ந்த பிறகுதான் பண்டங்களைத் தருகிறார்கள். அதனால்தான் சமையலுக்குக் காலதாமதமாகிறது' என்று கூறினர்.

படிக்காசு தருவதிலும் இறைவனின் திருவிளை யாட்டை நினைந்து ஆனந்தத்துடன் வியந்தார் சம்பந்தர். இறைவனின் திருவிளையாட்டின்படி அப்பர் வாசி இல்லாத காசு (கமிஷன் இல்லாது மாற்றக்கூடிய காசு) பெறுகிறார். சம்பந்தர் பெறும் காசோ வாசியுடன் கூடியது. சம்பந்தர், இறைவனிடம் உரிமையோடு கேட் கிறார்:

'வாசி தீரவே காசு நல்குவீர்
மாசில் மிழலையீர், ஏசல் இல்லையே!'

இறைவன் தனக்குள் சிரித்துக் கொள்கிறான். சம்பந்தரிடமிருந்து மற்றொரு தமிழ்ப் பாடலைச் செவி குளிரக் கேட்டுவிட்டதனால் தனது திட்டம் பலித்து விட்ட திருப்தி அந்தச் சிரிப்பில் பளிச்சிட்டது. மறு நாளிலிருந்து சம்பந்தருக்கும் வாசியில்லாக் காசே கிடைக்கிறது.

இறைவன் அப்பருக்கு வாசியில்லாத காசையும், சம்பந்தருக்கு வாசியுள்ள காசையும் ஏன் தந்தார் என்று சேக்கிழார் கூறுவதை, தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் தமது நூலில் எடுத்துக் காட்டுகிறார்.

திருமகனார் ஆதலினால்,
காசு வாசியுடன் பெற்றார்.
கைத் தொண்டர் ஆகும்படியினால்
வாசு இல்லாக் காசுபடி
பெற்று உவந்தார் வாகீசர்.
... ... ... ... ... ...

"உண்மைதானே. தொண்டு புரியும் அன்பனுக்கு வாசியுள்ள காசு கொடுத்தால் அவன் கடைத்தேறுவது ஏது? என்று கேட்கிறார். தொ. மு. பா.

இறைவன் கட்டளைப்படி, இரு சமயகுரவர்களுக்கும் தினமும் படிக்காசு தந்தருளிய படிக்காசுப் பிள்ளையாரும் மேற்குப் பீடத்தினருகில் அமர்ந்திருப்பதை ஆலயத்தில் இன்றும் காணலாம்,

இறைவன் அருளாலும், மகான்களின் உள்ளார்ந்த பிரார்த்தனையாலும், மழை பெய்கிறது. பூமி குளிர்கிறது. பயிர் விளைகிறது. பஞ்சம் தீருகிறது.

சம்பந்தரும் அப்பரும் நீண்ட காலம் திருவீழிமிழலையிலேயே தங்கிவிடுகின்றனர். வடக்கு வீதி கீழ்க் கோடியில் சம்பந்தர் மடமும், மேல் கோடியில் அப்பர் மடமும் இருக்கின்றன.

இவர்களுக்குப் பின்னர் திருவீழிமிழலைக்கு வந்த சுந்தரர், இறைவன் இவ்விருவர்களுக்கும் படிக்காசு அளித்த வரலாற்றைக் கேட்கிறார். இவரும் வீழிநாதரிடம் விண்ணப்பம் செய்கிறார்.

திருமிழலை இருந்து நீர் தமிழோடு
இசை கேட்கும் இச்சையால்
காசு நித்தம் நல்கினீர்
அருந்தண் வீழி கொண்டீர்
அடியேற்கும் அருளிதிரே

என்று பாடுகிறார். ஈசனுக்குப் பாரபட்சம் உண்டா? இவருக்கும் நிச்சயம் காசு அருளியிருப்பார்.

ஆவணவீதியானது தற்போது ஐயன்பேட்டை என்று வழங்குகிறது. அங்கே உறையும் சுவாமி பெயர் செட்டியப்பர். அம்பாள் திருநாமம், படியளந்த நாயகி. உற்சவ மூர்த்தி தராசு பிடித்த கரத்தோடும், அம்பாள் படியைப் பிடித்த கரத்தோடும் காட்சி தருகிறார்கள்.

திருஞானசம்பந்தப் பெருமான் இத்தலத்தில் வெகு காலம் தங்கிவிட்டதால், இவரைக் காணவும், மிழலைப் பெருமானைத் தரிசிக்கவும் சீர்காழியிலிருந்து மறையவர்களும் பிற சிவனடியார்களும் இங்கு வந்தார்கள். ஐநூறு மறையவர்கள் அவர்களை முறையுடன் வரவேற்று, விருந்தளித்து மகிழ்ந்தனர்.

பின்னர், சீர்காழிப் பெருமக்கள் சம்பந்தரிடம், ''தாங்கள் ஊரை விட்டு வந்து வெகு நாட்கள் ஆகிவிட்டன. தாங்கள் அங்கில்லாததால், மழையின்றி வாடும் பயிர்கள் போல் நாங்கள் தவிக்கிறோம். நீங்கள் தோணியப்பரைத் தரிசிக்க எங்களுடன் உடனே புறப்பட்டு வர வேண்டும்'' என்று அவரது திருவடிகளில் விழுந்து வேண்டினர். சம்பந்தப் பெருமானோ, ''இன்று மிழலைப் பெருமான் அருள்பெற்று நாளை வருவேன்'' என்றார். அன்றிரவு நேத்திர அர்ப்பணேச்வரர் சம்பந்தரின் கனவில் தோன்றி, ''திருத்தோணியில் வீற்றிருந்த திருக்கோலத்தை இந்த விண்ணிழி விமானத்தில் காட்டுகிறோம். தரிசிப்பாயாக'' என்று கூறி மறைந்தருளினார்

மறுநாள், அனைவருடனும் ஆலயத்தினுள் சென்று, விமானத்தைத் தரிசிக்கும் போது, அதில் திருத்தோணிக் காட்சியைக் கண்டு பரவசத்தில் ஆழ்ந்தார் சம்பந்தப் பெருமான். பின்னர் 'காழியும் வீழியும் சேர்ந்துமைம்மரு பூங்குழல்' என்ற திருப்பதிகத்தைப் பாடி சீர்காழியிலிருந்து தம்மை அழைக்க வந்தவர்களிடம், "இன்னும் சில காலம் இங்கு தங்கும்படி இறைவன் அடியேனைப் பணித்துள்ளான்" என்று கூறி விடை கொடுத்து அனுப்பினார்.

இக்கோயில் மேற்குப் பிராகாரத்தில் உள்ள முருகன், அருணகிரியாரின் திருப்புகழ் பெற்றவர். 'திருவீழியில் வாழ் பெருமாளே' என்று விளிக்கிறார் அவர். அடுத்து பாலகணபதி, எட்டு சிவலிங்கங்கள், தியாகராஜா, சம்பந்தர், சுந்தரர், மகாலட்சுமி, ஜேஷ்டாதேவி முதலியவர்கள் உள்ளனர்.

கிழக்குப் பிராகாரத்தில் பைரவர், சூரியன், அருணாசலேச்வரர், சனீச்வரர் இருக்கிறார்கள்.

துவஜஸ்தம்பத்துக்கும் பலிபீடத்துக்கும் இடையில் மூலநாதர் மேற்குப் பார்த்து இருக்கிறார். உள்பிராகாரத்தில் நந்திகேச்வரர் கிழக்குப்புறம் பார்த்து வீற்றிருக்கிறார்.

திருவீழிமிழலை ஸ்ரீ வீழிநாத சுவாமி ஆலயம், தஞ்சை மாவட்டத்தில் தலபுராணப் பெருமைகளும் தேவாரப் பாடல்களும் பெற்றுள்ள பெரிய கோயில்களில் ஒன்றாகும். திருநாவுக்கரசர், சம்பந்தர், சுந்தரர், இம்மூன்று மகான்களின் பெருமைகளைப் பறை சாற்றும் திருத்தலம். அப்படியிருந்தும், இங்கு பக்தர் கூட்டம் பெருமளவில் வருவதாகத் தெரியவில்லை ல இந்தக் கோயில் திருவாவடுதுறை ஆதீனத்தின் மேற்பார்வையில் நல்ல முறையில் நிர்வகிக்கப்பட்டு வந்தாலும் போதிய நிதி வசதிகள் இல்லாத காரணத்தால் நாற்பது ஆண்டுகளுக்கு மேலாகத் திருப்பணிகளும் குடமுழுக்கும் செய்யப்படாமலேயே இருந்து வருவது வருந்தத்தக்கது

அக்கோயிலுள்ள வௌவால் நந்தி என்றும் வௌவால் நெற்றி என்றும் அழைக்கப்படும் கல்யாண மண்டபம் அபூர்வமானதொரு பொறியியல் சாதனை. அவ் வௌவால் தொங்க முடியாதாம். திருவீழிநாதர் கோயிலில் கிழக்கு பலிபீடத்தையடுத்து மூலநாதர் என்ற சிவலிங்கம் மேற்கு நோக்கியவாறு எழுந்தருளியுள்ளதை முன்பு கண்டோம். முன் மண்டபத்தில் மூலநாதரைப் பார்த்தபடி ஒரு சிறு நந்தியுள்ளது. ஆனால், பழைய நந்தி கண்ணுக்கு தெரியாமல் இருக்கிறது. அதற்குப் 'பாதாள நந்தி' என்று பெயர். மகா மண்டபத்தை யொட்டி ஏதோ ஒரு காலகட்டத்தில் புதிதாக முன் மண்டபத்தைக் கட்டியிருப்பதால் அந்த நந்தி மறைவான இட.த்திலுள்ளது. இரண்டு மண்டபங்களுக்கும் இடையே யுள்ள சிறு இடைவெளிப் பாதையில் குனிந்து சென்று அந்தப் பெரிய நந்தியைத் தரிசித்தோம்.

மகா மண்டபத்துக்குப் தென்புறமாகச் செல்ல கிழக்குப்புறம் ஒரு படிக்கட்டு இருக்கிறது. அதற்கு ஏழு படிகள். அது வாரத்தைக் குறிக்கிறதாம். முன் மண்டபத்துக்குச் செல்ல தென்புறமிருந்து ஒரு படிக்கட்டு. அதிலிருக்கும் பன்னிரண்டு படிகள், மாதங்களைக் குறிக்கின்றனவாம். வடபுறமிருந்து ஏறிப் போக ஒன்பது படிகளோடு ஒரு படிக்கட்டு. அதற்கு நவக்கிரகப் படிகள் என்று பெயர்.

திருவீழிமிழலை ஆலயத்தில் உள்ள விமானம், இரு பிரிவுகளுடன் புதுமையாகக் காட்சியளிக்கிறது. அந்த விமானம், திருமால் தேவலோகத்திலிருந்து கொண்டு வந்த விண்ணிழி விமானமாதலால் அதற்குத் தேவேந்திரனே சாரதியாக இருக்கிறான். அதே விமானத்தில் சீர்காழி தோணியப்பர், உமாதேவியுடன் ஒரு தோணியில் ஸ்ரீ சம்பந்தமூர்த்திப் பெருமானுக்குக் காட்சியளித்திருக்கிறார். பின்பகுதியை வீழிநாதரின் விமானமாக

வும், முன் பகுதியை சீர்காழிப் பெருமானின் விமானமாக வும் குறிப்பிடும் வகையில் 'வீழி பாதி' காழி பாதி' என்ற பழமொழி வந்ததாகக் கூறப்படுகிறது. விமானத்தின் முன்பகுதி ஓர் அமைப்பாகவும், பின்பகுதி வேறோர் அமைப்பாகவும் காட்சியளிக்கின்றன.

விமானத்தின் பின்பகுதியின் தென்புறம் ஸ்ரீ தோணி யப்பரும் உமாதேவியும் அமர்ந்திருப்பது போல் ஒரு சுதை வடிவம் காணப்படுகிறது. அது சற்றுப் பழுதடைந் திருக்கின்றது. அம்பாளுக்குக் கீழே, சுவாமியை நோக் கியவாறு ரிஷபம் படுத்திருப்பது வெகு இயற்கையாக இருக்கிறது. ஆனால், ஞானசம்பந்தப் பெருமானை மட்டும் காணவில்லை. விசாரித்தபோது அவருடைய பதுமையும் சுவாமிக்கு வலப்புறம் சற்றுக் கீழே இருந்த தாகவும், இரண்டு மூன்று வருடங்களுக்கு முன் அது உடைந்து போய்விட்டதாகவும் கூறினார்கள்.

சித்திரை மாதத் திருவிழாவின் போது இரண்டாம் நாள் திருமுலைப்பால் உற்சவம் நடைபெறும். அப் போது ஸ்ரீசம்பந்தப் பெருமானின் உற்சவ மூர்த்தி அங்கு எழுந்தருளும். தேவாரப் பாடல்கள் ஒலிக்கும். இரண் டாண்டுகளாக, அச்சமயம் விமானத்தில் சம்பந்தரின் அடையாளமாக ஒரு பொம்மையை வைத்து இந்த விழா வைக் கொண்டாடுவதாகக் கேள்விப்பட்டேன்.

தோணியப்பரையும் உமையவளையும் அருகிலிருந்து புகைப்படம் எடுக்க ஏணியில் ஏறிச் சென்ற புகைப்படக் காரர் ஜயபாலனுடன், அப்பு என்பவரையும் மேலே போகச் சொன்னேன். சம்பந்தப் பெருமானது உடைந்த சுதை பிம்பம் அங்கு விழுந்திருந்தால், அதை எடுத்து அது முன்பு இருந்த இடத்தில் ஒட்டவைக்கச் சொல்ல லாமே என்ற ஆர்வத்தில் அப்படிக் கூறினேன். அவர் தேடிப் பார்த்து ஓர் உருவத்தைக் கொண்டு வந்தார்.

அது சம்பந்தப் பெருமானுடைய உருவம்தான். ஆனால், அதன் தலையைக் காணவில்லை. கை கால்களும் உடைந்து போயிருந்தன. எங்கள் கண்களில் கண்ணீர் அல்ல, ரத்தம் கசிந்தது !

நம் முன்னோர்கள் ஆலயங்களில் அமைத்துத் தந் திருக்கும் சிற்பங்களும் சுதை வடிவங்களும் சம்பிரதாயச் சிற்பங்கள் அல்ல. கலையழகுக்காக மட்டும் அவை வைக்கப்படவில்லை. அவற்றுக்கு ஆழ்ந்த பொருள் உண்டு. அரிய வரலாற்று, புராதனப் பின்னணிகள் உண்டு. பின்வரும் சந்ததியினர் அவற்றைப் பார்க்கும் போது, பழைய நிகழ்ச்சிகளை நினைவுப்படுத்திக் கொள்வதற்காக, உயிரோட்டமுள்ள சின்னங்களாக, உயிரோவியங்களாகத் திகழும் தெய்வ வடிவங்கள் அவை.

ஆலயத்துக்குக் குடமுழுக்கு ஆகிறதென்றால், விமானங்களிலும் கோபுரங்களிலும் கருவறையிலும் கோஷ்டங்களிலும் மண்டபத் தூண்களிலும் உள்ள சிற் பங்கள் அனைத்தும் தெய்வீகச் சக்தியுடன் திகழ்கின்றன என்றே பொருள். ஆன்மிகப் பண்புகளும் ஆத்திக உள்ளமும் இல்லாதவர்களே அச்சிற்பங்களை வெறுப் கலைப் பொருளாக மட்டும் கொண்டாடிக் கொண்டிருந் பார்கள். அச்சிற்பங்களிலும் விக்ரகங்களிலும் சிவலிம் கங்களிலும் புனிதம் குறைந்துவிடக்கூடாதே என்று தான் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை ஆலயங் களில் திருப்பணிகள் செய்து குடமுழுக்கு நடத்த வேண்டும் என்று நம் முன்னோர்கள் பணித்துள்ளார்கள்.

திருஞானசம்பந்தப் பெருமானுக்குத் தோணியப்பர் திருவீழிமிலை விமானத்தில் காட்சி கொடுததபோது அவர் வியந்து வினாவுரையாக,

'மைம்மரு பூங்குழல் கற்றைதுற்ற
வாணுதன் மான்விழி மங்கையோடும்
பொய்ம்மொழியா மறையோர்களேத்தப்
புகலி நிலாவிய புண்ணியனே
எம்மிறையேஇமை யாதமுக்கண்
ஈசஎன் நேசவி தென்கொல் சொல்லாய்
மெய்ம்மொழி நான்மறையோர்மிழலை
விண்ணிழி கோயில் விரும்பியதே!'

என்று தொடங்கி தேமதுரப் பதிகம் ஒன்று பாடுகிறார்.

இப்பதிகத்தில் சீகாழிப் பெருமான் புகழும், (புகலி நிலாவிய புண்ணியனே) வீழிமிழலைப் பெருமான் பெருமையும் பாதி பாதி அமைந்திருப்பதால், 'வீழி பாதி, காழி பாதி' என்ற சொற்றொடர் வந்ததாகக் கூறுவோரும் உண்டு.

பக்திக்கு ஓர் இலக்கணமாகவும், அடியாருக்கு ஆண்டவன் கருணையோடு அருளும் ஒரு காவியமாகவும் திகழும் அந்த நிகழ்ச்சியை நினைந்து நினைந்து உருகுவதற்கன்றோ அந்தக் காட்சி அந்த விமானத்தில் பதிக்கப் பெற்றுள்ளது!

அது பழுதுபட்டு, சம்பந்தப்பெருமானின் உருவமே சிதைந்து, மறைந்து போக விடலாமா? அடுத்த குடமுழுக்குவரை காத்திராமல், விரைவிலேயே ஸ்ரீ சம்பந்தரின் உருவத்தைச் செய்து, தோணியப்பர்—பார்வதி சிற்பங்களையும் பழுது பார்த்து சீராக வைக்கும்படி நிர்வாகத்தினரை மிகப் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

முன்பு குடவாசல் ஸ்ரீ கோணேஸ்வரர்சுவாமி கோயிலைச் சுற்றிப்பார்த்த போது, ஒரு மாடத்தில் கருடபகவானின் சுதை பிம்பம் சிதைந்து இருப்பதைக் காட்டினார்கள். அதைப் பற்றி மனம் குமுறிக் குறிப்பிட்டிருந்தேன். அப்போது ஆலய நிர்வாகிகளும் அவ்வூர் மக்களும் சேர்ந்து

ஒரு மாதத்துக்குள் அதைச் சீர்படுத்தி விட்ட செய்தியைக் கடிதம் மூலம் எனக்குத் தெரிவித்ததைத் தற்போது நன்றி யுடன் நினைவுகூரக் கடமைப்பட்டுள்ளேன்.

திருவீழிமிழலை ஸ்ரீவீழிநாதர் கோயிலின் வெளித் தென் பிராகாரத்தில் வலம் வந்தபோது முதல் பிராகார மதிற்சுவரில் 'ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு திருவா பரணம் கொடுத்தருளிய பீடம்' என்று எழுதப் பட்டிருந்ததைக் கண்டு அதைப் பற்றி விசாரித்தேன். பரவை நாச்சியாரின் தூண்டுதலின் பேரில் சுந்தரமூர்த்தி நாயனார், சுவாமியை (அவருக்கு நெருங்கிய தோழர் ஆயிற்றே!) ஆபரணங்கள் வேண்டும் என்று கேட்ட தாகவும், வீழிநாதர் கொடுத்ததாகவும் ஒரு நிகழ்ச்சியைக் கூறினார்கள். அதை நினைவுபடுத்தும் வகையில் அப்பர் சம்பந்தருக்குப படிக்காசு தந்த உற்சவத்துக்கு மறுநாள் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் இங்கு எழுந்தருளுவதாகவும் கூறினார்கள். ஸ்ரீசுந்தரர் வரலாற்றில் இக்கதைக்கு ஆதாரம் இருக்கிறதா என்பது குறித்து அங்கிருந்தவர் களுக்குத் தெரியவில்லை.

ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்தலத்தில் அருளிய பதிகத்தின் ஒவ்வொரு பாடலையும் 'அடியேற்கும் அருளுதிரே' என்று முடிக்கிறார். எப்பாடலிலும் 'அணி கலன்கள் அருளுதிரே' என்று அவர் கேட்கக் காணோம். எட்டாவது பாடலில்—'நீர் தமிழோடு இசை கேட்கும் இச்சையாற் காசு நித்தல் நல்கினீர். அருந்தண் வீழி கொண்டீர் அடியேற்கும் அருளுதிரே' என்று கோருவதை வைத்துக் கொண்டு, அப்பருக்கும் சுந்தரருக்கும் தந்தது போல் தனக்கும் படிக்காசு தரும்படி கேட்டார் என்று பொருள் கொள்வதும் சரி என்று தோன்றவில்லை. முன்னிரு பாடல்களைப் பார்த்தால் சண்டிகேசர், கண்ணப்ப நாயனார், அருச்சுனன், பகீரதன் போன்றவர் களுக்கு முற்காலத்தில் அருள் செய்தது போல் அடியே

னுக்கும் அருள் செய்வீர் என்றுதான் கேட்கிறார். அடுத்த பாட்டில், அவ்வரிசையில் 'பொற்காசு அளித்து அப்பர், சம்பந்தரையும் ஆட்கொண்டதைப் போல் என்னையும் ஆட்கொள்ளுங்கள்' என்று கேட்பதாக எடுத்துக் கொள்வது பொருத்தமாக இருக்கலாம்.

'பிராகாரத்தைச் சுற்றிக் கொண்டு மேற்குப்புறம் வரும்போது படிக்காசு விநாயகரைத் தரிசித்துக் கொள் கிறோம். முன் மண்டபத்தில், விநாயகரை நோக்கியபடி ஓர் ஓரமாக நின்று கொண்டிருக்கும் திருநாவுக்கரசையும், ஸ்ரீசம்பந்தர் சுவாமிகளையும் வணங்குகிறோம். உழவாரப் படையுடன், கூப்பிக் கொண்டிருக்கும் திருநாவுக்கரசரின் கைகளில் தாளங்கள் இருப்பதையும் கவனிக்கிறோம்.

'வீழி மர நிழலில் விளங்குபவரே' என்று தேவாரத்தில் விவரிக்கப் பெற்றிருந்தாலும், தற்போது மேற்குப் பிராகாரத்தில் இருக்கும் தல விருட்சம் பலா மரமே. ஆனால், ஊரில் வீழிச் செடிகள் நிறைய காணக் கிடைக் கின்றன. திருநாவுக்கரசு என்னும் அன்பர் வெளியே சென்று அச்செடிகளைப் பறித்துக் கொண்டு வந்து காட்டினார். இலையையோ, பூவையோ சுவாமி பூஜைக்குச் சேர்ப்பதில்லையாம்.

'மடங்கல் பூண்ட விமானம்' என்று ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் அழைப்பதற்குச் சான்று வேண்டுமா? கரு வறைக்குச் சென்று பார்த்தால், வெளிப்பறச் சுவரில் இருபுறமும் துவாரபாலகர்களையடுத்து சிம்மங்கள் இருப் பதைக் காணலாம். வாயிற்படிக்கு மேலே, விமானத்தின் சாரதி தேவேந்திரனையும் தரிசிக்கலாம்.

கருவறையில் வீழிநாத சுவாமிக்குப் பின்னால் பார்வதி, பரமேச்வர் நின்று கொண்டிருக்கிறார்கள். பெரிய வடிவங்கள். இருவருக்கும் இரு கரங்கள்தான். சாதாரண மாக நம் சிவன் கோயில் கர்ப்பக்கிரகங்களில் காண

முடியாத சிறப்பு இது. முக அமைப்புக்களும், ஆடை ஆபரண நுணுக்கங்களும் எந்தக் காலத்தைச் சேர்ந்தவை, அவை கற்சிலையா, சுதை பிம்பமா அல்லது இரண்டும் கலந்த சிற்ப வேலைப்பாடா என்பதையெல்லாம் யாராவது ஆராய்ச்சி செய்து கூறினால்தான் புரியும் என்று அப்பு சொல்லிக் கொண்டிருந்தபோது, 'அதோ, வடக்குப் புறத்தில் சிறியதாக இருக்கும் சிலை என்ன?" என்று விசாரித்தேன். 'அன்னபூரணி' என்றார் சிறிதும் சந்தேகமின்றி. உற்றுப் பார்த்தேன். வலக்கையில் இருப்பது கரண்டி போல இல்லை. இடக் கையில் அன்ன பாத்திரமும் இல்லை. 'எப்படி அன்னபூரணி என்கிறீர்கள்? என்று கேட்டதற்கு' ரொம்ப நாளா சொல்லிண்டிருக்கா, எனக்கென்ன தெரியும்?' என்றார் அப்பு.

அர்த்த மண்டபத்தில், பித்தளைக் கலசத்துடன் ஒரு தூண். விவாக மேடைக்குரிய அரசாணிக்கால் அது. காத்யாயனியை, சிவபெருமான் திருமணம் புரிந்து கொண்ட தலமல்லவா? மகா மண்டபத்தில் வடகிழக்கு மூலையில் தனியாக ஒரு தூண் இருக்கிறது. அது திருமணத்துக்காகப் போடப்பட்ட பந்தக்கால்.

அந்த மண்டபத்திலேயே மணவாளநாதர், மாப் பிள்ளை சுவாமி, கல்யாண சுந்தரேச்வரர் என்றெல்லாம் அழைக்கப்படும் ஸ்ரீவீழிநாத சுவாமி, வலப்புறம் மணப் பெண்ணாக நாணிக்கோணி நிற்கும் அம்பாளின் கரம் பிடித்து, இடப்புறமுள்ள ரிஷபத்தின் மீது இடக்கை ஊன்றி, மிக ஒயிலுடன் ஒய்யாரமாகக் காட்சிகொடுக்கும் நாயனாராகத் திகழ்கிறார். பீடத்தில், திருவடியருகில் தாமரை மலரும் பின்புறம் விளாம்பழமும் இருக்கின்றன. காத்தியாயன மகரிஷி, சுமங்கலை, மிழலைக் குறும்பர் ஐயனார், நாயன்மார்கள் முதலியவர்களின் எழுந்தருளும் வடிவங்களும் அங்கே உள்ளன.

அதே மண்டபத்தில் தென்புறம் கிழக்கு நோக்கி, தியாகராஜர் உற்சவமூர்த்தியிருக்கிறார். திருவிழாவின் இரண்டாம் நாள் புறப்பாடாகிறார். அவர் வலப்பாதத்தில் சக்கரமும், மேல்புறம் தாமரை மலரில் கண் போன்ற அமைப்பும் காணப்படுகின்றன. வலப்புறம் இருக்கும் திருமாலின் விக்ரகம், வலக்கரத்தில் சக்கரமின்றி, இடக் கரத்தில் சங்குடன் மட்டும் காட்சித் தருகிறது.

உள் கோபுரத்தில், மேற்குப்புறம், கருவறையை நோக்கியவாறு மகாவிஷ்ணுவின் சிற்பம் இருக்கிறது.

ஆலயத்தின் வெளியே, பின்புறம் ஓர் அழுக்குக் குட்டை. அதற்குப் புராணப் பெயர் விஷ்ணு தீர்த்தம். தற்காலப் பெயர், ஐயனார் குளம். அதன் வடபுறம் ஐயனார் கோயில் இருப்பதால், அப்பெயரால் அக்குளம் அழைக்கப்படுகிறது.

திருநாவுக்கரசரும் ஸ்ரீசம்பந்தரும் ஒன்றாக எழுந் தருளிய மிகச் சில திருத்தலங்களில் ஒன்று திருவீழி மிழலை. பஞ்ச காலத்தில், சிவனடியார்கள் பட்டினி கிடப்பதைக் கண்டு இம்மகான்கள் நெஞ்சு துடித்ததை யறிந்த ஸ்ரீ விழிநாத சுவாமி. இவர்களுக்குத் தினமும் ஒரு பொற்காசு அளித்ததையும், அதைக் கொண்டு இவர்கள் ஆயிரமாயிரம் பேருக்கு உணவளித்ததையும் படித்தும் கேட்டும் நெகிழ்ந்து போகிறோம். அவர்கள் உள்ளம் உருகி உருகிப் பாடியுள்ள பதிகங்களைப் படித்துப் பார்த்து, கேட்டுக் கேட்டு, பாடிப் பாடிப் பரவச மடைகிறோம். ஆனால், அவர்களுடைய நினைவாலயங் களைப் ஒழுங்காகப் பராமரிக்கிறோமா?

வடக்கு மாட வீதியில் மேற்குப்புறம் இருப்பது திருநாவுக்கரசரின் மடம். அதாவது, அவர் முன்பு அங்கு தங்கியிருந்ததன் நினைவாக அங்கு ஒரு கட்டடம் எழுப்பப்பட்டு, உள்ளே வைக்கப்பட்டுள்ள திருநாவுக்

கரசரின் சிலை ஆராதிக்கப்பட்டு வருவதாக எங்களுக்குக் கூறப்பட்டது. ஆனால், திறந்து பார்த்தபோது, அக்கதவு திறக்கப்பட்டு வெகு நாட்கள் ஆனதாகவே தோன்றியது. நிச்சயமாக அந்தச் சிலை நீர் கண்டு மாதக்கணக்காகி யிருக்க வேண்டும். சிலையின் மீதிருந்த துணியை அப்பு விலக்கியபோது, நூற்றுக்கணக்கான கரப்புகளும் பாச்சை களும் வகை வகையான பூச்சிகளும் சிலையை மொய்த்துக் கொண்டிருப்பதைப் பார்க்க நேர்ந்தது; மனம் நொந்தது.

அதே போல், கிழக்குப்புறம் இருக்கும் திருஞான சம்பந்தப் பெருமான் மடத்துக்குச் சென்று கதவைத் திறந்த அப்பு, 'ஐயோ'' என்று அலறியதைக் கண்டு நாங்கள் பயந்து விட்டோம். அந்த இரும்புக் கதவின் மீது சுகமாகப் படுத்து உறங்கிக் கொண்டிருந்த ஒரு பாம்பு பொத்தென்று கீழே விழுந்து ஒரு சந்து வழியாக 'சரசர'வென்று வெளியேறியதைக் கண்ட பின்னரே அப்புவின் அலறலுக்குக் காரணம் புரிந்தது.

ஆண்டுக்கொரு முறை உற்சவத்தின் போது, திறந்து மூடுவது என்று இல்லாமல், இந்த மடங்களில் பக்தர்கள் புழங்கத் தொடங்கினால், அவை தற்போதுள்ள நிலையில் நிச்சயம் இருக்காது. தேவாரம் ஓதுபவர்கள் சிறுவர் களைச் சேர்த்துக் கொண்டு தினம் மாலையில், திருவீழி மிழலைத் தேவாரப் பதிகங்களை இந்த மடங்களில் பாராயணம் செய்வது என்ற பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டால், மடங்களும் சுத்தமாக இருக்கும்; நம் மனதும் சுத்தமாகும். காலம் தவறாது மழை பெய்யும்; சமுதாயம் பஞ்சம் பட்டினியின்றி வாழும்.

ஸ்ரீ வீழிநாத சுவாமி ஆலயத்துக்கு எதிரில், வடகிழக்கே ஸ்ரீ மாரியம்மன் கோயிலிலும், அதே கிழக்கு வீதியின் தென்மேற்கு மூலையில் ஸ்ரீ தியாகராஜப்

பிள்ளையார் கோயிலும் இருக்கின்றன. இந்த விநாயக ருக்கு இசை வேளாளர்கள் இணைந்து உற்சவங்கள் நடத்தி வருகிறார்கள்.

இவ்விரண்டு கோயில்களுக்கும் இடையில், தேர் முட்டி மண்டபமும் தேர் சப்பரமும் இருக்கின்றன. திரு வீழிமிழலை தலபுராணமும் இதர தெய்வீகத் திருவிளை யாடல்களும் தேரில் அற்புதச் சிற்பங்களாக வடிக்கப்பட் டிருக்கின்றன. அவற்றின் மீது படிந்துள்ள மண்ணை அகற்றி, ஒவ்வொரு சிற்பத்தையும் நிதானமாக ஆராய்ந் தால் கண்ணுக்கும் கருத்துக்கும் அரும்பெரும் விருந்து கிடைக்கும். அந்தத் தேர் முப்பது ஆண்டுகளாக ஓடா மல் அங்கேயே நின்றிருப்பதாக அறிந்தோம். வீழியழ கரின் நேர்ப் பார்வையிலேயே நின்று கொண்டிருக்கும் அந்தத் தேர், அவரது கருணை விழியின் பேரொளியால் பழைய பெருமைகளோடும் கோலாகல வைபவங் களோடும் விரைவிலேயே ஓடத் தொடங்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்வோம்.

திருவீழிமலையில் முட்டையாறு எனப்படும் க்ஷீர நதியும் வடபுறமாகப் பாயும் அரிசொலாறும் சங்கமம் ஆகும் இடத்தை நாங்கள் தரிசித்தேயாக வேண்டும் என்று அப்பு எங்களை அங்கு அழைத்துச் சென்றார் தியாகராஜப் பிள்ளையார் கோயிலை அடுத்துள்ள பாதை வழியாகச் சற்று கிழக்கே சென்றால் அந்தக் காட்சியைக் காணலாம். கண்டோம். எங்களுக்குக் கிடைத்த புண்ணி யத்தில் அப்புவுக்கும் நிச்சயம் பங்குண்டு.

தை அமாவாசை தொடங்கி சிவராத்திரி அமாவாசை வரை இங்கு தினமும் விடியற்காலையில் நிறைய பேர் வந்து ஸ்நானம் செய்வார்களாம். முக்கியமாக விஷ்ணு புரத்திலுள்ள ஆண்களும் பெண்டிரும் வருவார்களாம்.

# ஸ்ரீ பத்ர வல்லீசர்

பெரிய கோயிலுக்குத் தெற்கே ஸ்ரீபத்திரவல்லீச்வரர் ஆலயம் இருக்கிறது. புரூரவசு மன்னன் தனது மனைவியின் 'குமர கண்ட நோய்' குணமாவதற்காகப் பிரதிஷ்டை செய்து வழிபட்ட சிவலிங்கம் இது. மண்ணில் புதைந்திருந்த அந்தக் கோயிலை ஸ்ரீ டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகளின் பாட்டனார் ஸ்ரீசுப்ரமணிய கனபாடிகள் கண்டுபிடித்து, புதுப்பித்துக் குடமுழுக்கு செய்வித்தார்.

திருவிடைமருதூரைச் சேர்ந்த அவர், திருவீழிமிழலை பிரும்மோற்சவத்தின் போது இங்கு வேத பாராயணத்துக்காக {வர, அங்கு ஒரு வில்வ மரத்தடியில் சிவலிங்கம் ஒன்றைக் கண்டு, மூடியிருந்த மண் குன்றை அகற்றப் போய் அதன் கீழ் கோயில் ஒன்றிருப்பது தெரிந்தது. பின்னர், பலருடைய ஒத்துழைப்புடன் அக்கோயிலைப் புதுப்பித்தார். ஸ்ரீ பாலகிருஷ்ண சாஸ்திரிகளின் சகோதரர் வல்லீசனுக்கு ஸ்ரீ பத்திரவல்லீசரின் பெயர் தான் வைக்கப்பட்டிருக்கிறது.

மேற்குப் பார்த்த சந்நிதி. சுற்றிலும் மதிற்சுவர் இல்லாத திறந்தவெளியில் இருக்கிறது கோயில். சந்நிதிக்கு அருகில், வடமேற்குப்புறம் பெரிய துரவுக் கிணறு ஒன்று இருக்கிறது. அதுதான் தலத்தின் தீர்த்தம். இக்கிணற்று நீர் பச்சை நிறத்தில் இருக்கிறது. இதில் ஒரு மண்டலம் ஸ்நானம் செய்தால், 'வலிப்பு நோய்' நிச்சயம் குணமாவதாகக் கூறுகிறார்கள்.

கிணற்றுக்கு மேற்கே ஸ்ரீபத்திரவல்லீச்வரி சந்நிதி இருந்ததற்கான அடையாளம் தெரிகிறது. தற்போது அம்மன் சிலை கோயிலுக்குள்ளேயே இருக்கிறது. இக் கோயிலுக்கு 1961-ம் ஆண்டு குடமுழுக்கு நடந்திருக் கிறது.

ஸ்ரீபத்திரவல்லீசர் சந்நிதிக்குத்தென்மேற்கில்,நந்தியை யடுத்து கிழக்கே பார்த்து விநாயகர் சந்நிதியுள்ளது. அத னுள் சுவர்க்காவதாரணேச்வரர் லிங்க வடிவில் இருக் கிறார். அவர் முன்பு தனிக்கோயில் கொண்டிருந்தார். அந்தச் சிவன் கோயில் மேற்கேயுள்ள ஸ்ரீ காத்தாயி அம்மன் கோயிலுக்கருகில் இருந்ததாம்.

ஸ்ரீபத்திரவல்லீச்வரர் ஆலயத்துக்கு ஐம்பதடி தென் மேற்கில், ஒரு துர்க்கா காளியம்மன் கோயில் இருக்கிறது. பழுதாகியிருந்த அந்தக் கோயிலை திரு. காளிமுத்து சகோதரர்களின் ஒத்துழைப்போடு, ஊர்மக்கள் நல்ல முறையில் திருப்பணிகள் செய்து குடமுழுக்கு செய்திருக் கிறார்கள். கடந்த மாதம் நாங்கள் சென்றிருந்த சமயம் மண்டலாபிஷேகம் முடிய இன்னும் ஒரு வாரம் இருக் கிறது என்று கூறினார்கள்.

திருவீழிமிழலையின் மேற்குப் புறத்தில் இரட்டைக் குளம் என்றும் தாமரைக்குளம் என்றும் அழைக்கப்படும் ஒரு பெரிய குளம் ஒன்றிருக்கிறது. அது பத்மதீர்த்தமும் பிரும்ம தீர்த்தமும் சேர்ந்த தீர்த்தம். தாமரைக்குளத்துக்குச் சற்றுத் தெற்கே ஸ்ரீஅபிமுக்தேச்வரர் ஆலயம் இருக்கிறது. மேற்கே பார்த்த சந்நிதி. ஸ்ரீஅபயாம்பிகை சந்நிதி கிழக்கு நோக்கியுள்ளது. அம்மன் சந்நிதிக்கு முன்னும், ஸ்ரீதட்சிணாமூர்த்தி சந்நிதிக்கு முன்னும் நந்தியிருக்கிறது.

திருவீழிமிழலையில் பெரிய கோயிலுக்குத் தென் மேற்குப்புறம் உள்ள பெருமாள் கோயில் சிறியதுதான். அக்கோயிலில் பெரிய விநாயகர் இருக்கிறார். ஸ்ரீநவநீத கிருஷ்ணன் எழுந்தருளியுள்ளார்.

திருவீழிமிழலைக்குத் தென்மேற்கில், அரிசிலாற்குக்கு மேல்கரையில் மூன்று கிலோமீட்டர் தொலைவில் 'நாலாம் கட்டளை' என்றொரு கிராமம். அக்கரையில் விஷ்ணு புரம் கிராமம். நாலாம் கட்டளையில் ஆச்ரமம் போன்ற ஒரு கொட்டகையில் ஒரு சிவலிங்கம் மட்டும் தனியாக இருக்கிறது. தல புராணத்தில் கூறப்பட்டுள்ள வருணேச லிங்கம்தான் அது.

அறுபது ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீசற்குரு ஞானதேசிக சுவாமிகள் என்ற மகான் ஒருவர் அங்கு இருந்திருக்கிறார். அவருடைய படம் அருகில் வைக்கப்பட்டுள்ளது. அவர் அந்த சிவலிங்கத்தை வழிபட்டிருக்கிறார். பின்னர், அவர் சற்றுத் தொலைவில் ஓரிடத்தில் சிறிது காலம் தங்கிவிட்டு, திருவண்ணாமலைக்கு அருகில் கானல்பாடி என்ற ஊரில் அடக்கமாகியிருக்கிறார். அவரது பக்தர்கள் அவரது குரு பூஜையைத் தவறாமல் நடத்தி வருகிறார்கள்.

பருவ மழை தவறும் போது அந்த சிவலிங்கத்துக்கு த் தொட்டி கட்டித் தண்ணீரில் மூழ்க வைத்தால் நிச்சயம் மழை பெய்யும் என்று அவ்வூரிலுள்ளவர்கள் கூறினார் கள். அந்தக் கொட்டகைக்குப் பின்னால் பெருமாள் கோயில் இருக்கிறது. 'அந்தப் பெருமாள் இந்த சிவலிங் கத்துக்குப் பூஜை செஞ்சதா எங்க பெரியவங்க சொல்லு வாங்க' என்று நடுத்தரப் பெண்மணி ஒருவர் கூறினார். திருவீழிமிழலைப் புராணத்தை, சுற்றிலும் உள்ள சிறு கோயில்களோடு இணைத்துப் பெருமையும் மகிமையும் சேர்த்திருக்கிறார்கள் நம் முன்னோர்கள்.

அடுத்து, நாங்கள் 'முதல் கட்டளை' என்ற கிராமத் துக்குச் சென்றோம். அது வடமேற்கே இரண்டு கி.மீ. தொலையில் உள்ளது. அங்கிருப்பது ஸ்ரீமார்க்கண் டேச்வரர் ஆலயம். கிழக்குப் பார்த்த சந்நிதி. மண்ட பத்தில் தட்சிணாமூர்த்தி, விநாயகர், அம்பாளுடன் ஒரு சிறிய நந்தியும், பலிபீடமும் இருக்கின்றன. பின்னால் திருக்குளம் இருக்கிறது.

சிறிய கோயில்தான். ஒருகால பூஜைதான் நடக்கிறது. விஷ்ணுபுரத்திலிருந்து குருக்கள் வந்து பூஜை செய்து விட்டுப் போகிறாராம்.

கோயிலுக்குப் பக்கத்தில் காளியம்மன் ஆலயமும், தீர்த்தத்துக்கு வடக்கே மாரியம்மன் கோயிலும் உள்ளன.

# செம்மங் குடி

திருவீழிமிழலைக்கு வடமேற்குத் திசையிலுள்ள 'முதலாம் கட்டளை'யில் உறையும் ஸ்ரீமார்க்கண்டேச்வரரைத் தரிசித்துக் கொண்டு, மேல் தண்டம் வந்து, கீர்த்திமான் ஆற்றின் கரையோரமாகவே மணியாங்குடி கிராமத்தையடைந்து, அந்த ஆற்றைக் கடந்து செம்மங்குடிக்கு வந்தோம். இது வேறொரு செம்மங்குடி. தஞ்சை மாவட்டத்தில் செம்மங்குடிக்கும் மகாராஜபுரத்துக்கும் குறைவேயில்லை!

செம்மங்குடிக்குப் புராணப் பெயர் குபேரேச்வரம். குபேரன் சிவபெருமானை வழிபட்ட தலம். சிறிய, அழகிய கிராமம். ஆனால், அங்குள்ள பழமையான கோயில் பாழமடைந்து போயிருக்கிறது. முன் மண்டபம் இடிந்து போய், சுவர்களிலும் விமானங்களிலும் புதர் மண்டிக் கிடக்கிறது.

இங்கு ஸ்ரீசுந்தரேச்வரர் ஸ்ரீசுந்தராம்பிகையுடன் உறைகிறார். சிவலிங்கமும், அம்பாள், சண்டிகேச்வரர், பிள்ளையார், விக்ரகங்களும், நந்தியும் பலிபீடமும் இருக்கின்றன. வெளியே தனியாக ஒரு சிவலிங்கம் இருக்கிறது. மனித நடமாட்டம் இல்லாததால் கீரிப்பிள்ளைகளின் நடமாட்டம் அதிகமாயிருக்கிறது!

கிழக்கே பார்த்த சந்நிதியுள்ள அந்தக் கோயிலுக்கு எதிரில் ஒரு குளம் இருக்கிறது. அதன் கரையில் ஓர் ஐயனார் கோயில். அதனால் அந்தக்குளம் ஐயனார் குளம் என்றழைக்கப்படுகிறது. அதுதான் புராண குபேரத் தீர்த்தமோ?

ஸ்ரீ சுந்தரேச்வரர் கோயிலுக்கு நேர் மேற்கே ஒரு விநாயகர் கோயில் இருக்கிறது. அவர் மிகவும் பழமை யானவர். தினமும் அவருக்கு முறையாகப் பூஜைகள் நடந்து வருகின்றன. உற்சவமூர்த்தியும் இருக்கிறது. கோயிலுக்குப் பின்புறம் இருப்பது 'பெத்தான் குளம்'.

இடிந்த கோயில்கள் உள்ள எல்லாக் கிராமங் களிலுமே ஒரு சிலராவது தங்கள் ஊர்க் கோயிலுக்கு நல்ல காலம் பிறக்க வேண்டுமே என்று உண்மையாகவே ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள். ஆர்வம் இருந்தால், பணமில்லை. யாராவது பண உதவி செய்கிறேன் என்று வந்தால், அதை வாங்கி நிர்வகிக்கக் கிராமத்தில் தேவையான ஒற்றுமை இருப்பதில்லை. திருப்பணி தொடங்கப்பட்டு, சில காரணங்களால் உற்சாகமும் உதவியும் குறைந்து போய், பாதியிலேயே நிற்கும் கோயில்கள் நிறைய இருக்கின்றன. ஒவ்வொரு கிராமத் தில் ஒவ்வொரு மாதிரியான பிரச்னை. மொத்தத்தில், 'யாராவது ஏதாவது செய்யமாட்டார்களா, நம்ம ஊர்க் கோயில்களில் விளக்கு எரியாதா, ஒருகால பூஜை யாவது நடக்காதா?' என்று மக்கள் நினைக்கத் தொடங்கியிருப்பதே பெரிய மூலதனமாகும். ஆக்கப் பணிகளுக்கு அடிப்படைத் தேவை ஆழமான எண்ணங் களும் அசைக்க முடியாத நம்பிக்கைகளும்தான். பெரும் பாலான மக்களின் உள்ளங்களில் உணர்ச்சி பூர்வமாக உருப்பெறும் விருப்பங்களுக்குச் செயல் வடிவம் தரும் பொறுப்பை இயற்கையல்லவா ஏற்றுக் கொள்கிறது!

செம்மங்குடி கிராமத்திலுள்ள உற்சாகம் மிக்க இளைஞர்களில் ஒருவரான சத்துணவு அமைப்பாளர் சேகரனை சந்தித்தோம். எப்படியாவது தங்கள் ஊர்க் கோயிலைப் புதுப்பித்து விடவேண்டும் என்பதில் ஆர்வமுடன் இருக்கிறார் அவர்.

## வடுகக்குடி

கீர்த்திமான் ஆற்றுக்குக் கீழ்க் கரையில் வசிட்டேச்வரம் இருக்கிறது. தற்போது அது வடுகக்குடி என்று அழைக்கப்படுகிறது. திருவீழிமிழலைக்கு வடகிழக்குத் திசையில் உள்ள அந்தக் கிராமத்தில் இருக்கும் பிள்ளையார் கோயிலையொட்டி ஒரு கீற்றுக் கொட்டகை போடப்பட்டிருக்கிறது. அதனுள் பெரிய சிவலிங்கம் இருக்கிறது. ஆனால், அது வசிட்டேச்வரர் இல்லை.

வடுகக்குடி–விளாகம் எல்லையில் ஒரு குடிசையையடுத்த திடலில் ஒரு சிவலிங்கம் இருக்கிறது. அதன் எதிரில் தரையில் பாதி புதைந்த பைரவர் சிலையைக் காணலாம். அந்த சிவலிங்கம்தான் திருவீழிமிழலை தல புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள வசிட்டேச்வரர் சிவலிங்கம். அந்த இடத்தை ஐவேலி கிராமம் என்றும் சொல்லுவார்களாம். சித்திரை மாதம் பிடாரி உற்சவத்தின்போது, பிடாரி அந்த லிங்கத்தை வலம் வருவது வழக்கமாம். அப்போது சிவலிங்கத்துக்கு எண்ணெய்க் காப்பு, பூஜை எல்லாம் நடைபெறுமாம்.

# கடகம்பாடி

திருவீழிமிழலையிலிருந்து மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது கடகம்பாடி. நல்லிசேரியைக் கடந்து செல்ல வேண்டும். தல புராணத்தில் இது இந்திரேச்வரம் என்று குறிப்பிடப்படுகிறது. தேவேந்திரன் பூஜை செய்த தலம்.

சுவாமி, அப்பருக்குக் கடகம் அடித்துக் கொடுத்த தலமாதலால், கடகம்பாடி ஆயிற்றாம். சுவாமி ஸ்ரீ சுந்தரேச்வரர். அம்பாள், ஸ்ரீ பாலசுந்தரி. மூன்று நிலைகளுடன் கூடிய பழமையான ராஜகோபுரம். அதைக் கடந்து சென்றால் பலிபீடம், நந்தி மண்டபம் விநாயகர்.

பிராகாரத்தின் தென்மேற்கு மூலையில் உள்ள விநாயகர் சந்நிதி, சிறிய அர்த்த மண்டபத்துடன் புதுமையாகக் காட்சியளிக்கிறது. வடமேற்கில் கிழக்கு நோக்கி ஸ்ரீ பாலசுந்தரி அம்பாளின் தனிக்கோயில் இருக்கிறது. எதிரில் நந்தி உள்ளது.

இக்கோயிலில் தேவ கோஷ்டத்தில் துர்க்கையில்லை. ஆனால், சுவாமி சந்நிதிக்கு வலப்புறம், விஷ்ணு துர்க்கை தனிச் சந்நிதி கொண்டிருக்கிறாள். சாந்த மூர்த்தியான இந்த வைஷ்ணவியைத் தேவேந்திரன், வழிபட்டதாகக் கூறப்படுகிறது. மிகவும் சக்திவாய்ந்த அம்மன் என்று காசி. என அழைக்கப்படும் விச்வநாத குருக்கள் கூறினார்.

துர்க்கை சந்நிதியில் தனியாக ஒரு சனீச்வரர். இருக்கிறார். இரண்டு சிவலிங்கங்கள் உள்ளன.

சுவாமி கோயில் மண்டபத்தில், சூரியன், பைரவர், நவக்ரகங்கள் இருக்கிறார்கள். நவக்ரகம் புதிய பிரதிஷ்டை.

உற்சவமூர்த்தியான ஸ்ரீசோமாஸ்கந்தர் கடக ஹஸ்தத்துடன் காட்சியளிக்கிறார். சாதாரணமாக இந்த மூர்த்தத்தில், ஸ்கந்தர் நின்று கொண்டிருப்பார். இதில் அமர்ந்திருப்பது ஒரு சிறப்பு.

திருவாதிரையின்போது ஸ்ரீநடராஜர் புறப்பாடு உண்டு.

ஸ்ரீபெருமாள் கோயிலைச் சேர்ந்த உற்சவ விக்ரகங் கள்-ஸ்ரீவாசுதேவப் பெருமாள்-ஸ்ரீதேவி-பூதேவி-இந்த கோயிலில் வைக்கப்பட்டிருக்கின்றன. இங்கு மற்றொரு சிவலிங்கமும் அம்பாளும் இருக்கின்றன. அவை எந்தக் கோயிலைச் சேர்ந்தவை என்பது தெரியவில்லை.

கடகம்பாடி கோயிலுக்குக் கும்பாபிஷேகம் ஆகிக் கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகள் ஆகின்றன. அடேயப்பா!

நான் கடகம்பாடிக்குச் சென்று அங்குள்ள சிவன் கோயிலை மட்டுமே பற்றிக் குறிப்பிட்டிருந்ததைப் படித்த சென்னை நுங்கம்பாக்கம் வாசியான ஒரு பெண்மணி, அங்குள்ள ஸ்ரீவாசுதேவப்பெருமாள் கோயிலைப்பற்றிக் கூறி ‘கடகம்பாடி நான் பிறந்த ஊர்’ இருபது வருடங்களுக்கு முன் நான் அங்கு சென்றிருந்த போது கோயிலில் ஒருவேளைப் பூஜைதான் நடை பெற்றுக் கொண்டிருந்தது. இப்போது அதுவும் இருக்கிறதோ இல்லையோ தெரியவில்லை’ என்று மன வேதனையோடு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதில் அவர் ‘என் பூர்வீக ஊர் என்பதால் மனம் பேதலிக் கிறது. எனக்கு மூன்று பேரும் பெண்கள்.

பிள்ளையில்லை. கோயில் விஷயத்தில் ஒரு முயற்சியும் எடுக்க முடியாத நிலையில் நான் இருக்கிறேன்' என்று அவர் தன் உணர்ச்சிகளைக் கொட்டி எழுதிய அந்தக் கடிதம் என்னை வெகுவாகப் பாதித்தது. தங்கள் கிராமக் கோயில்களின் தற்போதைய நிலையை குறித்து இப்படி ஒவ்வொருவரும் கண்ணீர் வடிக்கத் தொடங்கிவிட்டால்... ...உண்மையான உணர்வுகளும் உளமார்ந்த பிரார்த்தனையும் கோடி ரூபாய்க்குச் சமமாகும். நல்ல உள்ளத்தில் பிறக்கும கண்ணீர், மக்கள் மனங்களைத் தூய்மைப்படுத்தும், மண்ணையே புனிதப்படுத்தும், விண்ணோர் வியக்கும் விந்தைகள் புரிய வைக்கும்.

கிராமக் கோயிலில் விளக்கெரிய வேண்டும் என்று பிறந்த மண்ணின் மேல் உள்ள பாசத்தால், படைத்தவனின் மேல் வைத்த பேரன்பால் எங்கோ ஒரு பேதை மனம் ஏங்குவதை விடப் பெரிய மூலதனம் ஒரு கிராமத்துக்குக் கிடைத்து விடமுடியாது. அப்படியொரு புனிதவதியைப் பெற்றெடுத்த புண்ணிய மண்ணை மீண்டும் ஒருமுறை மிதிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் கடகம்பாடிக்குச் சென்றேன்.

பட்டப்பகலிலேயே உறங்கிக் கொண்டிருந்த அந்தக் கிராமத்தில், அக்ரஹார ரெட்டைத் தெருவிலிருந்த முதியவர் தியாகராஜ சாஸ்திரிகளை எழுப்பி, ஸ்ரீவாசுதேவப் பெருமாள் ஆலயம் எங்கிருக்கிறது என்று கேட்டேன். அவரே அழைத்துச் சென்றார். அதே தெருக் கோடியிலிருந்தது அச்சிறிய கோயில்.

அந்தக் கோயிலில், பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு, ஒருமுறை கும்பாபிஷேகம் நடைபெற்றிருக்கிறது. சில வருடங்களுக்கு முன் சிறிய அனுமார் ஒன்றும் பிரதிஷ்டை ஆகியிருக்கிறது.

மூலவரான ஸ்ரீதேவி, பூதேவி சமேத ஸ்ரீ வாசுதேவப் பெருமாள் என்னையும் நீரையும் பார்த்து

எத்தனை மாதங்கள் ஆயின்றோ தெரியவில்லை. மாதப் பிறப்பன்று அபிஷேகம் நடைபெறுவதாகக் கூறினார்கள். கேட்டுக் கொண்டேன்.

ஒரு வேளை பூஜை நடைபெற்று வருகிறது என்றும் போர்டிலிருந்து வரவேண்டிய 35 ரூபாய் 1978 – ம் ஆண்டிலிருந்து தரப்படாதலால், கிராமத்தார் கொடுக்கும் 24 கலம் நெல்லில் பூஜை நடைபெறுவதாகவும் கூறினார்கள்.

## அய்யன்பேட்டை

திருவீழிமிழலைத் தல புராணத்தை மீண்டும் நினைவுபடுத்திக் கொள்வோம். அப்பரடிகளும் திருஞானசம்பந்த சுவாமிகளும் இங்கு தரிசனத்திற்கு வந்தபோது கடும் பஞ்சம் ஏற்பட்டு, சிவனடியார்களைப் பட்டினியிலிருந்து காப்பாற்ற வேண்டி அவர்களிருவரும் இறைஞ்ச, ஸ்ரீவிழிநாதர் இருவருக்கும் தினமும் ஒரு பொற்காசு அளிக்க, இப் பஞ்சகாலத்தில் இக் காசுகளை எங்கு எடுத்துச் சென்று உணவுப் பொருட்களை வாங்குவதென்று தெரியாமல் அவர்கள் மயங்க, 'கீழ்த் திசை செல்க' என்று வானில் ஓர் அசரீரி ஒலித்தது.

அவ்வாறே மகான்கள் இருவரும் அடியார்களைக் கிழக்குத் திசையில் அனுப்பி வைத்தார்கள்.

அங்கு சிவபெருமானும் பார்வதியும் ஆவண வீதியமைத்துச் செட்டியார் குலகக்களாக உருக்கொண்டு மளிகைச் சாமான்கள் வியாபாரம் செய்யத் தொடங்கினர். அவர்களிடம் அரிசி முதலான பண்டங்களைப் பெற்று,

சமையல் செய்து தினமும் சிவனடியார்களுக்கு உணவ ளிக்கச் செய்து உளம் மகிழ்ந்தனர் இவ்விரு பெரி யார்களும்.

புராதன ஆவண வீதி தற்போது திருவீழிமிழலைக் குச் சற்றுக் கிழக்கே, அய்யன்பேட்டை என்ற பெயரோடு விளங்குகிறது.

சம்பந்தருக்குக் கிடைத்த பொற்காசில் மாற்றுக் குறைவு என்று கூறி இந்த ஆவண வீதியில்தான் வாசி போட்டு நேரங்கடந்து பண்டங்கள் கொடுத்தார்கள். அதனால் தினமும் அவரது மடத்தில் உணவு தயாராவ தற்கு நேரமாயிற்று. சீக்கிரமாகப் பண்டங்கள் கிடைத்த தால், அப்பரடிகளின் மடத்தில் விரைவாக உணவளிக் கப்பட்டது. இதைக் கண்டு மனம் வருந்திய சம்பந்தர், தமக்கு மட்டும் மாற்றுக் குறைந்த காசு கிடைத்த கார ணத்தைப் பற்றிச் சிந்தித்தார். பின்னர், அப்பர் பெருமான் மனம், மெய், மொழிகளால் இறைவனுக்கு முத்தொண்டு செய்வதையும் தாம் மனம், மொழி தவிர மெய்யினால் (உடலுழைப்பாக உழவாரப் பணிவிடை) செய்யாததை நினைத்து, இதை மறைமுகமாக உணர்த்திய எம்பெருமா னின் பெருங்கருணையைப் போற்றி, ‘வாசி தீரவே காசு நல்குவீர்’ எனப் பதிகம் பாடிப் பரமனை மகிழ்வித்தார். இறைவன் இவருக்கும் வாசியில்லாக் காசு கொடுத்தருளி னார். அதனைப் பெற்றுச் சென்ற சிவனடியார்களும் அந் நாள் முதல் காலந்தாழாது அடியார்களுக்கு அமுது படைத்தனர். பெரியபுராணத்தில் சேக்கிழார் பெருமான் கூறுகிறார்:

‘மற்றை நாட்டெம் பிரான் கோயில்புக்கு
வாசி தீர்த்தருளுமெனப் பதிகம்பாடி
பெற்றபடி நற்காசு கொண்டு மாந்தர்
பெயர்ந்து போயாவண வீதியினிற் காட்ட

நற்றவத்திதீரிக் காசு சாலநன்று
வேண்டுவன நாந்தருவோமென்று நல்க
அற்றைநாட் தொடங்கி நாட்கூறு தன்னில்
அடியவரை அமுது செய்வித்தார் ஆர்வமிக்கார்'

ஆவண வீதியாக இருந்த அய்யன்பேட்டையில் கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீ சுந்தரேச்வரசுவாமி செட்டியப்பர் என்றும், மீனாட்சி அம்மை படியளந்த நாயகியென்றும் அழைக்கப்படுகிறார்கள். சுவாமியின் உற்சவ மூர்த்தி தராசு பிடித்த கரத்தோடு இருக்க, அம்பாள் வடிவம் படியைப் பிடித்த கரத்தோடு காட்சியளிக்கிறது.

# மானந்தகுடி

அப்பரும் ஞானசம்பந்தரும் இறைவன் அருளால், அடியார்களுக்கு அன்னமிட்ட புண்ணிய தலத்தைக் காண நாங்கள் சென்று கொண்டிருந்தோம். வலப்புறம் ஒரு கோயில் கோபுரம் தெரியவே, அதுதான் செட்டியப்பரின் ஆலயமாக இருக்குமென்று நினைத்து அப்பக்கம் திரும்பிச் சென்றோம், அங்கு சென்ற பின்னர்தான் அது 'மானந்தகுடி' என்று தெரிந்தது.

கிழக்கு நோக்கிய ராஜகோபுரத்துடன் கூடிய அழகிய சிறு கோயில். ஸ்ரீ ஏகாம்பரேச்வரரும் ஸ்ரீகாமாட்சியும் இங்கு எழுந்தருளியுள்ளனர்.

சிறிய அம்பாள், தெற்குப் பார்த்துத் திருச்சந்நிதி கொண்டிருக்கிறாள். வெளியிலிருந்தே தரிசிக்கும்படி சந்நிதிக்கு நேராக ஒரு வாசற்படி இருக்கிறது.

மேற்குப் பிராகாரத்தில் ஸ்ரீ விநாயகர், சுப்ரமணியர், மகாலட்சுமி சந்நிதிகளுடன், மகாலிங்க சுவாமி லிங்கமும்

மணிகர்ணிகேச்வரர் லிங்கமும் உள்ளன. கோஷ்டத்தில் துர்க்கையிருக்கிறாள். பிராகாரத்தின்வடகிழக்கு'மூலையில் மாரியம்மன், சனீச்வரன், சூரியன், பைரவர், நாகர் முத லியவர்கள் இருக்கின்றனர். 1940 – ம் வருடத்தில் ஒரு முறையும், 1960 -ம் வருடத்தில் ஒருமுறையும் குடமுழுக்கு நடைபெற்றிருக்கிறது. கோயிலுக்குத் தென்புறம் பெரிய குளமிருக்கிறது.

கிராம மக்களின் ஒத்துழைப்போடு அன்றாடப் பூஜைகளும் உற்சவங்களும் தவறாமல் நடைபெற்று வரு வதாக அறங்காவலர் தியாகராஜன் கூறியதைக் கேட்க மகிழ்ச்சியாய் இருந்தது. இங்கு கந்த சஷ்டிக்கு ஆறுநாள் விழா எடுக்கிறார்கள்.

இந்தக் கோயிலில் சிறப்பாகக் கண்ணில்படுவது, வடக்குப் பிரகாரத்தில் கிழக்கு நோக்கியுள்ள ஸ்ரீ ஆஞ்ச நேயமூர்த்தியின் திருச்சந்நிதியே. அவர் வீர ஆஞ்சநேய ராக எழுந்தருளியிருக்கிறார். சிவாலயத்தில் இப்படியோர் அபூர்வ சந்நிதியிருப்பதைப் பற்றிக் கேட்டபோது, 'அனு மான் வந்த குடி' தான் 'மானந்தகுடி' யாக மருவியுள்ள தாக ஓர் அரிய செய்தியை அறிகிறோம்.

ஸ்ரீ ராமர் தல தர்ப்பணம் செய்வதற்காக அனுமார் தர்ப்பை பறிக்க ஆண்டார் பந்தி என்ற ஊருக்குச் செல் லும் வழியில் இந்தஊரில் தங்கினதாகவும், அதனால் அப் பெயர் தோன்றியதாகவும் ஒரு கதையைக் கூறினார்கள்.

மானந்தகுடியிலிருந்து மேற்கே ஒரு கிலோ மீட்டர் தொலைவுக்குள் அய்யன்பேட்டை கோயில் இருக்கிறது. ஊருக்குள் நுழையும்போதே மாரியம்மனைத் தரிசித்துக் கொண்டு செல்கிறோம்.

சிறிய கோயில்தான். திருப்பணி நடந்து பாதியில் நின்றிருப்பது பார்த்த உடனேயே தெரிகிறது. யார் உதவி செய்யப் போகிறார்களோ, மீதிப் பணிகள் எப்போது

முடிந்து, எப்போது குடமுழுக்கு நடைபெறப் போகிறதோ என்று கிராம மக்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். சுவாமி, அம்மன் கோயில் மண்டபங்கள், விமானங்கள் வேலை முடிந்திருக்கிறது. பாலாலயத்தில் துர்க்கை, சூரியன், அம்பாள், பைரவர், சண்டிகேச்வரர், தட்சிணா மூர்த்தி முதலிய மூர்த்திகள் இருக்கின்றன.

சிவலிங்கம், பட்டை லிங்கம். ஜீவகளையோடு அம்ச மாகத் திகழ்கிறது.

செட்டியப்பரையும் படியளந்த நாயகியையும் காண வேண்டும் என்று விரும்பி அவை எங்கிருக்கின்றன என்று கேட்டபோது, தற்போது 'கோர்ட்டில் இருக்கிறது' என்று பதில் கிடைத்தது. மன வருத்தப்பட்டு விவரத்தைக் கேட்டோம்.

சில மாதங்களுக்கு முன் அந்த இரு அபூர்வ சிலைக ளும் திருட்டுப் போய்விட்டனவாம். இதையறிந்த ஊர் மக் கள் தங்கள் வீட்டில் கொள்ளை போய்விட்டதாகவே நினைத்துத் துடிதுடித்துப் போயிருக்கிறார்கள். ஊர்முழுவ துமே துக்கம் அனுஷ்டித்து இருக்கிறார்கள். மூன்றுநாட்கள் யார் வீட்டிலும் அடுப்பெரியவில்லையாம். பெண்டிரும் சிறுவர், சிறுமியரும் பித்துப் பிடித்ததுபோல் அமர்ந்திருக்க, முதியவர்களும் இளஞ்சிங்கங்களும் இரவெல்லாம் கண் விழித்து ஊரைச் சுற்றிக் காவல் போட்டிருக்கிறார்கள். அருகிலிருந்த குளத்தில்தான் போட்டுவிட்டுப் போயி ருப்பார்கள் என்று அவர்களுக்குச் சந்தேகம் தோன்றவே அதைக் கண்கொத்திப் பாம்பாகக் கண்காணித்திருக்கிருக் கிறார்கள். மூன்றாவது நாள் நள்ளிரவில் இவர்களெல்லாம் இருட்டில் பதுங்கியிருக்க, ஒருவன் குளத்தில் மெள்ள இறங் குவதைப் பார்த்து,நான்கு பக்கமும் அவனைச் சுற்றிவளை த்துப்பிடித்து, அவனிடமிருந்து உண்மையை வரவழைத் திருக்கிறார்கள். பின்னர், குளத்தில் இறங்கி, அப்பனை யும் அம்மையையும் கண்டுபிடித்து போலீசில் ஒப்படைத்

திருக்கிறார்கள். தற்போது உற்சவமூர்த்திகள் பத்திரமாக கோர்ட்டில் இருப்பதாகவும், விரைவில் அவற்றை மீட்டு வந்து, பாதுகாப்போடு தங்கள் ஊரிலேயே வைத்துக் கொள்ளப் போவதாகவும் கூறினார்கள். தெய்வ பக்தி மிக்க அய்யன்பேட்டை வாசிகளை நெஞ்சார வாழ்த்தி வணங்கிவிட்டு வந்தேன்.

எந்தக் கிராமத்தில் மக்கள் கோயிலைப் பொதுச் சொத்தாகக் கருதி கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொள்கிறார்களோ, இறைவனையும் இறைவியையும் தங்களது பெற்றோர் போல் பாச உணர்வோடு பாது காக்கிறார்களோ, அந்தக் கிராமத்தில் சிலைகள் திருட்டு போவதற்கே வாய்ப்பில்லை. அது மட்டுமல்ல; ஊர்க் கட்டுப்பாடோடு, ஒற்றுமையுணர்வும் பக்தி உள்ளமும் இருந்து விட்டால் பாழடைந்துள்ள அத்தனை கோயில் களிலும் விளக்கு எரியும்; நைவேத்திய ஆராதனைகள் நடைபெறும். சந்தேகமே வேண்டாம்.

அய்யனே வணிகர் உருத்தாங்கி வந்து ஆவண வீதி யில் மளிகை வியாபாரம் செய்ததால், இது அய்யன் பேட்டை என்று வழங்கி வருவதாகக் கூறுகிறார்கள்.

## களஞ்சியூர்

அய்யன்பேட்டைக்கருகில் அரிசியும் இதர பண்டங் களும் சேமித்து வைத்திருந்த இடத்தைக் களஞ்சியமூர் என்று அழைத்திருக்கிறார்கள். தற்போது அது களஞ்சி யூர் என்று விளங்குகிறது. பூந்தோட்டத்துக்கு மேற்கே, குடந்தைக்குச் செல்லும் பஸ் பாதையில், மருதவஞ்சேரி பஸ் நிலையத்திலிருந்து வடக்கே ஒரு கிலோ மீட்டர் தொலைவிலிருக்கிறது களஞ்சியூர்.

இங்குள்ள பெருமாள் கோயிலில் கமலநயனப் பெருமாள் எழுந்தருளியிருக்கிறார். வீழிநாதருக்கு 999 தாமரை மலர்களை அர்ச்சித்துவிட்டு, ஆயிரத்துக்கு ஒரு மலர் குறைந்ததால் திருமால், தனது தாமரைக் கண்ணை எடுத்து அர்ச்சித்ததாகத் தல புராணம் கூறுவதற்கேற்ப, இங்கே அவர் கமலநயனப் பெருமாளாகத் தங்கியிருப் பது பொருத்தம்தானே! இக்கோயிலில் ஒரு விநாயகரும் வீற்றிருக்கிறார். பட்டாச்சாரியார் இல்லை. சுவாமிநாதன் என்ற குருக்கள் பையன்தான் பிரசாதம் அளித்தான்.

களஞ்சியூரில் 'பொய் சொல்லாப் பிள்ளையார்' கோயில் இருக்கிறது. மிகவும் புதுமையான பெயர். பின் னணியில் சுவாரஸ்யமான புராணக்கதை நிச்சயமிருக்கும். விசாரித்தபோது அங்கிருந்தவர்களுக்கு அது தெரிய வில்லை. அந்தந்த ஊரைச் சேர்ந்தவர்கள், கடவுளர் களுக்கு இம்மாதிரி இடப்படும் காரணப் பெயர்களைக் குறித்துத் தல புராணம் அறிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்து வைத்துக் கொள்வதோடு, அவற்றை எழுதியும் வைத்துக் கொள்ளவேண்டும். அதன்சுருக்கத்தைஆலயத் திலும் தீட்டி வைத்தால் மிகவும் பயனுள்ளதாக இருக்கும். இதையெல்லாம் பற்றி யாராவது வந்து ஆராய்ச்சி செய்து பட்டம் வாங்கிக் கொண்டு போகட்டும் என்று இருந்து விடாமல், கிராமத்தைச் சேர்ந்த இளைஞர்கள் தங்கள் ஊர்க் கோயில்களைப்பற்றி அறிந்து கொள்வதில் ஆர்வம் காட்ட வேண்டும். தமிழ்த் தாத்தா சுவடிகளைத் தேடி அலைந்தது போன்று சிரமப்படவேண்டும். கண்டுபிடித்து விட்டதில் ஏற்படும் எல்லையற்ற மகிழ்ச்சி ஒருபுறமிருக்க பின்வரும் தலைமுறையினருக்கு அவை பயன்படுவதால் கிடைக்கும் புண்ணியமும் அவர்களை வந்தடையும்.

பொய் சொல்லா விநாயகமூர்த்தி உள்ளம் கவர் மூர்த்தியாய் வீற்றிருக்கிறார். சாந்நித்யம் மிகுந்த வடிவம்.

ஆலயத்தின் மூன்று புறங்களிலும் வயல்கள் சூழ்ந்திருக்க, முன்புறம் அழகிய திருக்குளம் ஒன்றிருக்கிறது.

களஞ்சியூருக்கும் திருவீழிமிழலை ஆலயப் பிரும் மோற்சவத்துக்கும் தொடர்பு ஏற்படுத்தித் தந்திருக் கிறார்கள் நம் முன்னோர்கள். களஞ்சியத்திலிருந்து தானியம் எடுத்து செட்டியப்பர் வாணிபம் செய்த பின்னரே, சித்திரை மாதம் மிருகசீரிஷ நட்சத்திரத்தன்று வீழிநாதர் கோயிலில் கொடியேற்றப்படும். மக நட்சத் திரத்தில் திருக்கல்யாணமும், சித்திரை நட்சத்திரத்தில் தீர்த்தவாரியும் நடைபெறுகின்றன.

இதைத் தவிர சஷ்டி உற்சவமும், திருவாதிரை உற்சவம் பத்து தினங்களும் நவராத்திரி உற்சவமும் சிறப் பாக நடைபெறுகின்றன.

பண்டைக்கால வளமும் செழுமையும் மறைந்து போய் விட்டாலும், சமுதாய நோக்கு முற்றிலும் மாறுபட் டிருந்த போதிலும், வளர்ச்சித் திட்டங்களுக்கு இடையே இன்றும் வறுமையின் சின்னங்களைக் காண முடிந்தாலும் நம் கிராம மக்களின் உள்ளங்களிலும் ஜீவநாடிகளிலும் புராண கால ஆன்மீகப் பண்பாடுகளும் மனித நேய உணர்வுகளும் உயிர்ப்புடன் வாழ்ந்து கொண்டிருப்பதை காண முடிகிறது. மதிய வேளையில் களைப்புடன் வரும் எங்களைக் கண்டால், ஒரு தரத்துக்குப் பத்துதரம் நாங்கள் பகல் உணவருந்திவிட்டோமா என்று விசாரித்து விட்டு, தங்க நிழல் காட்டி, தாகம்தீர இளநீரோ, குளிர் நீரோ, சூடான டீ, காபியோ தந்து விருந்தோம்பும் நெறி யில் வாழையடி வாழையென வரும் திருக்கூட்டத்தின் வழித்தோன்றல்களாகப் பழகுகின்றனர். பிரசாரங்களில் மயங்கி உதட்டளவில் தெய்வத்தை மறுக்கும் அன்பர் களும் உள்ளத்தளவில் தங்களூர் ஆலயங்கள் மேம்பாடு அடைய வேண்டும் என்று விரும்புவதைக் காண முடிகிறது.

'எல்லாம் பாழாகி விட்டன; நல்லவையெல்லாம் நலிந்து விட்டன; நல்லோரெல்லாம் மறைந்து விட்டனர்' என்று ஓயாமல் அழுது புலம்புபவர்கள், திறந்த மனத்தோடும், கண்களோடும் காதுகளோடும் கிராமங்களைத் தேடித் தேடிச் சென்றால், மூலை முடுக்குகளுக்கெல்லாம் முனைந்து சென்று உண்மையை அறிய முயன்றால், இறை உணர்வு எனும் பயிர் வாடாமல் செழித்துக்கொண்டிருக்கும் நம் மண்ணின் பெருமையைக்கண்டு பெருமிதம் அடையலாம்; உறுதியும் ஊக்கமும் பெறலாம்.

அய்யன்பேட்டையில் எங்களுக்கு இளநீர் வெட்டித் தந்ததோடு, இளைப்பாறிவிட்டுச்செல்லும்படி உபசரித்த அன்பர்கள், கோயிலுக்கு விரைவிலேயே குடமுழுக்கு நடந்து, கோர்ட்டில் இருக்கும் விக்ரகங்கள் ஊருக்கு வந்து சேர வேண்டும் என்று ஆவலோடு காத்திருப்பதாக ஆதங்கத்துடன் கூறினர். களஞ்சியூரில், பக்கிரிசாமி பிள்ளை என்பவர், வெயில் தாழும்வரை தங்கள் வீட்டில் சிறிது ஓய்வு எடுத்துக் கொண்டு செல்லும்படி கேட்டுக் கொண்டு, சூடான பானம் தந்து உபசரித்தார். ஸ்ரீபெருமாள், விநாயகர் கோயில்களுக்கு ஐந்து ஆண்டுகளுக்கு முன் குடமுழுக்கு நடந்ததைப் பற்றி உற்சாகத்துடன் கூறினார்.

## ஆண்டார்பந்தி

அய்யன்பேட்டைக்கு வந்த அடியார்கள், அப்பரும் சம்பந்தரும் தந்த பொற்காசுகளை மளிகைக் கடையில் கொடுத்து அரிசியும் பிற பொருட்களும் வாங்கி, மேற்கேயுள்ள அண்டர்பந்திக்குச் சென்று (தற்போது ஆண்டார் பந்தி என்றழைக்கப்படுகிறது) அங்கு சமையல் செய்து

மக்களுக்கு அமுது படைத்தனராம். பந்தி பந்தியாக அடியார்களுக்கு அமுது படைக்கப்பட்டதால் ஊரின் பெயரோடு பந்தியும் ஒட்டிக் கொண்டு விட்டது போலும்!

களஞ்சியூரிலிருந்து மருவத்தூர் வந்து அங்கிருந்து வலப்புறம் திரும்பி ஒரு கிலோமீட்டர் தொலைவிலுள்ள ஆண்டார்பந்தி என்ற சிற்றூருக்கு வந்து சேர்ந்தோம். இது அய்யன்பேட்டைக்கு மேற்கேயுள்ளது. அரசிலாறும் நூலாறும் பிரிவது இங்குதான்.

அங்குள்ள கைலாசநாதர்-காமாட்சிஅம்மன் ஆலயம் மிகவும் புராதனமானது. மிகவும் பாழடைந்த நிலையில் உள்ள கோயில்களில் இதுவும் ஒன்று.

கோபுர வாசல், மதிற்சுவர் எல்லாம் காரைப்பூச்சு கரைந்து, பழுதடைந்த செங்கல் கட்டடமாகப் பரிதாபமாக நின்றுகொண்டிருக்கிறது. மொட்டைக் கோபுர வாசலாகவே இருந்ததா, அல்லது இருந்த கோபுரம் இடிந்து விழுந்துவிட்டிருக்கிறதா எல்பது தெரியவில்லை. உள்ளே இருக்கும் மண்டபம் விரிசல் கண்டு பிளவுற்று, அதில் செடிகள் காடாக மண்டிக் கிடக்கின்றன. சுவாமி விமானம் சிமெண்ட் பூசப்பட்டு, கலசமில்லாமம் காட்சி யளிக்கிறது. கலசமிருக்க வேண்டிய இடத்தில் கவனமுடன் வளர்க்கப்பட்டது போன்று செடியொன்று காட்சி யளிக்க, அந்த விமானமே ஒரு பெரிய பூந்தொட்டிபோல் தோற்றமளிக்கிறது.

மேற்குப் பிராகாரத்தில் விநாயகர், பாலசுப்ரமணிய சுவாமி, தண்டாயுதபாணி சந்நிதிகள் உள்ளன. விமானங்களெல்லாம் கீலமாகிப் போயிருக்கின்றன. அம்பாள் விமானத்தில் செடி கொடிகள் மண்டியிருப்பதோடு சுதை பிம்பங்களும் உடைந்திருக்கின்றன.

கோஷ்டத்தில் இருக்கும் தட்சிணாமூர்த்தி அம்சத்தோடு விளங்குகிறார்.

மண்டபத்தில் பைரவர், சண்டிகேச்வரர் இருக்கின்றனர். நந்தியும், பலிபீடமும் உள்ளன. அங்குள்ள திருநாவுக்கரசர் சிலையில் உள்ள உழவாரப் படை சற்று பின்னமாகியுள்ளது. சம்பந்தரைப் போன்று அவரும் கைகளில் தாளங்கள் வைத்திருக்கிறார்.

இது திருமீயச்சூர் ஆலய நிர்வாகத்துக்கு உட்பட்ட கோயில் என்று அறிந்தோம். குடமுழுக்கு நடைபெற்று எண்பது ஆண்டுகளுக்குமேல் இருக்கலாம் என்று கூறினார்கள். பல ஆண்டுகளுக்குமுன் இங்கு திருவீழிமிழலை பெருமான் எழுந்தருளியிருக்கிறார் என்றும், அந்த உற்சவச் சிறப்புக்களெல்லாம் தற்போது நின்றுவிட்டதென்றும் சுவாமிநாத குருக்கள் கூறினார்.

ஆண்டவனின் அருளால், பொற்காசு பெற்ற அப்பரும் சம்பந்தரும் அடியார்களுக்குப் பந்தி பந்தியாக அன்னமிட்ட மண்ணில், கைலாசநாதரும் காமாட்சியன்னையும் குடிகொண்டிருக்கும் திருக்கோயிலை இந்த நிலையில் இன்னும் எத்தனை நாட்கள் விட்டு வைத்திருப்பது? நாம் தினமும் உண்ணும் உணவும் அந்த ஆண்டவன் இடும் பிச்சைதானே? அவருக்கு வேறெந்த கைமாறும் செய்ய முடியவில்லையென்றாலும் அப்பனும் அம்மையும் உறையும் இல்லத்தையாவது நாம் திருப்பணி செய்ய வேண்டாமா?

## மருந்தஞ்சேரி

பூந்தோட்டத்திலிருந்து கும்பகோணம் செல்லும் பேருந்துப் பாதையில், ஐந்தாவது கிலோ மீட்டரில்

,மருதஞ்சேரி' கிராமம் இருக்கிறது. பஸ் ஸ்டாண்டில் இறங்கி, இடதுபுறமாக ஒரு கிலோ மீட்டர் சென்றால் அக்கிராமத்தை அடையலாம்.

'மனுதவம் சேரி' தான் மருதவம்சேரியாகி, தற்போது மருதஞ்சேரி என்று மருவியிருக்கிறது.

இரண்டாவது மனு இங்கு தவமியற்றியிருக்கிறார். ஒரு சமயம் அவர் யாகம் செய்தாராம். அப்போது, நூறு அந்தணர்களுக்கு இருக்க இல்லமும், நிலமும் கொடுப்பது என்று முடிவு செய்து, அவ்வாறு ஓர் அறிவிப்பும் விடுத்தார். இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டு, சுற்றுப் புறங்களிலிருந்த வேத விற்பன்னர்களான அந்தணர்கள் வந்து சேர்ந்தார்கள். ஆனால், மனு கோரியிருந்தபடி நூறு பேர் வரவில்லை. 98 பேர்தான் வந்து சேர்ந்தார்கள், இன்னும் இருவர் வந்தால் அல்லவா அவரது யாகம் பூர்த்தியாகும்?

அன்று இரவு மன உளைச்சலுடன் படுத்தவரின் கனவில் ஸ்ரீ திருவீழிமிழலைப் பெருமான் வந்து அவரது விருப்பத்தை நிறைவேற்றுவதாக வாக்களித்தார். மறு நாட்காலை எழுந்த மனு, புதிதாக வரப்போகிறவர்களுக் காக ஆவலுடன் காத்திருந்தார்.

இரண்டு வயோதிக அந்தணர்கள் வந்தார்கள். ஒரு சிறுவனின் துணையோடு, அவன் கையைப் பிடித்துக் கொண்டு வந்தார்கள்.

மனுவுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. அவர்களை முறைப்படி உபசரித்து, வீட்டையும் வயலையும் தான மாகப் பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டார். ஆனால், அவர்களோ, தாங்கள் தானம் வாங்கும் வழக்க மில்லை என்று கூறிவிட்டார்கள். மனு சங்கடப்பட்டார். இதையறிந்த சிவபெருமானும் ஸ்ரீ வரதராஜரும் தங்களது சுய உருவைக் காட்டினார்கள். துணைக்கு வந்த சிறுவன் விநாயகரே என்பதையும் மனு புரிந்து கொண்டார்,

தன்னை ஆசீர்வதிக்கும்படி அவர்கள் திருவடிகளில் விழுந்து வணங்கினார். அங்கேயே தங்கும்படி வேண்டிக் கொண்டார். அவ்வாறே, இரு அந்தணர்களுக்காக ஒதுக்கப்பட்டிருந்த நிலங்களில் இருவரும் தனித்தனியே கோயில் கொண்டார்கள்.

இங்குள்ள சிவன் கோயிலில் ஸ்ரீ மனுநாதேச்வரர் உறைகிறார். அம்பாளின் திருநாமம், மாணிக்க சிவகாமி.

1948-ம் ஆண்டு கும்பாபிஷேகம் நடைபெற்றிருப்பதாக ஓர் அறிவிப்புக் கூறுகிறது. (கோயில் இருக்கும் நிலையைப் பார்த்தால் அதற்குப் பின்னர் மற்றொரு குடமுழுக்கும் நடைபெற்றிருக்குமோ என்று நினைக்கத் தோன்றுகிறது) உள் மண்டபத்தில் பெரிய விரிசல் கண்டு அது பிளவுபட்டிருக்கிறது. 'இடி விழுந்திருக்குமோ' என்று நினைக்கத் தோன்றுகிறது.

மேற்குப் பார்த்த சந்நிதி. மண்டபத்தில் நின்ற திருக்கோலத்தில் விநாயகப் பெருமான். திருவீழிமிழலையிலிருந்து தந்தையுடனும், மாமனுடன் நடந்து வந்ததால், அவர் இங்கே நின்ற திருக்கோலத்திலேயே இருக்கிறாராம்.

மேற்குப் பிராகாரத்தில் கிழக்கு நோக்கிப்பிள்ளையார் இருக்கிறார். பலிபீடமும் நந்திமண்டபமும் இருக்கின்றன. அழகான சுப்ரமண்யர். அச்சந்நிதியை ஒட்டினாற்போல் அம்பாள்கோயில். மாணிக்க சிவகாமி தென்புறம் நோக்கி எழுந்தருளியிருக்கிறாள். கிழக்குப் பிராகாரத்தில், மேற்கு நோக்கி சூரியன், பைரவர், சனீச்வரர் இருக்கின்றனர். சண்டிகேச்வரரும் தட்சிணாமூர்த்தியும் அந்தந்த ஸ்தானத்தில் வீற்றிருக்கின்றனர்.

கிராமக் கோயிலாயிருப்பினும், இத்தனை சீராகப் பராமரிக்கப்பட்டு வருகிறதே என்று ஆச்சரியப்பட்டபடியே, பெருமாள் கோயிலைக் காணச் சென்றபோது, எங்களுக்குப் பேரிடியொன்று காத்திருந்தது.

'இதுதான் வரதராஜப் பெருமாள்' என்று உடன்வந்த அன்பர் கூறியபோது நம்பவேமுடியவில்லை. காட்டினுள் விலங்குகள் நடமாடும் பாழடைந்த மண்டபம் இருந்தால் எப்படியிருக்குமோ, அப்படியொரு காட்சியைக் கண்டோம். உள்ளே நுழைவதற்கான தைரியம் வரவேயில்லை. எங்கள் தயக்கத்தைப் பார்த்த ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தி பட்டாச்சாரியார், "ஒரு பயமுமில்லை, தைரியமாக வாருங்கள். நான் தினமும் சென்று பூஜை செய்து கொண்டுதான் இருக்கிறேன்" என்று அபயம் தந்து எங்களை அழைத்துச் சென்றார். சந்தேகத்துடன் பயந்து கொண்டேதான் சென்றோம். முன் மண்டபம் முழுமையாகக் கரைந்து விட்டிருக்கிறது. உள்மண்டபத்தின் மேற்கூரையின் பெரும்பகுதி இடிந்துபோய், சூரிய, சந்திரர்கள் எட்டிப் பார்க்க சௌகரியமாய் இருக்கிறது. தாவரப் போர்வையால் மூடப்பட்டு மரங்களின் வேர்களால் ஊடுருவப்பட்டிருக்கிறது.

எந்தக் கணத்தில் என்ன ஆகுமோ, எது இடிந்து நம் தலைமீது விழுமோ என்ற அச்சத்துடனேயே பெருமாளை தரிசனம் செய்யவேண்டியிருந்தது. கருவறையில் ஸ்ரீ வரதராஜர், ஸ்ரீ லட்சுமி நாராயணப் பெருமாள் — இரு மூலவர்கள் தரிசனமாகிறார்கள். நித்திய தரிசனத்துக்காக மரவேர்களும் செடி கொடிகளும் அங்கே தவம் கிடக்கின்றன! மழைக்காலத்தில் கருவறையில் ஒழுகுவதாகப் பட்டாச்சாரியார் கூறினார். அது இயற்கையன்னை செய்யும் திருமஞ்சனம்!

பட்டாச்சாரியார், மாதம் ஒரு முறை திருமஞ்சனம் செய்வதாகவும், ஆனால், நித்தியபூஜைகளைத் தவறாமல் செய்து வருவதாகவும் கூறினார். வைகாசி பௌர்ணமி மிகவும் விசேஷமாம்.

இந்தக் கோயிலில் திருப்பணிகள் செய்வதற்குப் பெருமுயற்சி செய்யப்பட வேண்டும். பணம் இருந்து

விட்டால் மட்டும் போதாது. இதை மேற்கொள்ள மனோதைரியமும் வேண்டும். 'யார் முன் வரப்போகிறார்களோ? எப்படி முடியப் போகிறதோ?" என்றுநினைத்துக் கொண்டே ஊர் திரும்பிய எனக்கு, நம்பிக்கையளிக்கும் வகையில் பங்களூரிலிருந்து ஜகதீசன் என்ற அன்பரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

மருதவஞ்சேரியில் ஐயனார் கோயில் இருக்கிறது என்று கேள்விப்பட்டேனே தவிர, ஐயம்பேட்டைக்கு நேரத்தோடு செல்ல வேண்டுமே என்ற அவசரத்தில் அவரைத் தரிசனம் செய்யாமலே வந்துவிட்டேன்.

அதை ஜகதீசன் எப்படி அறிந்தாரோ தெரியவில்லை. எனக்கு அந்த ஐயனார் கோயிலைப் பற்றி எழுதி, படங்களும் அனுப்பி வைத்து விட்டார்.

இத்தலத்தில் மருதப்பர், 'பூர்ண புஷ்கலை' சமேதராய்க் காட்சியளிக்கிறார். புராதனக் கோயிலின் வெளிப்புறச் சுவர்கள் சிதிலமடைந்துள்ளன. மூலஸ்தானம் மட்டும் நல்ல நிலையில் உள்ளது. ஆனால், உட்புறம் காற்றோட்டமோ, வெளிச்சமோ இன்றி, இருளில் மூழ்கிக் கிடக்கிறது. தினப்படி விளக்கேற்றக்கூட வசதியில்லாத நிலை. முன்புறமுள்ள வீரன் சிலையும் குதிரையும் பழுதாகியிருக்கின்றன.

இந்தக் கோயிலில் திருப்பணி நடைபெற்று, மீண்டும் பழைய பெருமைகளைப் பெற வேண்டும் என்று இக் கிராமத்தைச் சேர்ந்த ஜகதீசன் விரும்புவதில் வியப்பில்லை. உலகில் எந்தப் பகுதியில் வாழ்ந்தாலும், அந்தந்தக் கிராமத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் ஊர்க் கோயில்களைப் பற்றி அக்கறையும் ஆதரவும் காட்டத் தொடங்கியுள்ளது இறைவனின் திருவருளேயாகும்.

மருதப்பரைக் குலதெய்வமாகக் கொண்ட பல குடும்பங்கள் இன்று தமிழகத்திலும், பம்பாயிலும், பங்களூரிலும், வெளிநாடுகளிலும் வாழ்ந்து வருகின்றன என்றும்

அவர்களில் சரி பாதிப்பேர் மனது வைத்தால்கூட அந்தக் கோயிலில் விளக்கு எரிந்து வழிபாடுகள் சிறக்கும் என்று மனமுருகி எழுதியிருக்கிறார் அந்த அன்பர்.

அன்பர் ஜகதீசனின் நல்ல உள்ளத்தில் பிறந்த இந்த சீரிய எண்ணம் ஒருபோதும் வீண் போகாது. அது சுடர் விட்டு, பல உள்ளங்களில் ஒளி பரப்பி, மருதப்பர் ஆல யத்தை மட்டுமின்றி, ஸ்ரீ வரதராஜர் ஆலயத்தையும் மீண்டும் மகோன்னத நிலைக்கு உயர்த்த வேண்டும் மனுதவஞ்சேரி திருத்தலம் மீண்டும் புராணப் பெருமை களோடு திகழ வேண்டும் என்ற பிரார்த்தனையோடும், அப்படி நிச்சயம் நடக்கும் என்ற பெரும் நம்பிக்கை யோடும் அடுத்த தலத்தைத் தரிசிப்போம்.

# ஏரவாஞ்சேரி-மருத்துவக்குடி

தஞ்சை மாவட்டத்தில் மருத்துவக்குடி என்ற பெய ரில் ஒரேஒரு கிராமம்தான் இருக்கிறது என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அது ஆடுறைக்கும் திருநீலக்குடிக் கும் இடையேயுள்ள மருத்துவக்குடியாகும்.

ஆனால் நாச்சியார் கோயில் — பூந்தோட்டம் பாதை யில் கூந்தலூரையடுத்து, அரசலாற்றின் அக்கரையில் மற்றொரு மருத்துவக்குடி இருப்பதைப்பற்றி அறிந்ததும் அங்கு சென்றேன்.

இக்கிராமம் திருவீழிமிழலைக்கு மூன்று கிலோ மீட்டர் மேற்கில் இருக்கிறது. நாலாம் கட்டளையிலிருந்து ஒரு கிலோ மீட்டர் செல்லவேண்டும். நாச்சியார்கோயில்—பூந் தோட்டம் பாதையில் புதுக்குடிக்கு அருகில் இடப்புறம் அரசலாறு பாலத்தைக் கடந்து லைன்கரையோடு சென்

றால் கடலங்குடியைக் கடந்து இரண்டாவது கிலோ மீட்டரில் மருத்துவக்குடியை அடையலாம். கடலங்குடிக் கும் மருத்துவக்குடிக்கும் இடையில், வடக்கே ஒரு கிலோ மீட்டர் தொலைவில் கருவேலி ஸ்ரீசற்குணேச்வரர் ஆலயம் இருக்கிறது.

மருத்துவக்குடிக்கு 'மருத்புரம்' என்று பெயர். அகஸ் திய முனிவருக்குத் திருக்கல்யாணத் கோலத்தைக் காட்டு வதற்காக சிவபெருமான் திருவீழிமிழலைக்கு வரும்போது, மணவாளநல்லூரிலிருந்து மணக்கோலத்துடன் புறப்பட் டாராம். அப்போது சப்தரிஷிகளும் மருத்துவக்குடியில் தங்கி தங்கள் பூஜைகளை முடித்துக் கொண்டு பின்னர், திருவீழிமிழலை சென்றதாகச் செவி வழி வந்த புராணக் கதை ஒன்று உண்டு. பரமன் மணக்கோலம் பூண்ட மணவாளநல்லூர் மருத்துவக்குடிக்கு மேற்கே அரை கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது. மருத்துவக்குடிக்குக் கும்பகோணத்திலிருந்து டவுன் பஸ்கள் வருகின்றன.

மருத்துவக்குடியில் சப்தரிஷிகள் சிவப் பிரதிஷ்டை செய்து பூஜை செய்ததன் அடையாளமாக, இன்றும் ஆங்காங்கே ஏழுசிவலிங்கங்கள் காணப்படுகின்றன.

மற்றொரு கதை: சிவபெருமான் மணவாள நல்லூரிலி ருந்து திருவீமிழிழலைக்குப் புறப்பட்டு வரும்போது ஸ்ரீவிக்னேசுவரரை வழிபடத் தவறிவிட்டாராம். அதனால் அவர் சென்ற பல்லக்கின் தண்டு முறிந்து விட்டதாம். தான் செய்த தவற்றை உணர்ந்து உடனே ஒரு விக்னேச் வரரைப் பிரதிஷ்டை செய்துவிட்டுப் புறப்பட்டுச் சென்றாராம்.

மருத்துவக்குடியில் ஒரு பெரிய சிவன் கோயில் இருக் கிறது. சுவாமி அகஸ்தீச்வரர், அம்பாள் அபிராமி. ஆடு துறை மருத்துவக்குடியில் இருப்பது போலவே, இந்த மருத்துவக்குடியிலும் அபிராமி அன்னைதான் அருளாட்சி புரிகிறாள்.

ராஜகோபுரம் தற்போது இல்லை. முன்பு இருந்திருக் கலாம். சுற்றிலும் பெரிய, உயர்த்த மதிற்சுவர். மூன்றடி அகலம் இருக்கும். ஆனால், இடிந்து. உதிர்ந்து போயிருக் கிறது. செங்கற்கள் பெயர்ந்து விழுந்து, வடக்குப் புறம் பெரிய துவாரம் தெரிகிறது. சிறுவர்களெல்லாம் தெருவில் நின்று கொண்டு, பொந்து வழியாக எட்டிப் பார்த்துத் தங் களைப் படமெடுக்கும்படி ஜயபாலனைத் தமாஷ் செய் தார்கள். சிறுவர்களுக்கு வேடிக்கையாக இருக்கலாம். ஆலயத்துககு நேர்ந்து விட்ட நிலையை நினைத்தால் நமக்கு வேதனையாயிருக்கிறது.

சுவாமி சந்நிதியும், அம்பாள் சந்நிதியும் மட்டும்தான் இருக்கின்றன. அபிராமி சிறிய வடிவில், சிங்காரத் தோற் றத்துடன் திகழ்கிறாள். இதர சந்நிதிகளெல்லாம் இடிந்து விட்டிருக்கின்றன. முன்பு எப்போதோ நடைபெற்ற கலவ ரத்தின் போது அவை தகர்க்கப் பட்டிருப்பதாகக் கூறுகி றார்கள். கோஷ்ட தேவதைகளெல்லாம் மங்களூர் ஓடு வேய்ந்த முன் மண்டபத்தில் வைக்கப்பட்டுள்ளன. விநா யகர் சுப்ரமணியர், தட்சிணாமூர்த்தி, பைரவர், சூரியன், சண்டிகேச்வரர், நந்தி முதலியவர்கள் அங்கு உள்ளனர். வௌவால்கள் ஏராளமாக இருக்கின்றன. முன்பெல்லாம் இக்கோயிலில் திருவிழாக்கள் நடைபெற்றிருக்கின்றன. சுவாமி அரசலாற்றுக்கு வந்து தீர்த்தம் கொடுப்பாராம். தற்போது ஒரு வேளை பூஜை நடைபெறுவதாகக் கூறினார்கள்.

மருத்துவக்குடியில் இரண்டு பெருமாள் கோயில்கள் இருக்கின்றன. ஸ்ரீலட்சுமி நாராயணப் பெருமாள் கோயில் கிழக்குப் பார்த்த சந்நிதி. அக்கோயிலில் மகா கணபதி இருக்கிறார். விக்னேச்வரர், ஆஞ்சநேயர் சந்நிதிகளோடு எதிரில் கருடாழ்வாரும் எழுந்தருளியிருக்கிறார்.

ஸ்ரீராமர் – லட்சுமணர் உற்சவமூர்த்திகள் வரிசையில் சீதையைக் காணவில்லை. சிறிய வடிவிலும் உற்சவ மூர்த்தி விக்ரகங்கள் இருக்கின்றன. அர்ச்சகர் கிருஷ்ண

மாச்சாரிக்கு, அவ்வப்போது அவருடைய மகன் சீனிவா சன் உதவி புரிகிறார். இவர் பள்ளியாசிரியராகப் பணி புரிகிறார்.

அந்தணர் வீதிக்கு கிழக்குப்புறம் ஸ்ரீதேவி பூதேவி யுடன் ஸ்ரீ வெங்கடாசலபதி திருக்கோயில் கொண்டுள் ளார். சுமார் ஐந்தரையடி உயரம் இருக்கும் இச்சிலை, புராதனமாகத் தோன்றுகிறது. இது ஒரு தனியார் கோயில்.

சிவன் கோயிலுக்குக் கிழக்கேயுள்ள திருக்குளக் கரையில் ஐயனார் கோயில் இருக்கிறது. மதுரைவீரன் சந் நிதியும் குதிரையும் இருக்கின்றன. ஆடி மாதம் திருவிழா நடைபெறுகிறதாம். ஏழு லிங்கங்களில், ஐயனார் கோயி லுக்குப் பின்புறம் உள்ள வயலில் ஒரு லிங்கமும், முன்புற முள்ள வயலில் ஒரு லிங்கமும் இருக்கின்றன.

பக்கத்தில் பிடாரி கோயில் இருக்கிறது. பொன்னியம் மனும் இவ்வூரில் அருளாட்சி செலுத்துகிறாள்.

புராணப் பெருமைகள் தவிர, இந்த ஊர் சரித்திரத் தொடர்பான மகிமைகளும் பெற்றிருப்பதாக அறிகிறேன். சிவன் கோயிலில் நிறைய கல்வெட்டுக்கள் இருந்ததாக வும், தற்போது ஓரிரு கற்கள் மட்டுமே இருப்பதாகவும் சொன்னார்கள். இக்கோயில் பற்றிய சரித்திர ஆராய்ச்சி யாளர்கள் எரவாஞ்சேரியையடுத்துள்ள இந்த மருத்துவக் குடியையும் ஸ்ரீ அகஸ்தீச்வரர் கோயிலையும் தங்கள் பட்டியலில் சேர்த்துக் கொள்ளலாம்.

## கடலங்குடி

எரவாஞ்சேரி- மருத்துவக்குடி கிராமத்துக்கு மேற்கே இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் கடலங்குடி கிராமம்

இருக்கிறது. உழக்கில் கிழக்கு மேற்கு என்பது போல், இக் கிராமத்தை மேலக் கடலங்குடி, நடுக் கடலங்குடி, கீழ்க் கடலங்குடி என்று பிரித்துப் பேசுகிறார்கள்!

நடுக் கடலங்குடியில் ஸ்ரீ காசி விச்வநாதர் – விசாலாட்சி ஆலயம் இருக்கிறது. 1966 – ம் வருடம் கும்பாபிஷேகம் ஆகியிருக்கிறது. கட்டடத்தைப் பார்த்தால், கோயிலே புதிதாகக் கட்டப்பட்டது போல் தோன்றியது. ஆனால், அது பழைய கோயில்தான். சீலமடைந்து விட்டதால் புதுப்பித்துக் கட்டி பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்னர் குடமுழுக்கு செய்திருக்கிறார்கள்.

அந்த ஊரில் இருக்கும் தொண்ணூறு வயதான ஒரு வயோதிகரிடம் விசாரித்தோம். முத்தப்பையர் என்பவரின் நாட்டுப்பெண் மாட்டு வண்டியில் செல்லும்போது கன்றுக்குட்டி ஒன்றின் மீது ஏறி அது இறந்து விட்டதாம். அதற்குப் பிராயச்சித்தமாக அக்குடும்பத்தினர் ஊரிலிருந்த பழைய சிவன் கோயிலைப் பழுது பார்த்துத் திருப்பணி செய்ததாக நினைவு கூர்ந்தார்.

கிழக்குப் பார்த்த திருச்சந்நிதி. ஒரே ஒரு பிராகாரம் தான். தெற்குப் பார்த்த நுழைவாயில். நுழைந்தவுடன் எதிரிலேயே ஸ்ரீ விசாலாட்சி அம்மனின் திருச்சந்நிதி.

மேற்குப் பிராகாரத்தில் விநாயகரும், பாலசுப்ரமணியரும் உள்ளனர். சண்டிகேச்வரர் இருக்கிறார். ஈசானியப் பகுதியில் பைரவர், சூரியன், சனீச்வரர் இருக்கின்றனர்.

இந்தக் கிராமத்தில் மற்றொரு சிவன் கோயில் இருக்கிறது – இருந்திருக்கிறது! தற்போது கோயிலின் ஒரு பகுதி தான் இருக்கிறது – அதுவும் இடிந்து பாழடைந்து போயிருக்கிறது. பூஜைகளெல்லாம் நின்று பல ஆண்டுகள் ஆகியிருக்க வேண்டும்.

அந்தக் கோயில் கீழ்க் கடலங்குடி என்றழைக்கப் படும் பகுதியிலுள்ள எல்லையம்மன் கோயில் தெருவில் இருக்கிறது.

சுவாமி கருவறை மட்டும்தான் தற்போது காணப்படு கிறது. அடிப்பகுதி கருங்கல்லால் ஆனது. மேலே எழும்பி யுள்ள செங்கற்கட்டடம் மிக நேர்த்தியான வேலைப்பாடு. தற்போது விமானம் பழுதாகிப்போய் முட்செடிகள் மண் டிக் கிடக்கின்றன. அர்த்தமண்டபத்தின் மீது பெரிய தொரு வேப்பமரம். தழைத்துச் செழித்து, விமானத்தை விட உயரமாக வளர்ந்து விட்டிருக்கிறது. முன் மண்ட பமோ, மதிற்சுவர்களோ இல்லை. கோஷ்ட தேவதைகள் இல்லை. அம்மன் சந்நிதி இருந்ததற்கான அடையாளத் தையே காணோம்.

சற்றுத் தொலைவிலிருந்து கருவறையில் சிவலிங்கம் தரிசனமாகிறதா என்று பார்த்தோம். முதல் நாள் அபிஷே கம் ஆன மாதிரி பளிச்சென்றிருந்தது. அவரது திருநாமம் கைலாசநாதர்.

ஆனால், கைலசநாதரை நெருங்க முடியாமல், அர்த்தமண்டபத்தில் பத்தடி உயரத்திற்குப் பாம்புப் புற்று ஒன்று எழும்பியிருக்கிறது. அவற்றில் எத்தனை பாம்புகள் இருக்குமோ? நினைக்கும்போதே உடல் நடுங்கிற்று 'ஒருவரையும் என்னை நெருங்க விடாதே' என்று சிவபெருமான் தம் உடம்பை அலங்கரிக்கும் நாகங் களுக்கு உத்தரவிட்டிருப்பது போல் கற்பனை செய்யத் தூண்டியது அக்காட்சி. புற்றுக்கு நடுவே நந்திகேச்வரர் சிவபெருமானையே பார்த்துக் கொண்டு கம்பீரமாக அமர்ந்திருக்கிறார்

இத்தகைய தரிசனம் அபூர்வத்திலும் அபூர்வம். எந்தக் கோயிலிலும் காணக் கிடைக்காத மெய் சிலிர்க் கும் அனுபவம். மனித பூஜை நின்று போயிருந்தாலும் தேவ பூஜை நடைபெற்றுக் கொண்டிருப்பது போன்ற பிரமை தட்டிற்று. கண்ணுக்குத் தெரியும்படி நித்திய ஆராதனங்கள் இல்லையென்றாலும், அங்கு ஒரு சாந் நித்யத்தை உணர முடிகிறது.

நாங்கள் சந்தித்த வயோதிகர் இக்கோயிலின் புராண வரலாறு பற்றி எதுவும் தெரியாது என்று கூறிவிட்டார். அங்கு நைவேத்திய பூஜைகள் நின்றுபோன வருடமோ இதர விவரங்களோ அவருக்குத் தெளிவாகத் தெரிய, வில்லை. அவருக்கே தெரியவில்லை என்றால் வேறு யாருக்கும் தெரிய வாய்ப்பில்லை என்று கிராம மக்கள் கூறிவிட்டார்கள். அக்கிராமத்தில் இத்தனை பெரிய கோயில் கட்டியிருக்கிறார்கள் என்றால், அதன் பின்னணியில் சில சிறப்புக்கள் இருந்திருக்கத்தான் வேண்டும் என்றே நினைக்கத் தோன்றுகிறது. புராண ரீதியாக, இக்கோயில் திருவீழிமிழலைப் புராணத் தோடு தொடர்பு உடையதா என்பதும் அறியப்படவேண்டும். வடமொழியிலோ, கிரந்தத் திலோ மூல புராணத்தை வைத்திருப்பவர்கள் பண்டிதர் களிடம் கொடுத்துப் படிக்கச் சொல்லி, இதைப் பற்றிய விவரத்தைத் தெரிவித்தால் நலமாக இருக்கும்.

சிவன் கோயில் மட்டுமல்ல; கடலங்குடியிலிருக்கும் பெருமாள் கோயிலும் பாழடைந்து போயிருக்கிறது. அச் சிலைகள் யார் வீட்டிலோ இருப்பதாகக் கூறினார்கள். அந்தக்கிராமத்தில் சிவன், விஷ்ணு கோயில்கள் இரண்டும் இந்த நிலையில் இருப்பது மிகமிக வருத்தத்திற் குரியது. மகான்களின் ஆலோசனைகளை ஏற்று, தக்க பரிகாரங்கள் செய்து, இக்கோயில்களில் விளக்கேற்றி வைக்கவேண்டியது கடலங்குடியைச் சேர்ந்த வெளியூர் வாழ் செல்வந்தர்களின் தலையாய கடமையாகும். சொந்தக் கிராமங்களையும் குலதேவதைகளையும் கண்ணாகப் போற்றி, உயிராகப் போற்றிப் பாதுகாத்தால் நம் குடும்ப வம்சத்தினர் நலமோடு வாழ்வார்கள் என்று பெரியவர்கள் கூறுகிறார்கள்.

கீழ்க் கடலங்குடியில் உள்ள எல்லையம்மன் மிக சக்தியோடு திகழ்கிறாள். கழுத்தளவோடு எழுந்தருளி

யிருக்கும் ரேணுகாதேவியம்மன் சகல நோய்களையும் தீர்த்து வைக்கிறாள். இழந்த கண் பார்வையைப் பெறுவதற்காக, கண்மலர் வாங்கி வைப்பதாகப் பிரார்த்தித்துக் கொண்டு ஏழு நாட்கள் கோயிலில் தங்கினால் பலன் கிடைப்பதாகக் கூறினார்கள். குழந்தைச் செல்வம் இல்லாதவர்கள் பிரார்த்தனையின் பலனாகச் சந்தானப் பாக்கியம் ஏற்பட்டதும் அங்கு ஒரு தென்னம் பிள்ளையை வைத்து வளர்ப்பதை வழக்கமாகக் கொண்டிருக்கிறார்கள். இக்கோயிலுக்குப் பின்னால் சிறு குளம் ஒன்று இருக்கிறது. இக்கோயிலில் ஒரு விநாயகர் சிலையுள்ளது அது இடிந்துவிட்ட சிவன்கோயிலில் இருந்ததாகக் கூறினார்கள். எல்லையம்மனுக்கு ஆண்டு தோறும் தீ மிதி உற்சவம் நடைபெறுகிறது.

## கூந்தலூர்

கும்பகோணம்-பூந்தோட்டம் பஸ் பாதையில், நாச்சியார்கோயிலுக்குக் கிழக்கே பத்தாவது கிலோ மீட்டரில் உள்ளது கூந்தலூர் கிராமம். கும்பகோணத்திலிருந்து சுமார் இருபத்திரண்டு கிலோ மீட்டர். அரசலாற்றின் தென்கரையில் அமைந்துள்ள அமைதியான கிராமம்.

ஊரில் நுழைந்ததும் 'சிவன் கோயில் எங்கிருக்கிறது?' என்று கேட்டால், 'முருகன் கோயிலைத்தானே கேட்கிறீர்கள்?' என்று நம்மைத் திருப்பிக் கேட்பார்கள். புதிதாகப் போகிறவர்கள் விழிப்பார்கள், எங்களைப் போல. நாங்கள் விழித்ததைக் கண்டு காரணத்தைப் புரிந்துகொண்ட உள்ளூர் அன்பர், "நீங்கள் கேட்கும்

சிவன்கோயில் அங்கேதான் இருக்கிறது. அதைத்தான் நாங்கள் முருகன் கோயில் என்று அழைக்கிறோம்" என்று கூறி வழிகாட்டினார்.

தென்னஞ்சோலைகளுக்கு நடுவில் அமைந்திருக்கும் மொட்டைக் கோபுரத்துடன் கூடிய, கிழக்கு நோக்கிய, கச்சிதமான அழகிய கோயில் அது. குடமுழுக்கு நடை பெற்றுப் பதினான்கு வருடங்கள் ஆகியிருந்தாலும் கோயில் பார்ப்பதற்கு லட்சணமாக இருக்கிறது. விமானங் களெல்லாம் பழுதடையாமல் சீராக இருக்கின்றன. பிராகாரங்கள் சுத்தமாகக் காட்சியளிக்கின்றன. கிராமக் கோயில்களில் இடிந்த மண்டபங்களையும், உடைந்த பிம்பங்களையும், காடாக மண்டிக் கிடக்கும் செடி கொடி களையுமே பார்த்துப் பார்த்துப் பழக்கப்பட்டவர்களுக்கு இப்படியொரு கோயிலைப் பார்க்கும் போது மகிழ்ச்சி பொங்கத்தானே செய்யும்!

இந்தக் கோயிலில் உறைபவர்கள் ஸ்ரீ ஜம்புகாரண் யேச்வரர்-ஸ்ரீ ஆனந்தவல்லி அம்பாள்.

ஜம்பு என்றால் நரி. நரிகள் நிறைந்த காடு ஜம்பு காரண்யம். நரிகளால் பூஜிக்கப்பட்டவர் ஸ்ரீ ஜம்புகாரண் யேச்வரர். நரிகள் நிறைத்த காட்டில் தோன்றியதால் இந்த இறைவனுக்கு ஜம்புகாரண்யேச்வரர் என்ற பெயர் ஏற்பட்டதாகக் கூறுவதிலும் தவறில்லை.

ஆலயத்தின் தென்புறம் சீதா குளமும், வடபுறம் குமரக் குளமும் தீர்த்தங்களாக அமைந்துள்ளன. இங்குள்ள குளத்தில் சீதை நீராடிய போது ஏழு முடிகள் உதிர்ந்ததால் 'கூந்தல் உதிர்ந்த ஊர்' என்று பெயர் தோன்றி பின்னர், கூந்தலூராக மருவியதாகக் கூறினார் கள். இத்தகைய விளக்கங்கள், ஏற்கெனவே இருந்த பெயருக்கேற்றவாறு ஏதோ ஒரு கதையைக் கட்டி விடுகிறார்களோ என்று நினைக்கத் தூண்டுவதும் உண்டு!

திருநாவுக்கரசு சுவாமிகள் க்ஷேத்திரக்கோவை ஒன்பதாவது பாடலில் பல தலங்களோடு கூந்தலூரையும் குறிப்பிட்டு இங்கெல்லாம் 'கைலாய நாதனையே காண லாமே' என்று பாடியருளியிருக்கிறார். ஆலயத்தினுள் நுழைந்ததும் வலப்புறம் ஒரு முருகன் சந்நிதியிருக்கிறது. அவருக்குக் குமரகுருபரன் என்று பெயர். அவரைக் குறித்து அருணகிரியார் திருப்புகழ் பாடியிருக்கிறார். 'குருபரனெனவரு கூந்தலூருறை பெருமானே' என்று அன்புடன் விளிக்கிறார். முருகன் சந்நிதி அருணகிரி யாரின் திருப்புகழைப் பெற்றுள்ளதால், இந்தச் சிவாலயம் முருகன் தலமாகக் கொண்டாடப்படுகிறது. அதனா லேயே 'முருகன் கோவில்' என்ற பெயரையும் பெற்றுள்ளது. இக்கோயிலில் கிருத்திகை, சஷ்டி போன்ற விசேஷ நாட்களில் பக்தர்கள் பெருமளவில் கூடு கிறார்கள்.

குமரகுருபரன் வள்ளி, தெய்வயானையுடன் எழுந் தருளியுள்ளார். திருச்சந்நிதிக்கு முன் சனீச்வரரும் இடும்பனும் இருக்கிறார்கள்.

இக்கோயிலில் நந்திக்கு வலப்புறம் முருகன் எழுந் தருளியுள்ளது போல், இடப்புறம் விநாயகர் எழுந்தருளி யுள்ளார். விநாயகருக்கு 'கலங்காமல் காத்த விநாயகர்' என்று பெயர். கிழக்கு நோக்கியுள்ள இந்த விநாயகரைப் பார்த்தபடி ரோம மகரிஷியின் திருவுருவச் சிலை ஒன்று இருக்கிறது. அவரது கூப்பிய கரங்களும் நாசியும் பின்ன மாகியிருக்கின்றன. ஜடாமுடியை அழகாகத் தூக்கி முடிந்திருக்கிறார்.

பதினெட்டு சித்தர்களில் ரோம மகரிஷியும் ஒருவர். இத்தலத்தில் சிவபெருமானைக் குறித்து அரசலாற்றங் கரையில் அவர் கடும் தவம் இயற்றிச் சித்திகள் பல பெற்றார். அதன் விளைவாக அவரது ரோமங்கள் பொன்னாக மாறி, ஒவ்வொன்றாக உதிர்ந்தன. இதனால்

தன் நிலை குறித்து மிகக் கர்வப்பட்டார் அவர். அகங்காரம் நீங்காத மகரிஷிக்குப் பாடம் புகட்டும் பொருட்டு, உதிர்ந்தது போக மீதி முடிகளை முன் போலக் கேசங்களாக மாற்றிவிட்டார் பெருமான். ஈசனின் திருவிளையாடலை உணர்ந்த ரோம மகரிஷி, அவர் சந்நிதிக்கு ஓடோடி வந்தார். அவரைத் தடுத்து நிறுத்த தன் குமாரர்களை ஏவினார் பரமன். அவர்களும், சந்நிதிக்குச் செல்லும் வழியில் இருபுறமும் காவலுக்கு நின்றனர். தவற்றை உணர்ந்த மகரிஷி அகங்காரத்தை அறுத்தெறிந்ததற்கு அடையாளமாகப் பெருமானிடம் சரணடைந்து நற்கதி பெற்றார். தலபுராணம் கூறும் கதை இது.

ஸ்ரீ ஜம்புகேச்வரர் உயரமான சிவலிங்கம். பாணம் மட்டும் மூன்றடி உயரமிருக்கும். கருவறையின் நுழை வாயிலில் துவார விநாயகரும், துவார பாலசுப்ரமணியரும் இருக்கிறார்கள். முன்மண்டபத்தில் தெற்கு பார்த்து தனி அம்பாளின் பின்னமான சிலையொன்று இருக்கிறது. கிழக்கு நோக்கி நாகர், பெருமாள் வடிவங்களும், வடக்கு நோக்கி விநாயகர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் சிலைகளும் இருக்கின்றன.

சுவாமியின் கருவறை வெளிப்புறக் கோஷ்டங்களில் தட்சிணாமூர்த்தி, லிங்கோற்பவரைப் பார்த்துக் கொண்டு வலம் வரும்போது, வடபுறத்தில் பிரும்மகோஷ்டத்தின் மேல்புறம் 'விஷ்ணு' என்று எழுதப்பட்டிருக்கவே, 'இதென்னடா அதிசயம்?' என்று அருகில் சென்று பார்த்த போது, நல்லவேளையாக கோஷ்டத்தில் பிரும்மாதான் இருந்தார்! ஆனால், தவறுதலாக 'விஷ்ணு' என்று எழுதி வைத்திருந்தார்கள். அவ்வாறு எழுதியது கூட ஆச்சரியமில்லை. அத்தனை நாள் ஏன் ஒருவரும் இதைக் கவனிக்கவில்லை என்பதுதான் பெரிய ஆச்சரியம். "நீங்களுமா இதைக் கவனிக்கவில்லை?" என்று ராமசாமி குருக்களிடம் கேட்டேன். "கவனிச்சேன், சொன்னேன்"

இன்னும் மாத்தி எழுதலே போலேயிருக்கு" என்று இழுத்தார். சந்நிதிகளின் பெயர்களும் தெய்வங்களின் பெயர்களும் சரியாக எழுதப்பட்டிருக்கின்றனவா, அவை பிழையில்லாத தமிழில் எழுதப்பட்டிருக்கின்றனவா என்று கவனிக்க வேண்டியது ஆலய நிர்வாகிகளின் பணிகளில் ஒன்றாகும். தரிசனத்துக்கு வருபவர்களுக்குத் தவறான தகவல் தருவது தவிர்க்கப்பட வேண்டும்.

துர்க்கை கோஷ்டத்தில் துர்க்கை சிலை காணப்பட வில்லை. ஸ்ரீ ஆனந்தவல்லி அம்பாள் கோயில் தெற்கு நோக்கித் தனியாக இருக்கிறது. அருள்மழை பொழியும் அம்பிகையின் திருவடிவம் நான்கு அடி உயரம் இருக் கிறது. நம்மையறியாமல் அவளது திருவடிகளில் நம் மனம் லயிக்கிறது.

கூந்தலூர் அக்ரஹாரத்தில் பெருமாள் கோயில் இருக்கிறது. மூலவர் ஸ்ரீ லட்சுமி நரசிம்மர். உற்சவமூர்த்தி ருக்மணி-சத்யபாமாவுடன் உறையும் ஸ்ரீ வேணுகோபால சுவாமி. ஆலயத்தில் ஒரு விநாயகரும் இருக்கிறார். ஆல யம் சரிவரப் பராமரிக்கப்படுவதாகத் தெரியவில்லை.

கூந்தலூரில் 'முருகன் கோயில்' என்று அழைக்கப் படும் ஸ்ரீ ஜம்புகாரண்யேச்வரர் ஆலயத்தைத் தவிர மற் றொரு சிவன் கோயிலும் இருக்கிறது. ஸ்ரீ காசிவிசவநாத ரும், ஸ்ரீ விசாலாட்சியும் அங்கு உறைகிறார்கள். கிழக்கு பார்த்த சந்நிதி முன்னால் உள்ள கோபுரம் கருவறை விமானங்கள் பிராகாரம் முற்றிலும் செடி கொடிகள் மண் டிக் கிடக்கின்றன. முன்மண்டபம் இடிந்து, சிதறி, பரி தாபமாகக் காட்சியளிக்கிறது. ஆலயத்தைச் சேர்ந்த சிலைகள் அனைத்தும் அந்த மண்டபத்தில்தான் வைக் கப்பட்டிருக்கின்றன.

ஆற்றங்கரையில் சித்தி விநாயகர் கோயில் ஒன்றிருக் கிறது. ஊர்மக்கள் தங்கள் உழைப்பாலேயே கட்டிய

கோயில் அது. மதிற்சுவர்கள் இடிந்திருக்கின்றன. விரைவிலேயே பழுது பார்ப்பது நல்லது.

# தேதியூர்

அடுத்து நாங்கள் தேதியூர் சென்றோம். இந்த திருத்தலம் கும்பகோணத்துக்குக் கிழக்கிலும், சமயக்குரவர்கள் போற்றிப்பாராட்டும் ஸ்ரீவாஞ்சியத்துக்கு வடக்கேயும். திருநல்லம் என்று தேவாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள கோனேரிராஜபுரத்துக்குத் தெற்கிலும் இருக்கிறது. திருத்தலம் பற்றிய பெருமைகள் ஸ்ரீ பிருமாண்ட புராணத்தில் காணக் கிடைக்கின்றன. ரதரோதனபுரம் என்பது தேதியூரின் புராணப் பெயர். தேர் புதைந்த ஊராததால், தேர்தகையூர் என்று பெயர் ஏற்பட்டதாகவும், பின்னர் அது தேதியூர் என்று மருவியதாகவும் கூறப்படுகிறது.

இச்சிற்றூரில், மூன்று சிவன் கோயில்களும், இரண்டு பெருமாள் கோயில்களும் இருக்கின்றன. இவற்றில் பெரிய கோயில், ஸ்ரீ பிரத்யட்ச பரமேச்வரரும் ஸ்ரீ சுந்தர கனகாம்பிகையும் உறையும் ஆலயமாகும். இது ஊருக்குத் தென்கிழக்கில் உள்ளது.

மேற்குப் பார்த்த கோயில். மதிற்சுவர் இடிந்திருக்கிறது. மண்டபத்தில் கிழக்குப் பார்த்து ஒரு பெரிய கணபதி வீற்றிருக்கிறார். சுப்ரமணியரும் எழுந்தருளியுள்ளார். ஸ்ரீ பிரத்யட்ச பரமேச்வர சிவலிங்கம் சிறியதாக இருக்கிறது. ஆலயத்தில் ஸ்ரீ சண்டிகேச்வரர், பைரவர், சூரியன். சனீச்வரர் ஆகியோர் இருக்கிறார்கள். ஸ்ரீ தட்சிணாமூர்த்திக்கு எதிரில் நந்தி இருக்கிறது. 1973ல் இக்கோயிலில் திருப்பணி நடக்கிறது.

பெரிய கோயிலுக்கு மேற்கே கருமாணிக்கப் பெருமாள் கோயில் பழமையான கோயில். முன்பு இந்தப் பகுதி அக்ரஹாரமாக இருந்திருக்கிறது என்று கூறினார். முன்னாள் பள்ளி ஆசிரியர் என். மகாலிங்கம் கோயிலுக்குச் சொந்தமான நிலங்களைக் குத்தகை எடுத்திருப்பவர்கள், தவறாமல் நெல் அளக்கிறார்கள் என்ற செய்தி கேட்க காதுக்குக் குளுமையாக இருந்தது.

தேதியூர் கிராமம் ஸ்ரீ பூமி, நீளா சமேத ஸ்ரீ வரதராஜப் பொருமாள் ஆலயத்தில் 1979-ம் ஆண்டு நடைபெற்ற கும்பாபிஷேகப் பத்திரிக்கையைப் படிப்போம் :

'ஸ்ரீய : பதியாய் அவாப்த ஸமஸ்த காமனாய். அனந்தகலியாண குண வசிஷ்டனாய் உபய விபூதி நாயகனாய், ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் பிறவிக்கடலில் உழல்கின்ற சேதனாவர்க் கங்களை பரம காருண்யத்தாலே உஜ்ஜீவிக்கத் திருவுள்ளம் பற்றி லீலா விபூதியில் ஸ்ரீ ஸ்ரீநிவாச க்ஷேத்திரம் என்றும் ஸ்ரீ நாச்சியார் கோயிலில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ ஸ்ரீநிவாசப் பெருமாளின் அபிமானம் பெற்ற ரதரோதன புரம் என்னும் தேதியூரில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ வரத ராஜப் பெருமாள் கோயில்...

ஆலயத்தின் நுழைவாயிலில் கிழக்குப் பார்த்து ஒரு பிள்ளையார் இருக்கிறார். கருவறை நுழைவாயிலின் இருபுறமும் துவாரபாலகர்கள் நிற்கிறார்கள். பிராகாரத்தின் வடகிழக்கு மூலையில் மேற்குப் பார்த்து ஸ்ரீ ஆஞ்சநேய மூர்த்தி எழுந்தருளியிருக்கிறார்.

இந்தப் பெருமாள் கோயிலுக்கு வடக்கே ஸ்ரீ லோக சுந்தரி உடனுறை ஸ்ரீ சுதர்சனேச்வரர் ஆலயம் இருக்கிறது. கிழக்குப் பார்த்த திருசந்நிதி. நுழைவாயில் தென்புறமுள்ளது. பிரகாரத்தில், கிழக்கு நோக்கி விநாயகரும், தெற்கு நோக்கி ஸ்ரீ வள்ளி, தேவசேனா சமேத சிவசுப்ரமணியர் திருச்சந்நிதி கொண்டிருக்கின்றனர். சிறிய

பாணத்தோடு கூடிய சிவலிங்கம். ஸ்ரீ சுதர்சனேச்வரர் சுவாமி கோயிலுக்கும் 1973-ம் ஆண்டில் குடமுழுக்கு நடந்திருக்கிறது.

ஸ்ரீ வரதராஜப் பெருமாள் கோயிலுக்குக் கிழக்கில் ஸ்ரீ மீனாட்சி உடனுறை ஸ்ரீ சுந்தரேச்வரர் கோயில் இருக்கிறது. கிழக்கு பார்த்த கோயில்.

இந்தக் கோயிலுக்கு 1979 ம் ஆண்டு குடமுழுக்கு நடந்திருக்கிறது. அப்பொழுது வெளியிடபபட்ட பத்திரிகையில் இந்தத் தலம், சற்குணேச்வரபுரத்துக்குக் கிழக்கிலும் (கரிவேலி) திருவீழிமிழலைக்கு மேற்கிலும் அரிசிலாற்றுக்குத் தென்பாலும் திருவாஞ்சியத்துக்கு வடபாலும் விளங்குவதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இக்கோயிலின் மேற்குப் பிராகாரத்தில் விநாயகருக்கும் சண்முகருக்கும் சந்நிதிகள் இருக்கின்றன. கிழக்குப் பிராகாரத்தில் காலபைரவர், சூரியன், சனீச்வரர் மூவரும் இருக்கின்றனர். காலபைரவரை, சிறப்பாக ஆத்ரேய கோத்திரக்காரர் வழிபடுவதாகக் கூறினார்கள்.

தேதியூரில் மூன்று சிவன் கோயில்களும் இரண்டு பெருமாள் கோயில்களும் இருந்தாலும், கிராமத்தார் அவற்றையெல்லாம் கருத்துடனும் கவனத்துடனும் பக்தியுடனும் பராமரித்து வருவதை இங்கு குறிப்பிட்டுத்தான் ஆக வேண்டும்.

ஐந்து வருடங்களில் நான்கு கோயில்களுக்குத் திருப்பணிகள் செய்து குடமுழுக்கு செய்திருப்பது தேதியூர் வாசிகளின் பெரிய சாதனையாகும்.

தேதியூரில் ஸ்ரீசுப்ரமணிய சாஸ்திரிகள் வசித்த இல்லத்தில் தற்போது ஸ்ரீ சங்கரா நடுநிலைப்பள்ளி இயங்கி வருகிறது. சுமார் 650 குழந்தைகள் படிக்கும் இப்பள்ளி, நல்ல முறையில் நடந்து வருவதாகக் கேள்விப்பட்டோம். அப்பள்ளியில் தேதியூர் சுப்ரமணிய சாஸ்திரிகளின் திரு

வுருவப்படம் இருக்கிறது. தினம் காலையில் பள்ளி தொடங்குவதற்கு முன் மாணவ, மாணவிகள் அங்குள்ள ஸ்ரீ ஆதிசங்கரரின் படத்துக்கு முன் நின்று வழிபடுவதாக ஆசிரியர் ஒருவர் பெருமிதத்துடன் கூறினார்.

பக்திக்கும் ஒழுக்கத்துக்கும் முக்கியம் கொடுத்து நடத்தப்பட்டு வரும் ஸ்ரீ சங்கரா பள்ளியையும் ஒரு கோயிலாகத் தரிசித்து விட்டுத் தேதியூரிலிருந்து புறப் பட்டோம். ஸ்ரீ சங்கரா நடுநிலைப் பள்ளிக்குக் கிழக்கே வெகு அருகில் ஒரு சிறு கணபதி கோயில் இருக்கிறது. விநாயகர் மேற்கே பார்த்து அமர்ந்திருக்கிறார். மங்களூர் ஓடுகள் வேய்ந்த மண்டபம். காசி விமானம். 1973-ல் இப்புதிய கட்டடம் எழும்பியுள்ளது. முன்பு இவர் கிழக்கு நோக்கி இருந்தாராம்.

உள்ளே மற்றொரு விநாயகர் சிலையும் உள்ளது. அது சேங்காலிபுரத்திலிருந்து கொண்டு வரப்பட்டதாக வாத்தியார் கணபதி கூறினார். தமது குடும்பம் முன்பு இக்கோயிலைக் கவனித்து வந்ததாகவும், தற்போது தமிழாசிரியர் ராமகிருஷ்ணன் பூஜை செய்து வருவதாக வும் அறிந்தேன். முறையாக வேத அத்யயனம் செய் துள்ள தமிழாசிரியர் அவர்.

## மணவாளநல்லூர்

தேதியூருக்கு அருகிலுள்ள மணவாளநல்லூர் கிராமம், அரிசொல் ஆற்றின் தென்கரையில் உள்ளது. சுமார் முந்நூறு ஆண்டுகளுக்கு முன் கர்க்க கோத்திரத் தில் பிறந்த வைத்தியநாதன் என்ற அந்தணர் அங்கு வசித்து வந்தார். நூறு ஏக்கருக்கும் மேற்பட்ட நிலப்

பரப்புள்ள அந்தக் கிராமத்தில் வைத்தியநாதன் மிகப் பெரிய நிலச்சுவான்தாரராக மிகச்செல்வாக்கு பெற்றிருந்தார்.

வைத்தியநாதனின் தர்மபத்தினியின் பெயர் அகிலாண்டேச்வரி. இவர்களது இல்வாழ்க்கை இன்பமாகத் தான் நடந்து கொண்டிருந்தது.

ஒரு நாள் தமது தோட்டத்துக்குச் சென்றிருந்த வைத்தியநாதன், வீட்டுக்குத் திரும்பும் போது தமக்குப் பிடித்த காய்கறிகளோடு வந்தார். மனைவியிடம் அதைக் கொடுத்துச் சமையல் செய்யச் சொன்னார். அன்று துவாதசியாகையால் சமையல் ஏற்கெனவே முடிந்து விட்டிருந்தது. அகிலாண்டேச்வரி சொன்னாள்: "சமையல் ஆகி விட்டது. இதை இரவு சமையலுக்கு வைத்துக் கொள்கிறேன். நீங்கள் ஸ்நானம் செய்துவிட்டுச் சாப்பிட வாருங்கள், நாழியாகிறது."

அவ்வளவுதான். கோபம் வந்து விட்டது வைத்தியநாதனுக்கு. "இரவு சமைக்கிறாயா? அப்படியானால் நீயே சமைத்து நீயே தின்னு" என்று இரைச்சல் போட்டுவிட்டு வீட்டை விட்டு வெளியேறி விட்டார். அச்சமயம் அகிலாண்டேச்வரி நிறை கர்ப்பிணி.

இரவு வெகுநேரம் ஆகியும் வைத்தியநாதன் வீடு திரும்பவில்லை. அகிலாண்டேச்வரிக்குக் கவலை அதிகரித்தது. அக்கம் பக்கத்திலுள்ளவர்களிடம் செய்தியைக் கூறினாள். அவர்கள் இரவெல்லாம் காத்திருந்து விட்டு மறுநாள் வைத்தியநாதனைத் தேடத் தொடங்கினார்கள். அவர் திருவிடைமருதூரில் இருப்பது தெரியவே, அங்கு சென்று அவரைச் சந்தித்து, வீட்டுக்குத் திரும்பும்படி மன்றாடினார்கள். ஆனால், அவர் கண்டிப்பாக வர மறுத்து விட்டார். "நான் எல்லாவற்றையும் வெறுத்து, துறந்து வந்து விட்டேன். என்னை வீணாகத் தொந்

தரவு செய்யாதீர்கள். நீங்கள் தயவுசெய்து போய் வாருங்கள்'' என்று மரியாதையாகக் கூறி, அவர்களை திருப்பி அனுப்பி விட்டார்.

பின்னர், வைத்தியநாதன் காசிக்குச் சென்று பத்து வருட காலம் சந்நியாசிகளுடன் வாசம் செய்தார். அவரும், சந்நியாசாச்ரமம் மேற்கொள்ள வேண்டும், என்று விரும்பினார். இதை அங்கிருந்த, தஞ்சையைச் சேர்ந்த யதீச்வரர் ஒருவரிடம் தெரிவித்தார். அவர், தஞ்சைக்கு அருகிலுள்ள கோவிலடி என்ற இடத்தில் ஒரு யதீச்வரர் இருக்கிறார் என்றும், அவரிடம் பல சீடர்கள் வேதாந்த விசாரம் செய்து வருவதாகவும் அவரை அணுகிச் சந்நியாசம் பெறலாம் என்றும் கூறவே, கோவிலடிக்குப் புறப்பட்டு வந்தார் வைத்திய நாதன். ஆனால், அந்த யதீச்வரரோ, ''உனக்கு வய தாகவில்லை. இன்னும் சில காலம் கிரகஸ்தாச்ரமத்தில் இருந்துவிட்டுப் பிறகு என்னிடம் வா" என்று கூறி விட்டார். ஆனால், வைத்தியநாதன் கோவிலடியை விட்டு நகருவதாக இல்லை. ''தங்களிடம் ஆச்ரமமும் உபதேசமும் பெற்றுத்தான் செல்வேன்'' என்று பிடிவாத மாக அங்கேயே தங்கி விட்டார்.

ஒருநாள் குருசுவாமியின் கனவில் பகவான் தோன்றி 'உன்னிடம் தஞ்சம் புகுந்திருக்கும் சீடனுக்குச் சந்நியா சாச்ரமம் தந்து விடு. அவன் ஒரு மகான்' என்று கூறி மறைந்தார். குருவும் தெய்வக் கட்டளையை மீற முடி யாமல், வைத்திய நாதனுக்கு ஆச்ரமம் அளித்து 'வாசு தேவயதீந்திரர்' என்ற 'திருநாமத்தையும் சூட்டினார். குருவிடம் வேதாந்த பாடங்கள் கேட்டுக் கொண்டு சில வருடங்கள் கோவிலடியில் தங்கியிருந்தார் வாசுதேவ யதீந்திரர்.

ஒருநாள் குருநாதர் உடல் நலம் குன்றிப் போய் இர வில் சரியாக நித்திரை இல்லாமல் சிரமப்பட்டு, அதிகாலை

வேளையில் சற்றுக் கண்ணயர்ந்தார். அச்சமயத்தில் வாசுதேவ யதீந்திரர் குருவிடம் கற்ற வேத பாடத்தைச் சற்று உரத்த குரலில் மனப்பாடம் செய்து கொண்டிருந் தார். அதனால் குருவின் தூக்கம் கலைந்து விட்டது. குருவுக்குக் கோபம் வரவே, "இப்படிச் சப்தம் போட்டு என் நித்திரையைக் கெடுத்து விட்டாயே வாசுதேவா. உன் வாய் அடைத்துப் போகாதா ?" என்று இரைந்து விட்டார். இதைக் கோபத்தில் மொழிந்த வார்த்தை களாக எடுத்துக்கொள்ளாமல், குருவின் உபதேசமாகவே கருதி அந்தக் கணமே மௌனவிரதம் ஏற்றுக்கொண்டு விட்டார் வாசுதேவ யதீந்திரர். அது மட்டுமல்ல. தண்டம் கமண்டலம், வஸ்திரம் எல்லாவற்றையும் காவேரியில் எறிந்துவிட்டு அவதூதரானார். 'வாசுதேவ பிரும்மம்' என்றும் அழைக்கப்பட்டார்.

திகம்பரர் ஆனதும் ஆச்ரமத்திலிருந்து புறப்பட்டுச் சஞ்சரிக்கத்தொடங்கினார். ஆனால், குருநாதர் விரும்பிய படி ஒவ்வொரு மாதமும் கடைசி தினத்தன்று அவரை வந்து பார்த்துக் கொண்டிருந்தார். பின்னர், அந்தப் பழக்கம் நின்று போய்விடவே குருநாதர், பிரும்மம் இருக்குமிடத்தைத் தேடிக் கொண்டு வந்து, ஒரு குறிப் பிட்ட பகுதிக்குள்ளேயே சஞ்சரிக்குமாறு வேண்டிக் கொண்டார். அதன்படி, கோவிலடிக்குக் கிழக்கும், கீழ சமுத்திரத்துக்கு மேற்கும் கொள்ளிடக் கரைக்குத் தெற் கும், மன்னார்குடிக்கு வடக்குமான பிரதேசத்துக் குள்ளேயே பிரும்மம் சஞ்சரித்து வந்தார்.

அப்போது தஞ்சாவூர்ப் !பகுதியில் பெரிய வறட்சி ஏற்பட்டது. வருண ஜபம் செய்தும் மழை பொழியாத தால், அரசனுக்கு அந்தணர்கள்மீது கோபம் வந்து, அவர் களுடைய மான்யங்களை ரத்து செய்துவிடுவதாக அச் சுறுத்தினார். அவர்கள் 'அரசே ! நமது ராஜ்யத்தில் ஒரு மகான் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார். அவரைத் துஷ்

டர்கள் தொந்திரவு செய்கிறார்கள். அதனால், அவர் மனம் குளிரும்படி தாங்கள் அவருக்கு மரியாதைகள் செய்தால் மழை பொழியலாம்' என்று அறிவுரை வழங்கினார்கள். அரசனும், பிரும்மத்தை அழைத்து வரச் சொன்னான். ஆனால், அவர் இருக்குமிடத்தை ஒருவரா கண்டுபிடிக்க முடியவில்லை. அதனால் அரசனே, பிரும்மத்தை மனதில் தியானித்துக் கொண்டு தேடலானான். இறுதியாக பிரும்மத்தைத் திருவிடைமருதூரில் கண்டு, அவர் காலில் விழுந்து, சில துஷ்டர்களால் அவருக்கு நேர்ந்த கஷ்டத்தை மன்னித்தருளும்படி வேண்டினான். மழையின்றி மக்கள் படும் அவதிகளை விவரித்தான். மகானின் உள்ளத்தில் கருணை சுரந்தது. வானம் இருண்டது. மேகங்கள் சூழ்ந்தன. மழை கொட்டித் தீர்த்தது. பஞ்சமெல்லாம் தீர்ந்தது.

இவ்வாறு வாசுதேவப் பிரும்மம் அக்காலத்தில் பல அற்புதங்கள் நடக்கக் காரணமாயிருந்திருக்கிறார்.

அகிலாண்டேச்வரியும் பின்னர் பிறந்த மகன் வெங்கடேசனும் அவ்வப்போது வாசுதேவ பிரும்மம் இருக்குமிடம் தேடிச் சென்று தரிசனம் செய்து திருப்தியடைந்து வந்தார்கள்.

ஒரு நாள் குருநாதர் பிரும்மத்தைக் காணச் சென்றிருந்தபோது அவர், தமது சரீரம் மறையப் போகும் வேளையையும் இடத்தையும் தரையில் எழுதிக் காட்டி, தமக்குச் சமாதி எதுவும் எழுப்ப வேண்டாம் என்றும் கேட்டுக் கொண்டார்.

ஆடி மாதம் கிருஷ்ணபட்சம் திருதியை அன்று பகல் வேளையில் மாயூர க்ஷேத்திரத்தில் காவேரி ஆற்றின் ரிஷப தீர்த்தக் கட்டத்துக்கு எதிரில் உலக வாழ்க்கையைத் துறக்கப் போவதாக எழுதிக் காட்டியதால், குருநாதர், அவரை மாயூரத்துக்கு அருகிலுள்ள தமது மடத்துக்கு அழைத்துச் சென்று தம்முடன் தங்கியிருக்கச் செய்தார்.

பிருமம் குறிப்பிட்ட தினத்தன்று சீடர்கள் அவருக்கு ஸ்நானம் செய்வித்து விட்டு, குருநாதருடன் பிட்சைக்குச் சென்று விட்டார்கள்.

இந்தச் சமயம் பார்த்து அகிலாண்டேச்வரியும் வெங்கடேசனும் அங்கு வந்து சேருகிறார்கள். முதல் நாள் வெங்கடேசனுக்கு ஏதோ மனக்கிலேசம் ஏற்பட, தாயார் மாயூரத்துக்குச் சென்று பிரும்மத்தைத் தரிசித்து விட்டு வரலாம் என்று கூற, இருவரையும் விதி அன்று அங்கு அழைத்து வந்திருக்கிறது. அப்போது பிரும்மம் தியானத்தில் ஆழ்ந்திருந்தார். "சுவாமி, தங்களுடைய பூர்வாச்ரம புத்திரன் வந்திருக்கிறேன். துயரத்தில் ஆழ்ந் திருக்கிறேன். தாங்கள் ஆசி வழங்க வேண்டும்" என்று கோருகிறார் வெங்கடேசன்.

பிரும்மம் கண்ணைத் திறந்து பார்க்கிறார். கருணை யோடு பார்க்கிறார். குருநாதருக்கு மண்ணில் எழுதிக் காட்டியதையே பூர்வாச்ரம மகனுக்கும் மனைவிக்கும் எழுதிக் காட்டுகிறார். அடுத்த கணம் நிஷ்டையில் ஆழ்ந்து விடுகிறார். இருவரும் பார்த்துக் கொண்டே யிருந்தனர்.

சில வினாடிகளுக்கெல்லாம் பிரும்மத்தின் தலை 'பட்' டென்று வெடித்து, ஒரு ஜோதி புறப்பட்டு விண்வெளி யில் கலந்து விட்டது. அந்தத் தரிசனம் மகனுக்கு மட்டும் கிடைத்தது. குருவும் சீடர்களும் திரும்பி வந்து விஷயம் அறிந்ததும் ஆத்ம ஜோதி தரிசனம் செய்யக் கொடுத்து வைக்கவில்லையே என்று வருந்தினார்கள்.

இன்றும் மாயூரத்தில் காவேரி நதியின் ரிஷப தீர்த்தக் கட்டத்தில் வாசுதேவ பிரும்மம், சரீரம் அற்ற ஆன்ம பிரகாச சக்தியாய் இருந்து, பக்த கோடிகளுக்கு அருளாசி வழங்கிக் கொண்டிருக்கிறார்.

வாசுதேவ பிரும்மம் கோவிலடியில் தங்கியிருந்த போது 'வாசுதேவ மனனம்' என்கிற அத்வைத கிரந்தம் ஒன்றை இயற்றியுள்ளார். அத்வைத சித்தாந்தத்தின் சிகரமான நூல்களில் ஒன்றாக இது கருதப்படுகிறது.

இந்த விவரங்களை நான் அறிந்தது தேதியூர் சென்றிருந்தபோது. கூறியவர் இந்தி பண்டிட் எம். எஸ். நடராஜன். அவர் வாசுதேவ பிரும்மத்தின் மகன் வழி வம்சத்தில் ஏழாவது தலைமுறையைச் சேர்ந்தவர். அவரது சகோதரர் எம். எஸ். ராமச்சந்திர ஐயர்.

நடராஜன் தங்கள் வீட்டிலிருந்த பிரும்மத்தின் படம் ஒன்றைக் காட்டினார். எதிர் புறத்தில் அவர்களது பூர்வீக வீட்டையும் நாங்கள் பார்த்தோம். அதையே ஓர் ஆலய மாகக் கருதி உள்ளே சென்று தரிசித்து விட்டுத் திரும்பி னோம்.

## விஷ்ணுபுரம்

தேதியூரிலிருந்து ஒரு கிலோ மீட்டர் தொலைவி லுள்ளது விஷ்ணுபுரம் என்ற அழகிய கிராமம். ஸ்ரீ மகா விஷ்ணு வைகுண்டத்திலிருந்து வந்து அங்கு தங்கியதால் அந்தப் பெயர் வந்தது.

தேஜினிவனம் என்ற திருவீழிமிழலைப் பெருமானி டம் சக்ராயுதத்தைப் பெற்றார் திருமால். பின்னர், தேஜினி நாதர், உமையின் அவதாரமாகிய காத்யாயனியைத் திரு மணம் புரிந்துகொண்டார். அவர்களைப் பூஜை செய்யும் பொருட்டுத் திருமால் அரிசொல் நதியை வரவழைத்தார் அதன் தென்கரையில் அமைந்துள்ள திருத்தலமான விஷ்ணுபுரத்தில் எழுந்தருளினார். அங்கு தேஜினீச்வர

ரின் கட்டளையின்படி கௌதம மகரிஷி, ஸ்ரீ அமிர்தேச்வரி அம்பாள் சமேத ஸ்ரீ கைலாசநாத சுவாமியைப் பிரதிஷ்டை செய்தார்.

மொட்டைக் கோபுரத்துடன் கூடிய கிழக்குப் பார்த்த கோயில். பெரிய பாணத்துடன் கூடிய சிவலிங்கம். அம்பாள் விக்ரகம் சுமார் ஐந்தடி உயரமிருக்கும். மண்டபத்தில் மேற்குப் பார்த்த ஒரு பெரிய காலபைரவரின் கற்சிலை இருக்கிறது. ஸ்ரீ தட்சிணாமூர்த்தி சந்திக்குப் பக்கத்தில் கிழக்கு நோக்கிய விநாயகர் சந்நிதியிருக்கிறது. ஸ்ரீ கண்டிகேச்வரருக்குப் பக்கத்தில், ஸ்ரீ சுப்ரமணியர் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். வடகிழக்கு மூலையில் தனியாக சனீச்வரர் சந்நிதி ஒன்று உள்ளது.

விஷ்ணுபுரத்தில் உள்ள மற்றொரு சிவன் கோயிலில் ஸ்ரீ தர்மபுரீச்வரர், ஸ்ரீ தர்மசம்வர்த்தினி எழுந்தருளியுள்ளனர். முதலில் அது தர்மவிநாயகர் கோயிலாக இருந்தது என்றும், நூற்றைம்பது வருடங்களுக்கு முன் சம்பந்தர்பாடி என்ற இடத்திலிருந்து ஒரு சிவலிங்கம் கொண்டு வரப்பட்டு இங்கு பிரதிஷ்டை செய்யப்பட்டதாகவும் கூறப்படுகிறது. சிவலிங்கம் சிறியது. அம்பாளும் சிறிய வடிவில்தான் எழுந்தருளியிருக்கிறாள். அச்சந்நிதிக்கு எதிரில் அமிர்த தீர்த்தம் உள்ளது. தென் பிராகாரத்தில் ஸ்ரீ தட்சிணாமூர்த்திக்கு முன், அமிர்த விநாயகர் தனிச் சந்நிதி கொண்டுள்ளார். இங்கு உற்சவத்தின் போது சுவாமி தூக்குவது, தீவட்டி பிடிப்பது எல்லாமே கிராம மக்கள்தான்.

இங்குள்ள ஸ்ரீ வரதராஜப் பெருமாள் கோயிலில் வீழிநாத ஐயன்சேத்தி விநாயகர் இருக்கிறார். இதுவும் முதலில் விநாயகர் கோயிலாக இருந்தது என்றும், பின்னர்தான் பெருமாள் பிரதிஷ்டை செய்யப்பட்டுப் பெருமாள் கோயிலாக மாறியது என்றும் கேள்விப்பட்டோம். வட இந்தியக் கோயில்களில் காணப்படுவது போல் விநாயகர்

சந்நிதி சலவைக் கல்லால் ஆனது. இங்கு ஸ்ரீ ராமர் சந்நிதியும் இருக்கிறது. விஷ்ணுபுரத்தில் உறியடி உற்சவம் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

சீதளாம்பிகை மாரியம்மன் கோயிலில் காமாட்சி அம்மனும் இருக்கிறாள். ஆனால். அவளுக்குக் கோரைப்பல் இருக்கிறது. அது என்ன மூர்த்தமோ தெரியவில்லை. பக்கத்தில் தனியே காளியம்மன் கோயிலும் இருக்கிறது.

பழங்காலப் பொலிவுடன் விளங்கிய விஷ்ணுபுர அக்ரஹாரம், பார்க்க எளிமையாகவும் தூய்மையாகவும் இருந்தது. மொத்தம் சுமார் தொண்ணூறு வீடுகள் இருக்கும்.

நாங்கள் சென்றிருந்த அன்று அந்த அக்ரஹாரத்தில் ஸ்ரீ ராதா கல்யாண மகோற்சவம் அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. மருதாநல்லூர் மடத்திலிருந்து வந்திருந்த சுவாமிகள் விசேஷ பூஜைகள் செய்து முடித்திருந்த நேரம் அது. கிராமமே அந்த வீட்டில் கூடியிருந்தது. சமாராதனையில் அத்தனை பேரும் கலந்து கொண்டு தங்களாலான தொண்டு புரிந்து ஒத்துழைத்ததைக் காண மகிழ்ச்சியாயிருந்தது.

அந்த ஊரில் இளைஞர் சங்கம் ஒன்று நற்பணியாற்றிக் கொண்டிருக்கிறது. துடிப்புடன் செயலாற்றிக் கொண்டிருக்கும் அத்தனை பேரும் கிராமத்தை நல்ல முறையில் வைத்துக் கொள்ள வேண்டும் என்ற ஒருமித்த கருத்துடையவர்கள். கோயில்களை நல்ல முறையில் பராமரிப்பதிலும் ஆர்வமுடன் இருக்கிறார்கள்.

அவர்களில் ஓர் இளைஞர், அந்தக் கிராமத்தில் வாழ்ந்து மரித்து விட்ட ஒரு குரங்கைப் பற்றி உணர்ச்சியுடன் கூறினார்.

அந்தக் குரங்கு மிகவும் சாதுவாம். எல்லா வீடுகளிலும் நாயைப் போலப் பழகி வந்ததாம். ஒருவருக்கும்

ஒரு தொந்தரவும் கொடுத்ததில்லையாம். எல்லோரும் அதற்கு ஆகாரம் கொடுத்து ஆதரித்து வந்தார்களாம். அது ஒரு நாள் இறந்து போனபோது, அத்தனை பேரும் கண்ணீர் வடித்தார்கள். ஸ்ரீ வரதராஜப் பெருமாள் கோயிலுக்குப் பக்கத்தில் அதைப் புதைத்துள்ளதாகவும், அதன் மீது ஓர் ஆஞ்சநேயர் கோயில் கட்டலாமா என்று ஆலோசித்து வருவதாகவும் அந்த இளைஞர் கூறினார்.

# திருப்பாம்புரம்

காவிரியின் தென்கரையில், தேவாரப் பாடல்பெற்ற தலங்களில் ஐம்பத்தொன்பதாவது திருத்தலம் திருப்பாம்புரம். அறுபதாம் திருத்தலம் திருச்சிறுகுடி. இவ்விரண்டும் தஞ்சை மாவட்டம் நன்னிலம் வட்டத்திலுள்ளன.

திருப்பாம்புரம், மயிலாடுதுறை - திருவாரூர் பாதையில் பேரளம் புகைவண்டி நிலையத்துக்கு மேற்கே ஆறுகிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. காரைக்கால் – கும்பகோணம் பேருந்து தடத்தில் வந்தாலும், கும்பகோணம் – பூந்தோட்டம் வழியில் வந்தாலும் இத்தலத்தை அடையலாம். கும்பகோணம் - காரைக்கால் சாலையில் ஐயனார்குடிக்குத் தெற்கே இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் திருச்சிறுகுடி இருக்கிறது. அதற்கு இரண்டு கிலோ மீட்டர் மேற்கில் திருப்பாம்புரம் இருக்கிறது.

ஆனை பூசித்த தலம் 'ஆனைக்கா' எனவும், எறும்பு பூசித்த தலம் 'எறும்பூர்' எனவும் வழங்கப்படுவது போல், பாம்பு பூசித்த இத்தலம் 'பாம்புபுரம்' எனப் பெயர் பெற்றது. 'பாம்புபுரம்' பாம்புரம் என மருவியது. உரகபுரம் சேஷபுரி என்றும் இது குறிப்பிடப்படுகிறது. திருஞானசம்பந்தர் இத்தலத்தை,'பாம்புர நன்னகர்'என்றுவிளிக்கிறார்.

இத்தலம் நாகராஜனாகிய ஆதிசேடன் வழிபட்ட தல மாகும். நாகதோஷங்கள் நீங்கவும், மக்கட்பேறு அடைய வும், ராகுவினால் ஏற்படும் தோஷங்கள் அகலவும் இத் தலத்தில் உறையும் பெருமானைப் பிரார்த்தித்து மக்கள் பெரிதும் பயனடைகின்றனர்.

ஆதிசேடன் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தனது ஆயி ரம் தலைகளால் பூமியைச் சுமந்து வருவதால் ஏற்பட்ட உடற்சோர்வைப் போக்கிக் கொள்ளவும் மேலும் வலிமை பெறவும் கைலாய மனலக்குச் சென்று சிவபெருமான் அருளை வேண்டினான். பெருமானும், நாகராஜனுக்குப் பேராற்றலை அருளியதோடு, காவிரிக் கரையிலுள்ள பல சிவத்தலங்களுக்குச் சென்று வழிபடும்படியும் கட்டளை யிட்டார். அதன்படி, ஆதிசேடன் மகாசிவராத்திரி முதற் காலம் குடந்தை நாகேச்வர சுவாமியையும், இரண்டாம் காலம் திருநாகேச்வரத்திலுள்ள நாகநாத சுவாமியையும், மூன்றாம் காலம் திருப்பாம்புரம் பாம்புரேச்வரரையும், நான்காம் காலம் நாகூர் நாகேச்வரரையும் வழிபட்டு, குறையா உடல் வலிமையைப் பெற்றான்.

அஷ்டமகா நாகங்களான அனந்தன், வாசுகி, தட்ச கன், கார்கோடகன், சங்கபாலன், குளிகன், பத்மன், மகாபத்மன் ஆகியோரும் பாம்புரேச்வரரை வழிபட்டுப் பயனடைந்துள்ளனர்.

திருப்பாம்புரம், மூர்த்தி - தலம் - தீர்த்தம் மூன்றாலும் சிறப்புப் பெற்றது. நாகராஜன் பூஜித்த தலமாதலால் இங்கு நாகராஜரின் மூலவர், உற்சவர் திருவுருவங்கள் உள்ளன. கோயிலுக்கு எதிரே ஆதிசேஷ தீர்த்தம் உள் ளது, இதில் நீராடுவோர் சகல தோஷங்களும் நீங்கப் பெற்று எல்லா நலன்களும் பெறுகின்றனர்.

பாம்பு வழிபட்டதற்கு அடையாளமாக, இக்கோயி லின் கருவறையில் பாம்பு வாழ்கிறது. இந்நாள் வரை பாம்பு தீண்டி இறந்தவர்கள் யாருமில்லை என்ற பெரு மையும் மகிமையும் இத்தலத்துக்கு உண்டு.

திருப்பாம்புரம் திருக்கோயில், இரண்டு பிராகாரங்களுடன் கூடியது. நுழைவாயிலையடுத்துக் கொடிமர விநாயகர், நந்தி, பலிபீடங்கள் இருக்கின்றன. ராஜகோபுரம் மூன்று நிலைகளோடு கம்பீரமாக விளங்குகிறது.

ராஜகோபுரத்தைக் கடந்து சென்றால் தென் பிராகாரத்தில் திருமலையீச்வரர் எழுந்தருளியுள்ள மாடக் கோயிலும், மேற்கே கன்னி மூலையில் தல விநாயகராகிய ராஜராஜப் பிள்ளையாரும், அடுத்து வள்ளி தெய்வானையோடு முருகனும், தல விருட்சமாகிய வன்னி மரத்தடியில் வன்னீசுரர் என்று வழங்கும் ஆதிபாம்புரேச்வரரும் உறையும் தனித் தனி சந்நிதிகள் உள்ளன. வடக்குப் பிராகாரத்தில் சுவாமி கோயிலுக்கு இடப்புறம் பிரமராம்பிகை என்னும் வண்டார் குழலியம்மன் கோயில் கிழக்கு நோக்கியிருக்கிறது. கிழக்குப் பிராகாரத்தில் தனியொரு மண்டபத்தில் பைரவர், சூரியன், மகாவிஷ்ணு, பிரமன், பஞ்சலிங்கங்கள், ஆதிசேடன், ராகு, கேது, சனிபகவான், அப்பர் ஆகியோரின் திருவுருவங்கள் இருக்கின்றன.

தட்சிணாமூர்த்திக்கு மேல் சுவாமி விமானத்தின் தென்புறத்தில் தனிச் சந்நிதியில் சட்டநாதர் எழுந்தருளியிருக்கிறார்.

சுவாமி கோயிலின் மகா மண்டபத்தின் தென்புறம் சோமாஸ்கந்தருக்குத் தனியிடம் உள்ளது. மகா மண்டபத்தில் ஸ்ரீ நடராஜர் எழுந்தருளியுள்ளார். பஞ்ச மூர்த்திகள் உள்ளனர். கருவறையைச் சுற்றிலும் அகழ் உள்ளது. அகழை மூடி மூன்று புறமும் மண்டபம் உள்ளது.

திருவீழிமிழலையில் உமையம்மையை மணம் புரிந்து கொண்ட இறைவன் தன் திருக்கல்யாண கோலத்தை அன்பர்களுக்கு இத்தலத்தில் காட்டியருளினான். மலைக் கோயிலில் திருமலை ஈச்வரராக எழுந்தருளி இத்திருத் தலத்திலிருந்தே திருவீழிமிழலையின் விண்ணிழி விமான

தரிசனத்தைக் காணும்படி செய்தருளினார். மலைக்கோயி லின் கன்னி மூலையில் நின்று பார்த்தால் திருவீழிமிழலை ஆலய விமானத்தை ஆனந்தமாகத் தரிசிக்கலாம்.

இந்தக் கோயிலில் சிவராத்திரியன்று ஆதிசேடனுக்கு விசேஷ வழிபாடுகள் நடைபெறுகின்றன. பின்னர் திருவீதி உலா வருகிறார்.

இத்தலத்தின் நான்கு புறங்களிலும் கிராம தேவதைக் கோயில்கள் உள்ளன. வடமேற்குத் திசையில் விளங்கும் செல்லியம்மன், கிராம மக்களால் பெரிதும் போற்றி வணங்கப்படுகிறது.

திருப்பாம்புரம் ஸ்ரீ சேஷபுரீச்வரர் ஆலய ராஜ கோபுரத்தின் முன்புறம் ஒரு திருக்குளம் உள்ளது. அதற்கு ஆதிசேஷ தீர்த்தம் என்று பெயர்.

ஆதிசேஷன் மகாசிவராத்திரி நாளில் மூன்றாம் கால பூஜை செய்ய இத் திருத்தலத்துக்கு வந்தாரல்லவா? அப் போது சிற்றம்பல விநாயகரைத் துணையாகக் கொண்டு இறைவனுக்கு நீராட்டுவதற்காக ஏற்படுத்திய திருக்குளம். சிற்றம்பலக்குட்டை என்ற பெயரில் வடக்கு வீதியில் சிற் றம்பல விநாயகர் கோயிலுக்கு வடக்குப்புறம் இருக்கிறது.

ஊருக்குள் நுழையும்போது செல்லியம்மன் கோயிலை யடுத்து செல்லியம்மன் திருக்குளம் ஒன்றும் இருக்கிறது.

இத்தலத்தின் தல விருட்சம் வன்னிமரம். அது, முதல் பிராகாரத்தின் மேற்புறம் தழைத்து வளர்ந்திருப்பதைக் காணலாம். மிகப் பழமையான மரம் என்பது அதைப் பார்த்தாலே தெரிகிறது. அதன் நிழலில்தான் ஆதிபுரீச்வரர், வன்னீச்வரர் என்ற பெயரோடு எழுந்தருளியிருக்கிறார்.

கருவறை கோஷ்டத்தில் லிங்கோற்பவர் இல்லை. பிரும்மா இல்லை. ஆனால், விமானத்தில் பிரும்மாவின் சிலையிருக்கிறது. கோஷ்ட துர்க்கை சிறிய வடிவில் இருக் கிறாள்.

இந்தப் பகுதியிலுள்ள பல கோயில்களைப் போல் இத்தக் கோயிலிலும் கொடிமரம் இல்லை.

இந்த ஆலயத்தில் நாள்தோறும் நான்குகால பூஜை கள் முறைப்படி நடைபெறுகின்றன. மாசி மாதத்தன்று பெருவிழா நடைபெறுகிறது. திருவாதிரை, நவராத்திரி போன்ற திருநாட்களில் சிறப்பு வழிபாடுகள் நடத்தப்படு கின்றன. உற்சவத்துக்கான வாகனங்கள் எல்லாம் உள்ளன.

மகாமண்டபத்தின் தென்புறச் சுவரில் ஆதிசேஷன் பூஜித்த இத்தலத்தின் சிறப்புக்களை விளக்கும் கலைப் படைப்புகள் உள்ளன. உற்சவ மூர்த்திகளில் சத்துரு சம்ஹார சுப்ரமணியர் காண வேண்டியவர்கள். வள்ளி: தெய்வானையுடன் கரங்களில் வஜ்ரம், சக்தி, வேல்ஆகிய ஆயுதங்கள் ஏந்தி, இடக் காலால் மயிலை மிதித்தபடி நிற்கும் இந்த விக்ரகம் தனிச் சிறப்புப் பெற்று விளங்கு கிறது.

இக்கோயில் உள்ள கல்வெட்டுக்களில் இத்தலம் 'உய்யக்கொண்டார் வளநாட்டுத் திருப்பாம்புரம்' எனக் காணப்படுகிறது. இறைவன் 'பாம்புரம் உடையார்' என வும், இறைவி 'மாமலையாட்டி' எனவும், விநாயகப் பெருமான் 'இராஜ இராஜப் பிள்ளையார்' எனவும் குறிக் கப் பெற்றுள்ளனர்.

திருப்பாம்புரத்துக்கு வடக்கிழக்கே கரைக்காவூர், கிளியனூர், திருமெய்ஞ்ஞானம் ஆகிய ஊர்களும், கிழக்கே போழகுடி, கொடியனூர், ஆலத்தூர் முதலிய ஊர்களும், தென்கிழக்கே கிள்ளியூரும், தெற்கே ஆண்டார்பந்தியும் தென்மேற்கே கடகம்பாடி, திருவீழிமிழலை ஆகியவை யும், மேற்கே திருச்சிறுகுடியும் அன்னியூரும்,வடமேற்கே துணர்மாந்தையும் உள்ளன.

இத்தலத்துக்குத் திருஞானசம்பந்தரின் தேவாரப் பதிகம் ஒன்றும், திருநாவுக்கரசர் பாடிய திருத்தாண்டகப் பாடல் ஒன்றும், சுந்தரரின் பாடல் ஒன்றும் உள்ளன.

'நெடியானும் மலரவனும் தேடியாங்கே
நேருருவங் காணாமே சென்று நின்ற
படியானைப் பாம்புரமே காத லானை...

என்கிறார் அப்பர் அடிகள்.

'தழலு மேனியன் தையலோர்
பாகம் அமர்ந்தவன்
தொழலுந் தொல்வினை தீர்க்கின்ற
சோதி சோற்றுத்துறை
சுழலுங் கோவை யுடையவன்
காதலிக் கும்மிடம்
பழனம் பாம்பணி பாம்புரம்
தஞ்சை தஞ் சாக்கையே'

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடியருளியுள்ளார்.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள், பத்து பாடல்களில் திருப்பாம்புரம் ஊரை அழகுற வர்ணித்துள்ளதோடு, திருப்பாம்புரநாதனின் பெருமைகளைப் பலவாறாகப் போற்றியுள்ளார்.

திருப்பாம்புரம் நன்னகரில் மேகங்கள் தவழும் சோலைகளில் நீல மயில்கள் ஆடி அழகு செய்கின்றன; மாடமாளிகைகளில் ஏறிச் செம்பஞ்சு பூசிய மெல்லடிப் பாவையர் நடனம் பயில்கின்றனர். விதிமுறை வழுவாத வேதியர்களும் வேள்வி செய்பவர்களும் கூறும் மறையொலி எங்கும் பரவுகிறது. மகளிர் பலரும் நீராடும் அரிசிலாறு, தன் கரையில் உள்ள தோட்டங்களில் மணிகளைச் சிதறி வளம் பெருக்குகிறது.

திருப்பாம்புர நன்னகர் இறைவன் விண்ணவரால் ஏத்தித் துதிக்கப் படுபவர். அணிகலன்கள் விளங்கும் திருமார்பில் வெண்ணூல் அணிந்தவர். திரிபுரங்களை

எரித்தவர். நான்மறைகளை அருளியவர். வில்வம், ஊமத்தை, கொன்றை, எருக்கு ஆகியவற்றை அணிந்த சடைமுடியை உடையவர். சங்குமணி, ஆமையோடு ஆகியவற்றை அணிகலனாகப் பூண்டவர், அனலேந்தி அழகாக ஆடுபவர். கோவண ஆடையுடுத்தி, அதன்மேல் பாம்பைச் சுற்றி முறுக்கிய சடைகள் தவழ நின்று ஆடிப் பித்தராய்த் திரிபவர். அன்பர்கள் நாடோறும் மணம் மன்னிய மலர்கள் தூவி வழிபட, மலைமகளும் தானுமாய் நான்மறைகள் முழங்க வருபவர். இறப்பும் பிறப்பும் இல்லாத ஒளிபொருந்திய சோதியாய் விளங்கும் எம்பெருமான் ஓதி உணர்ந்தவர்களுக்கு ஞானத்தின் திருவுருவாய் விளங்குபவர். திருமாலுக்குச் சக்கராயுதம் வழங்கியவர். பிரம்மனுடைய ஐந்து தலைகளில் ஒன்றைக் கொய்தவர். கல்லாலமரத்தின் கீழிருந்து சனகாதி முனிவர்களுக்கு அறம் அருளியவர். செருக்கோடு கயிலை மலையைப் பெயர்த்த இராவணனை மெல் விரலால் ஊன்றி அடர்த்துப் பின் அவன் தன் குற்றமுணர்ந்து வருந்திப்பாட, அருள் செய்தவர். வண்டுகள் மொய்க்கும் கூந்தலையுடைய உமையம்மை நடுங்க யானையை உரித்துப் போர்த்தவர். முற்பிறவிகளில் நாம் செய்த பாவங்களைத் தீர்ப்பவர்.

இக்கோயிலில் 1954-ம் ஆண்டு ஆலயத் திருப்பணிகள் தொடங்கப் பெற்று, 1960-ம் ஆண்டு குடமுழுக்கு செய்திருக்கிறார்கள். பாடல்பெற்ற இந்தக் கோயிலுக்குக் குடமுழுக்குக்காட்டி முப்பத்தைந்து ஆண்டுகள் கடந்து விட்டன என்பதை அறியும்போது வேதனையாகத்தான் இருக்கிறது.

# திருச்சிறுகுடி

காவிரி நதியின் தென்கரையில் இருக்கும் தேவாரப் பாடல் பெற்ற அறுபதாவது திருத்தலம் திருச்சிறுகுடி. நன்னிலம் வட்டத்தில், பேரளம் ரயில் நிலையத்திற்கு மேற்கே திருமீயச்சூருக்கு எட்டு கிலோ மீட்டர் தொலை விலுள்ள சிற்றூர். இதற்குக் கிழக்கில் திருப்பாம்புரமும், தெற்கே திருவீழிமிழலையும், மேற்கில் திருவன்னியூரும், வடக்கில் தேரழுந்தூரும் உள்ளன.

கும்பகோணம் பேருந்துசாலையில் ஐயனார்குடிக்குத் தெற்கே இரண்டு கிலோ மீட்டர் தொலைவிலும், கும்ப கோணம்-பூந்தோட்டம் பேருந்து மார்க்கத்தில் கடகம் பாடிக்கு வடக்கே இரண்டு கிலோ மீட்டர் தொலைவிலும் சிறுகுடி அமைந்துள்ளது. திருப்பாம்புரத்தை வழிபட்டு விட்டு மேற்கே இரண்டு கிலோ மீட்டர் பயணம் செய்து சிறுகுடியை அடைகிறோம்..

சிறுகுடி என்றால் சிற்றூர் என்றே பொருள். இது ஊரல்ல ; சின்னஞ்சிறு கிராமம். இந்தச் சிறுகிராமத் தில் கீழ சிறுகுடி, மேலசிறுகுடி என்று இருபகுதிகளைக் காட்டுகிறார்கள். நன்னிலம் வட்டத்தில் சிறுகுடி என்ற பெயரில் வேறு சில ஊர்களும் இருப்பதால், இந்த ஊரைத் திருச்சிறுகுடி என்று வழங்குவதே வழக்கத்திலிருந்து வருகிறது.

வடமொழியில் இந்த ஊருக்கு சூட்சுமபுரி என்று பெயர். அதைத் தமிழாக்கம் செய்ததில் 'சிறுகுடி' ஆயிற்று என்றும் கொள்ளலாம்.

திருக்கைலாயத்தில் பரமேச்வரனும் பார்வதியும் சொக்கட்டான் ஆடினார்களாம். அதில் பார்வதி வெற்றி பெற்றதும், வெட்கமடைந்த பரமேச்வரன் எங்கோ மறைந்து விட்டராம். மனக் கலக்கம் அடைந்த பார்வதி சிறுகுடி திருத்தலத்துக்கு வந்து மங்கள தீர்த்தத்தை உண்டாக்கி, தன் கையால் ஈர மணலை எடுத்து அதைச் சிவலிங்கமாகப் பிடித்து வைத்து வழிபட்டதாகவும், சுவாமி பிரத்யட்சமாகி அவளை மீண்டும் ஏற்றுக் கொண்டதாகவும் தலபுராணம் தொடருகிறது. கைப்பிடியளவு மணலை எடுத்துப் பிடித்து வைத்து வழிபட்டதால், இந்த தலம் 'சிறுபிடி' என்று முதலில் அழைக்கப்பட்டதாகவும், பின்னர் மருவி 'சிறுகுடி' ஆனதாகவும் ஒரு விளக்கமும் தரப்படுகிறது.

சிறுகுடியில் எல்லாமே மங்களகரமாகத்தான் இருக்கிறது. மங்கள தீர்த்தத்தை உண்டாக்கிய அம்பிகை மங்களாம்பிகா. அம்பிகைக்கு மங்களம் தந்ததாலும், தன்னை வழிபடுவோர்க்கு சர்வமங்களங்களையும் தருவதாலும் இறைவன் மங்களநாதர் என வழங்கப்படுகிறார். கன்னிமூலை விநாயகர் மங்கள விநாயகர் என்று அழைக்கப்படுகிறார்.

திருக்கயிலையில் இருக்கும் பெருமான் சூட்சுமமாய் மறைந்து மீண்டும் இங்கு தோன்றியதால் இந்தத் தலத்துக்கு சூட்சுமபுரியென்றும், சுவாமிக்கு சூட்சுமபுரீச்வரர் என்றும் திருநாமங்கள் தோன்றின. சிறுகுடியீசர் என்றும் அழைக்கப்படுகிறார். பெயருக்கேற்றவாறே மிகச் சிறிய லிங்கம். ஒரு பிடி அளவேயுள்ள மண் லிங்கம். அபிஷேகம் கிடையாது. பாணத்துக்கு சந்தனாதித் தைலம், புனுகுச் சட்டம் மட்டுமே சாத்தப்படுகிறது. எப்போதும் குவளையைக் கவசமாகப் போட்டிருக்கிறார்கள். இங்கு அம்பாளுக்குத்தான் அபிஷேகம் நடைபெறுகிறது.

மங்களதீர்த்த திருக்குளம் ஆலயத்தின் முன்புறம் உள்ளது. தல விருட்சம்,வில்வமரம்

கிழக்கு நோக்கிய திருச்சந்நிதி, மூன்று நிலைக ளுடைய, அழகிய சிறு ராஜ கோபுரத்தைக்கடந்து பிரா காரத்தை அடைகிறோம். நந்தி, பலிபீடங்களைத் தரி சித்து, பிராகாரத்தை வலம் வரும் போது, கருவறை மண்ட பத்தின் தென்புறம் நடன கணபதியையும், விச்வாமித்தி ரரையும் கண்டு, ஸ்ரீ தட்சிணாமூர்த்தியையும் மங்கள விநாயகரையும் வழிபட்டு, மேற்கேயுள்ள வள்ளி தெய்வ யானையோடு கூடிய முருகனை வணங்குகிறோம். மேற்குக் கோஷ்டத்தில் மகா விஷ்ணுவையும், வடப்புறம் பிரும்மாவையும் காண்கிறோம். துர்க்கைக் கோஷ்டத் தில் அர்த்தநாரீச்வரர் இருக்கிறார். சண்டிகேச்வரர் திருச் சந்நிதியும் உள்ளது.

வலம் வந்து மகா மண்டபத்தில் நுழைகிறோம். வடக்குப்புறம் தெய்வப் பொலிவுடன் திகழும் மங்கள நாயகியின் அருட்சந்நிதி நம்மை 'வா வா' என்றழைக் கிறது. கருணையே வடிவான அன்புத் தெய்வம், அடி யார்களைக் கடைக்கண் பார்வையாலேயே கரையேற்றக் காத்திருக்கும் திருக்கோலம் பூண்டிருக்கிறாள்.

உலகெங்கும் அமைதி நிலவி மக்கட்குலம் மன நிம்மதி யுடனும் மகிழ்ச்சியுடனும் வாழ அருள்வழங்குதாயேஎன்று உலக நாயகியிடம் மனத்துக்குள்ளேயே பிரார்த்தித்துக் கொள்கிறோம். அப்பிராத்தனையுடன் பேரருட்சக்தியின் முன்னால் நிற்கும்போது நமது தனித்தன்மைகளும் தனிப் பட்ட விருப்பங்களும் மறைந்து, பரந்த பெருவெளியின் அருளொளியில் தோய்ந்து, மூழ்கி கரைந்து, கலந்து, சச் சிதானந்த மயமாகிவிடுகிறோம்.

ஒரு கணம்தான். மாயா லோகம் மாய வலையை வீசி நம்மைச் சிறைப்படுத்த, அதில் சிக்கிக் கொண்டு மண்ணு

லகில் மீண்டும் பிறக்கிறோம். சிறுபிள்ளைகளாக வேடிக்கை பார்க்கத் தொடங்குகிறோம்.

அம்பாள் சந்நிதியின் இடப்புறத்தில், மகா மண்டபத்தில் ஈசானிய மூலையில் நவக்கிரகங்கள் இருக்கக் கண்டு வலம் வருகிறோம். தனியே சனிபகவான் இருக்கிறார். பைரவர், சூரியன், ஆதி விநாயகர் இருக்கிறார்கள். அழகிய பாலகன் உருவத்தில் அணிகலன்களோடு அள்ளி அணைக்க வேண்டும் என்று நம்மை ஏங்க வைக்கும் அதிசய கோலத்தில் ஸ்ரீ ஞானசமபந்தப் பெருமான் அங்கே நிற்கிறார்.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருநல்லத்தையும் திருவழுந்தூரையும் வழிபட்டதற்கு இடைக் காலத்தில் பல சிவத் தலங்களுக்குச் சென்று, வழிபட்டுப் பதிகங்கள் பாடியருளியிருக்கிறார். அவற்றுள் திருச் சிறுகுடித் திருத்தலமும் ஒன்றாகும்.

திருச்சிறுகுடியில் பாடிய திருப்பதிகம் முதல் அடியும் மூன்றாம் அடியும் நாற்சீர் கொண்ட அளவடியும், இரண்டாம் அடியும் நான்காம் அடியும் முச்சீர் கொண்ட சிந்தடியும் பெற்றமையால் ‘திருமுக்கால்’ என்று அழைக்கப்படுகிறது.

திடமலி மதிலணி சிறுகுடி மேவிய
படமலி யரவுடை யீரே
படமலி யரவுடை யீருமைப் பணிபவர்
அடைவதும் அமருல கதுவே

என்ற முதல் பாடலில் ‘வலிமை மிக்க மதில்களால் சூழப்பட்ட சிறுகுடியில் படத்தையுடைய அரவினை அணிந்து விளங்கும் இறைவரே, உம்மை வழிபடுபவர் இவ்வுலகுக்கு அப்பால் துலங்கும் சிவலோகத்தை அடைவார்கள்’ என்று கூறுகிறார்.

அடுத்து வரும் பாடங்களில் சிறிகுடியின் வளமையை யும் அங்கு உரையும் சிவபெருமானின் பெருமைகளை யும் பலவாறாக வர்ணிக்கிறார்.

'சிற்றிடையை உடைய உமாதேவியாரோடு மகிழ்ந்து சிறுகுடியில் உறையில் சடைமுடியை உடைய பெருமானே! உம்முடைய வணங்கத் தக்க திருவடி களைப் பற்றுக்கோடாகக் கொண்டவர்கள் தம்மைப் பற்றியுள்ள பந்தபாசங்களாகிய பிணிகள் இன்றி வாழ்வார்கள்.

தெளிவான நீர்நிலைகளால் சூழப்பெற்ற சிறுகுடியில் துள்ளிக் குதிக்கும் மானைக் கையிலேத்தி எழுந்தருளி யிருக்கும் இறைவனே, உம்முடைய வணங்குவதற் குரிய திருவடிகளை நினைக்கும்போதே அத்தனை நலன்களும் நம்மை வந்தடையும்.

செந்நெல் விளைகின்ற வயல்கள் சூழ்ந்த சிறு குடியில் முப்புறமெரித்த பெருமையோடு எழுந்தருளி யுள்ள சிவபெருமானே, உம்மை நினைப்பவர் உமது வழிபாட்டைப் பற்றிப் பிறர்க்கு உபதேசிக்கும் தக்கோர் ஆவர்.

பாத்திகளில் குன்றாது பாயும் நீர் வளமுடைய சிறு குடித் திருத்தலத்தில் திருமுடியில் தங்கும் பேற்றைப் பெற்ற பிறையை அணிந்து விளங்கும் பெருமானே, உம்மை விரும்பி மனம் குழைந்து பற்று அற்றவர், மேல்வரும் வினைகள் இலராவர்.

கயல் மீன்களை உடைய புனல் சூழ்ந்த சிறுகுடியில் உமையவளைத் தனது இடப்பாகத்தே கொண்டு விளங்கும் பெருமானே, உம்மை வாழ்த்துபவர் குற்றங் கள் அகலப் பெறுவர்; நல்ல தவமுடையவராவர்.

அடர்ந்த பொழில்களால் சூழப்பெற்றது சிறுகுடி. அங்கு நறுமணம் கமழும் சடைமுடிகளுடன் திகழ்கிறார்

பெருமான். அவரிடம் பேரன்பு செலுத்தி மெய் ஞானத்தைப் பெறுபவர் மேன்மக்களாகிறார்கள்.

திசையவர் தொழுதெழு சிறுகுடி மேவிய
தசமுக னுரநெரித் தீரே
தசைமுக னுரநெரித் தீருமைச் சார்பவர்
வசையறு மதுவழி பாடே

எட்டாவது பாடலில், எட்டுத் திசைகளில் உள்ளவர் களாலும் வழிபடப் பெறும் சிறுகுடி என்று இத்தலத்தின் பெருமையைப் பறைசாற்றுகிறார் ஞானசம்பந்தர். இங்கு உறையும் சிவபெருமான் எப்படிப்பட்டவர்? இராவணனது வலிமையைச் செற்றவர்: அவரை நோக்கிக் கூறுகிறார் சம்பந்தர் பெருமான்: "உம்மைச் சார்ந்திருப் பவர்கள் குற்றம் குறையேயில்லாத வழிபாட்டைப் புரிந்தவர்களாவார்கள்" என்கிறார்.

அடுத்து, 'கரைகளை உடைய வயல்கள் சூழ்ந்த சிறு குடியில் திருமால், பிரும்மா ஆகிய இருவரும் தங்களது அடியையும் முடியையும் காண முடியாமல் செய்த பெருமானே, உம்மைத் துதிப்பவர்கள் ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம் ஆகிய மூன்று வகை வினைகளும் இல்லாமல் ஆவர்' என்கிறார்.

பத்தாவது பாடலில் வழக்கமாகப் புத்த சமண மதங்களைப் பழிக்கிறார் சம்பந்தர். வயல்களிடத்து நீர் நிறைந்து விளங்கும் சிறுகுடியில் விளங்கும் இறைவன் பௌத்தர், சமணர் ஆகியோருக்கு அப்பாற்பட்டுத் திகழ்பவர். அவரைப் போற்றுவதையே பக்தர்கள் தங்களுக்குக் கிடைத்த அரிய பரிசாகக் கருதுகிறார்கள். பதினோராவது பாடலில்,

தேனமர் பொழிலணி சிறுகுடி மேவிய
மானமர் கரமுடை யீரே
மானமர் கரமுடை யீருமை வாழ்த்திய
ஞானசம் பந்தன் தமிழே

என்கிறார். 'தேன் வண்டுகள் விரும்பும் பொழில் சூழ்ந்த சிறுகுடி' என்று ஆயிரத்துமுந்நூறு ஆண்டுகளுக்கு முன் பாடியுள்ளார் சம்பந்தர். அந்தக் கூற்றை மெய்ப்பிப்பது போல் இன்றும் அக்கோயில் மண்டபத்தில் ஒரு ஜன்னலில் தேனடை இருக்கக் கண்டோம். தேனீக்கள் பக்தர்களுக்குத் தீங்கிழைக்காவண்ணம் கம்பி வலை போட்டு மூடியிருக்கிறார்கள்.

சங்க நூல்களில் இத்தலத்தில் வாழ்ந்த கொடை வள்ளலாகிய பண்ணனைப் பற்றிப் புலவர் பலர் பாடிய பாராட்டுப் பாடல்கள் உள்ளன. பண்ணன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனுடைய நண்பருள் ஒருவன். சிறந்த கொடையாளி.

'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்
பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப்
புன்காழ் நெல்லிப் பைங்காய்'

என அகநானூறு 54-ம் பாடல் இவனைப் பாராட்டுகிறது. கோவூர்க்கிழார், கிள்ளிவளவன், மன்னனார் முதலியோர் இவனைப் பாடியுள்ளனர். சிவனைப் பசிப்பிணி மருத்துவன் எனவும், முட்டைகளை எடுத்துக் கொண்டு மேட்டு நிலத்தே அடையும் எறும்புகளின் வரிசை போல் இவனது இல்லத்திலிருந்து இரவலர் சோற்றுத் திரளைக் கையில் எடுத்துக் கொண்டு வரிசை வரிசையாய் வருகின்றனர் எனவும் புறநானூறு 173-ம் பாடலில் காணப்படுகிறது.

செவ்வாய் தோஷமுடையவர்களும் திருமணமாகாத கன்னியரும் வழிபட்டு நலம் பெறும் திருத்தலமாகத் திருச்சிறுகுடி போற்றப்படுகிறது.

திருச்சிறுகுடிக் கோயிலில் சீரிய முறையில் திருப்பணிகள் நடைபெற்று 4-7-76 அன்று குடமுழுக்கு நடைபெற்றிருக்கிறது. நல்ல முறையில் பாதுகாக்கப்பட்டும் நிர்வகிக்கப்பட்டும் வருகிறது. திரு. விசுவநாத குருக்கள் சிரத்தையுடன் பூஜைகள் செய்து வருகிறார்.

# சுரைக்காயூர்

திருவீழிமிழலைத் திருத்தலத்தின் தலபுராணத் தொடர்பான ஊர்கள் தொடர்கின்றன. அடுத்து, திருச்சிறு குடிக்குக் கிழக்கே ஒன்றரை மைல் தூரத்திலுள்ள சுரைக் காயூருக்குச் செல்கிறோம்.

கும்பகோணம்—காரைக்கால் பேருந்துப் பாதையில் ஐயனார்குடிக்கும் கிளியனூருக்கும் இடைபே 'கக்கத்தி' என்னும் கர்க்கத்தி பஸ் நிலையம் இருக்கிறது. அங்கு தென்புறம் திரும்பி ஒரு கிலோமீட்டர் தொலைவு சென்றால், சுரைக்காயூரை அடையலாம். இது திருவீழி மிழலைக்குக் கிழக்கிலும், வழுவூருக்குத் தெற்கிலும், திருக்கிள்ளுகுடிக்கு மேற்கிலும், திருப்பாம்புரத்துக்கு வட கிழக்கிலும் உள்ளது.

ஸ்ரீ மகாவிஷ்ணு தனது தாமரைக் கண்ணைப் பறித்து அர்ச்சனை செய்து திருவீழிமிழலைப் பெருமானிடமிருந்து சக்ராயுதம் பெற்றார். அதைக் கொண்டு ஜலந்தாசுரனை ஜெயித்து, இந்த க்ஷேத்திரத்தின் ஈச்வரனை வழிபட்ட காரணத்தால் விஜயசுதர்சனபுரம் என்ற பெயர் பெற்றது. சோழர்கள் திருப்பணிகள் ஐந்நூற்றுள் இதுவும் ஒன்றான தால் சுவாமிக்கு விக்கிரமசோழேசர் என்ற திருநாமம் ஏற்பட்டது.

ஸ்ரீ விக்கிரமசோழேச்வரர் ஒரு சமயம் தமிழ் மூதாட்டி ஔவையாரிடம் ஒரு சுரைக்காயை அளித்து, "இதில் பாதியை விதைக்காக வைத்துக் கொள்—மீதி பாதியை நாளை திருவீழிமிழலையில் நடைபெறவிருக்கும் அபிஷே கத்தின் போது கறியாகச் சமைக்க அங்கு கொண்டு வா"

என்று அருட்கட்டளையிட்டாராம். அதனால் இந்த ஊருக்கு 'திருச்சுரக்கை' என்றும், சுரைக்காயூர் என்றும் பெயர்கள் தோன்றின. இங்கு ஸ்ரீ மகாவிஷ்ணு, விநாயகர், அகஸ்தியர், அப்பர் அடிகள் முதலியோர் தீர்த்தங்கள் ஏற்படுத்திப் பரமனை வழிபட்டிருக்கிறார்கள்.

இங்கு உறையும் அம்பிகையின் திருநாமம்; குந்தளாம்பிகை. ஐம்பது வருடங்களுக்கு முன் கும்பாபிஷேகம் செய்திருக்கிறார்கள், அதற்கு முன் 1912-ல் றா. வயித்திய நாதஸாமி அய்யன், தர்மகர்த்தாவாக இருந்த போது ஒரு முறை திருப்பணிகள் நடைபெற்றுக் குடமுழுக்காகியிருக்கிறது.

நான் சென்ற சமயம், சுரைக்காயூரைச் சேர்ந்த நடராஜ ஐயர், தங்கள் குடும்பத்தினர் போற்றிப் பாது காத்து வந்துள்ள இக்கோயிலை மீண்டும் நல்ல நிலைக்குக் கொண்டு வரவேண்டும் என்பதில் ஆர்வமாயிருந்தார்.

சிறிய கோயில்தான். ராஜகோபுரம் இல்லை. கருவறைவயச் சுற்றிக் கோஷ்ட தேவதைகள் இல்லை. ஸ்ரீ சண்டிகேச்வரர் சந்நிதியுள்ளது. பைரவர், சனீச்வரர் சூரியன் சிலைகள் உள்மண்டபத்தில் இருக்கின்றன.

சுரைக்காயூரில் ஸ்ரீவரதராஜரை மூலவராகக் கொண்ட பெருமாள் கோயில் இருக்கிறது. ஸ்ரீ ராமர், சீதை, லட்சுமணர், அனுமார் உற்சவமூர்த்திகளாக எழுந்தருளியுள்ளனர்.

மேற்கே ஒரு மைலில் உள்ள திருப்பாம்புரம் செல்லியம்மனுக்கும் சுரைக்காயூருக்கும் தொடர்பு இருக்கிறது. நிலப்பட்டாவிலேயே சுரைக்காயூர்-திருப்பாம்புரம்செல்லியம்மன் என்றுதான் இருக்கிறதாம். உற்சவத்துக்குக்

காப்புக் கட்டும்போதுகூட, சுரைக்காயூர் கிராம மக்களின் சௌகரியத்தைக் கேட்டுக் கொண்ட பிறகே ஏற்பாடுகள் செய்யும் வழக்கம் இன்றும் இருந்து வருவதாக நடராஜன் கூறினார்.

ஸ்ரீ பெருமாள் கோயிலுக்குத் தெற்கே கிராமத்தார் நான்கு ஆண்டுகளுக்கு முன் ஒரு பிள்ளையார் கோயிலைக் கட்டிக் கும்பாபிஷேகம் செய்திருக் கிறார்கள்.

பல கிராமக் கோயில்கள் தக்க பாதுகாப்பின்றி இருக்கும் நிலையில், இந்தக் கோயில் உற்சவமூர்த்தி களை இரும்புக் கதவுக்குள் நன்றாகப் பூட்டித்தான் வைத்திருக்கிறார்கள். அப்படியும் மூன்றாண்டுகளுக்கு முன் திருடர்கள் எல்லாப் பூட்டுக்களையும் உடைத்து விட்டு ஸ்ரீ சுப்ரமணியசுவாமியையும் தெய்வானையையும், மட்டும் எடுத்துக் கொண்டு போயிருக்கிறார்கள். பின்னர் விக்ரகங்கள் இருக்கும் இடத்தைக் குறிப்பிட்டு போலீ சுக்கு ஒரு 'மொட்டைக் கடிதம்' வந்ததாம். அதன்படி தேடிச் சென்று போலீசார் அந்த விக்ரங்களை எடுத்து கோர்ட்டில் ஒப்படைத்திருக்கிறார்கள். பின்னர், மிகப் பிரயாசைப்பட்டு அவற்றைக் கோயிலுக்கு மீட்டு வந்திருக் கிறார்கள். ஆனால். அவை பின்னப்பட்டுப் போயிருந்தன. ஸ்ரீசுப்பிரமணியரின் வலக்கையில் இரண்டு விரல்களும், தெய்வானையின் இடக்கரமும் வெட்டப்பட்டிருந்தன. அவை ஐம்பொன் சிலைகள் என்று நினைத்து எடுத்துச் சென்றவர்கள், பரிசோதனை செய்வதற்காக அப்படிச் செய்திருக்க வேண்டும் என்று நடராஜன் கூறினார். அவற்றைப் பழுது பார்த்துவிட வேண்டும் என்று துடியாய் இருக்கிறார் அவர். ஆனால், திருட்டுப் பற்றிய கோப்பு பைசல் ஆகும்வரை விக்ரகங்களைப் புதுப்பிக்கக் கூடாது என்று தடை போடப்பட்டிருக்கிறதாம்!

# கிள்ளியூர்

சுரைக்காயூருக்குக் கிழக்கே நான்கு கிலோ மீட்டர் தொலைவில் கிள்ளியூர் என்ற கிராமம் இருக்கிறது. சுரைக் காயூரை விடப் பெரிய கிராமம். அங்குள்ள ஸ்ரீ அகஸ்தீச் வரர் சுவாமி கோயிலும் சுரைக்காயூர் ஸ்ரீ விக்கிரம சோழேச்வரர் கோயிலைவிடப் பெரியது. பார்க்க நேர்த்தி யாகவும் சுத்தமாகவும் இருக்கிறது. அங்குள்ள அம்பிகை யின் திருநாமம் கௌரி பார்வதி.

இக்கோயிலைப் பார்த்தாலே செட்டிமார்களின் திருப் பணி என்று தெரிகிறது. 1970-ம் ஆண்டு குடமுழுக்கு நடைபெற்றிருக்கிறது. சுமார் எழுபத்தைந்து ஆண்டு களுக்கு முன்னர் நாட்டுக்கோட்டை நகரத்தாரும் கிராம மக்களும் சேர்ந்து கட்டிய இந்தக் கோயில், தற்போது ஆதரவும் கவனிப்பும் இல்லாமல் ஒளி மங்கிக் காட்சி யளிக்கிறது. செட்டிமார்கள் கட்டியுள்ள விடுதியும் நந்த வனமும் பசுமடமும் பழைய பெருமைகளின் பரிதாபகர மான சின்னங்களாக காட்சியளிக்கின்றன.

கோயிலுக்கு ராஜகோபுரம் இல்லை. எதிரில் பெரிய குளம் இருக்கிறது. ஆலய நுழைவாயிலுக்கு இடப்புறம் மதிற்சுவரையொட்டி ஒரு விநாயகர், குளத்தை நோக்கி அமர்ந்திருக்கிறார்: அவரைக் குளக்கரை விநாயகர் என்று அமைக்கிறார்கள். பக்கத்திலேயே ஒரு சிவலிங்கமும் இருக்கிறது.

ஸ்ரீ அகஸ்தீச்வரர் கிழக்கு நோக்கித் திருச்சந்நிதி கொண்டிருக்க, அம்பிகை தென்திசையை நோக்கி எழுந் தருளியிருக்கிறாள். சந்நிதிக்கு நேரே தென்புறமாக உள்ளே வர ஒரு வாசல் இருக்கிறது.

நாங்கள் முதல் முறை ஸ்ரீ அகஸ்தீச்வரர் ஆலயத் துக்குச் சென்றபோது மாலை நாலரை மணியிருக்கும்.

வெளிப்புறக் கம்பிக்கதவு பூட்டப்பட்டிருந்தது. குருக்கள் எங்கே போயிருக்கிறார், எப்போது வருவார் என்று ஒரு வருக்கும் தெரியவில்லை. பிராகாரத்தையாவது வலம் வரலாம் என்று நினைத்துக் கதவைத் திறக்கும்படி கேட்டோம். மெய்க்காவலரிடம்தான் சாவியிருப்பதாகக் கூறினார்கள். அவரை அழைத்து வரும்படி கேட்டுக் கொண்டோம். ஒருவர் முகத்தை ஒருவர் சிறிது நேரம் பார்த்துவிட்டு யாரையோ அனுப்பினார்கள். அறங்காவலராகப் பதவியேற்கப்போகிறவரும் மெய்க்காவலரும் வந்தார்கள். ஆனால், கதவைத் திறக்கவில்லை. கிராம மக்கள் கூறியும் மெய்க்காவலர் கண்டிப்பாக மறுத்துவிட்டார். 'யார், என்னன்னு தெரியாம எப்படிக் கதவைத் திறக்கிறது?' என்று கேட்டார். 'வந்திருக்கிறவங்க யார் என்னன்னு எங்களுக்குத் தெரியும். நாங்க சொல்றோம். நீங்க பூட்டைத் திறந்து விடுங்க' என்று மீண்டும் கிராமத்தார் சொல்லியும் அவர் கேட்பதாக இல்லை. அறங்காவலராக பதவியேற்கப் போகிறவரும் வாயை மூடிக்கொண்டுதான் இருந்தார்.

பல கிராமங்களில் கோயில் தரிசனம் செய்வதே பெரும்பாடாக இருக்கிறது. கோயில் திறந்திருக்க வேண்டிய வேளையில், அது திறந்திருந்தால் நமது அதிர்ஷ்டம் தான்! அர்ச்சகர் உள்ளூரிலேயே இருந்துவிட்டால் நாம் முற்பிறவியில் மிகவும் புண்ணியம் செய்திருப்பதாகப் பொருள். பல கோயில்களில், எங்கிருந்தோ வரும் அர்ச்சகர் எப்போதோ 'பூஜை' செய்துவிட்டுப் போய் விடுவார். அவர் என்ன செய்வார், பாவம்! நாலைந்து கிராமக் கோயில்களுக்கு ஓர் அர்ச்சகர். அவருக்கு உடல்நலம் குன்றினாலோ, குடும்ப விஷயமாக வெளியூர் சென்றாலோ சுவாமி அந்தகாரத்தில், பட்டினியோடு கிடக்க வேண்டியதுதான்!

திறந்திருக்க வேண்டிய வேளையில் கிராமங்களில் அரசு அலுவலகங்கள் திறந்திருக்கவில்லையா? கல்விக்

கூடங்கள் திறந்திருக்கவில்லையா? கடைகள்திறந்திருக் வில்லையா? உணவு விடுதிகள் திறந்திருக்கவில்லையா? அரசு இலாகாவின் ஆதிக்கத்தின் கீழிருக்கும் கோயில் களுக்கு மட்டும் ஏன் இப்படியொரு விதிவிலக்கு?

தரிசன வேளையில் நம் கோயில்கள் திறந்திருக்க வேண்டுமானால் முதலில் சமுதாயத்தின் மனச்சாட்சி திறக்கப்பட வேண்டும். கோயில் நிர்வாகத்துக்குப் பொறுப்பேற்றிருப்பவர்களின் மனம் திறக்கப்பட வேண் டும். அர்ச்சகர்களின் குடும்பநிலையிலிருந்து ஆலயத்தை காவல் காக்கும் முறைகள்வரை அத்தனை பிரச்னை களையும் அடிப்படையிலிருந்து ஆராய்ந்து இதற்குத் தீர்வுகாண வேண்டும்.

"கோயில் கிராமத்தின் பராமரிப்பில் இருந்தவரை நல்லா நடந்துகிட்டிருந்துதுங்க. போர்டு கையிலே போனப்புறம்தான் இப்படியாயிடுச்சுங்க!" என்று போகு மிடமெல்லாப் கிராமத்தார் கண்ணீர் வடிக்கிறார்களே! உள்ளம் குமுறுகிறார்களே! இது ஒரு விசாரணை கமிஷனுக்கு உரிய பிரச்னையாகத் தோன்றவில்லையா? குற்றம் எங்கே, குறை எங்கே என்று கண்டுபிடிக்க வேண்டாமா? பெரிய கோயில்களுக்குப் பகட்டான குடமுழுக்குகள் நடத்திவிட்டு, பரிவட்ட மரியாதை களோடு தொலைக்காட்சிப் படத்தில் முகத்தைக் காட்டி விட்டால் மட்டும் போதுமா?

'இந்தியாவின் ஜீவன் கிராமங்களில் இருக்கிறது' என்று மேடைகளில் முழங்கிக் கொண்டிருப்பவர்கள், சமுதாயத்தின் ஆன்மா கிராம கோயில்களில் உறைகிறது என்பதை உணர வேண்டும். சிவன் கோயிலானாலும், பெருமாள் கோயிலானாலும், பிள்ளையார் கோயிலானா லும், மாரியம்மன் கோயிலானாலும், பிடாரியம்மன் கோயிலானாலும், ஐயனார் கோயிலானாலும் அங்கெல்

லாம் விளக்கெரிய வேண்டும். இருவேளையாவது தவறாமல் நைவேத்திய ஆராதனைகள் நடைபெற வேண்டும். மாறிய சூழ்நிலையையோ, சமூக மாறுதல் களையோ, பொருளாதார சீர்கேடுகளையோ காரணம் காட்டி நம் காவல் தெய்வங்களைப் பட்டினி போடுவது கிராம நலனுக்கு நல்லதல்ல. நம் காவல் தெய்வங்களைக் கவனிக்காமல் விட்டு விட்டு, அவர்களுக்கு நாம் காவ லாக இருந்து பூட்டிப் பூட்டிப் பாதுகாத்துக் கொண்டிருக் கும் நிலை நாட்டில் ஏன் ஏற்பட்டது என்று அனைவரும் யோசிப்பது நல்லது.

மறுநாள் காலையில் தரிசனம் செய்து கொள்ளலாம் என்று புறப்பட்ட எங்களை, மெய்க்காவல் அன்பர் அழைத்துப் பெரிய மனத்துடன் பூட்டைத் திறந்துவிட நாங்கள் பிராகாரத்தை வலம் வந்தோம்.

ஸ்ரீ தட்சிணாமூர்த்தி, கன்னிமூலை விநாயகர், சுப்ர மண்யர், கஜலட்சுமி அனைவரும் அவரவர்களுக்கு உரிய ஸ்தானங்களில் உள்ளனர். துர்க்கையம்மன் இருக்கிறாள். சண்டிகேச்வரர் அமர்ந்திருக்கிறார். அனைத்து வாகனங் களும் உள்ளன. ஆனால், பயன்படுத்தாமல் அவை பழுதாகிக் கொண்டிருக்கின்றன.

மறுநாள் காலை கிள்ளியூருக்குச் சென்றபோது நல்லவேளையாக அங்கு பூஜையை முடித்துவிட்டு வேறு கிராமத்திற்குத் திரும்பிக் கொண்டிருந்த அர்ச்சகரை வழி யில் பார்த்து, அழைத்து வந்து ஸ்ரீ அகஸ்தீச்வரரைத் தரி சனம் செய்தோம். பெரிய, அழகான லிங்கம். முதலில் இங்கு ஸ்ரீ நடராஜர் விக்ரகம் இல்லையாம். பின்னர் ஏதோ ஒரு தோட்டத்தில் கிடைத்ததை எடுத்து வந்து உற்சவங்கள் நடத்தியிருக்கிறார்கள். திருவாதிரை புறப் பாடுகூட இருந்ததாம். நான்கு ஆண்டுகளாக அது நின்று விட்டது.

'ஸ்ரீ ராமசாமி பெருமாள் தேவஸ்தானம்' என்று அழைக்கப்படும் கிள்ளியூர் பெருமாள் கோயிலில்,மூலவர் ஸ்ரீ லட்சுமி நாராயணப் பெருமாள், ஸ்ரீராமர்-சீதை-லட்சுமணர் உற்சவமூர்த்திகள். உட்புறம் ஸ்ரீதேவி, பூதேவியோடு ஸ்ரீ வரதராஜப் பெருமாள் எழுந்தருளியிருக்கிறார். தனிச்சந்நிதியில் சிறிய வடிவில் ஸ்ரீ ஆஞ்சநேயமூர்த்தியிருக்கிறார்.

சிவன் கோயிலுக்குப் பக்கத்தில் மாரியம்மன்கோயில் இருக்கிறது. குருக்கள் பூஜைதான். இந்தக் கிராம தேவதையின் உற்சவத்தில் உள்ளூர்க்காரர்களுடன் வெளியூர்களிலிருக்கும் இக்கிராமவாசிகளும் கலந்து கொள்கிறார்களாம். கிராமக் காவல் தெய்வங்களின் உற்சவ விக்ரகங்களெல்லாம் இங்கே பாதுகாப்பாக இருக்கின்றன. இங்கு ஸ்ரீ விநாயகர் இருக்கிறார். ஸ்ரீபேச்சியம்மனுக்கும், ஸ்ரீ மதுரைவீரனுக்கும் கோயில் பூசாரி ஆராதனை செய்து வருகிறார்.

கிள்ளியூரில் சமுதாயத்தின் மனச்சாட்சி விழித்துக் கொண்டுவிட்டது என்பதைக் காண முடிந்தது. பிராம்மணர் சங்கம், உள்ளூரிலும், வெளியூரிலும் சுமார் எழுபது பேரை உறுப்பினர்களாகச் சேர்த்து, அவர்களிடமிருந்து ஆளுக்கு வருடம் பத்து ரூபாய் நன்கொடை வசூலித்து, ஊர்கோயில்களுக்குத் திருவிளக்கு ஏற்றும் கைங்கரியத்தைச் செய்யத் தொடங்கியிருக்கிறது. இது பாராட்டப் படவேண்டிய நன்முயற்சி. பிறகிராமத்தினரும் பின்பற்றத் தக்க அரிய பணி.

# ஆலத்தூர்

தஞ்சாவூர் கிராமக் கோயில்கள் பலவற்றின் தற்போதைய பரிதாப நிலையை நேரில் பார்த்தால்தான் நம்ப

முடியும். 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்ற உன்னதக் கோட்பாட்டுக்கு மாறாக இன்று சில கிராமங்களில் மக்கள் குடியிருந்து வருவதையும் காண லாம். கோயில் கட்டடம் இருக்கிறது; உள்ளே சுவாமியும் இருக்கிறார். ஆனால் கோயில் பூட்டிக்கிடக்கிறது. பூஜையே நடைபெறுவதில்லை. 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்று கூறிய நம்முன்னோர்கள் இப்படி யொரு நிலைமை, அதுவும் தஞ்சை மாவட்டத்தில் ஏற் படும் என்று ஒரு நாளும் நினைத்திருக்க மாட்டார்கள்.

கிள்ளியூரை விட்டுப் புறப்பட்டுக் கிழக்கே ஒரு கிலோ மீட்டர் தொலைவுதான் வந்திருப்போம். ஒரு குக்கிராமம் குறுக்கிட்டது. பெயர் விசாரித்தபோது 'ஆலத்தூர்' என்று அறிந்தோம். இறங்கினோம்.

சிவன் கோயிலுக்குச் சென்றோம். பாழடைந்து, மண்டபங்கள் இடிந்து, செடிகள் புதராக மண்டிக் கிடந் தன. வெளிச்சுவரின் மேல்பூச்செல்லாம் கரைந்து, செங் கல்கள் 'ஈ' என்று பல்லையிளித்துக் கொண்டிருந்தன. கிழக்குப் புறமும் தென்புறமும் சின்ன வாசல்கள் திறந்தே கிடந்தன.

"என்ன பார்க்கறீங்க?" என்றார் ஒரு கிராமவாசி.

"கோயிலைப் பார்க்க வந்தோம். குருக்கள் ஐயா எப்போ வருவார்?"

"எப்போ வருவாரோ, யாருக்குத் தெரியும்? அவர் இங்கே வந்து மாசக்கணக்குலே ஆவுது.பூஜை யெல்லாம் நின்னு போயாச்சு. நீங்க என்னாத்தைப் பார்க்கப் போறீங்க?"

"சுவாமி பேரு என்னாப்பா?"

"யாருக்குத் தெரியும்? நாங்க 'சிவன் கோயில்'ன்னு தான் சொல்லுவோம்."

"அம்மன் பேரு?"

"அதெல்லாம் பெரியவங்களைத்தான் கேக்கணும்."

உள்ளே சென்று பார்த்தோம். பெரிய அழகான சிவ லிங்கம். ஸ்நான பானமின்றி, அன்ன ஆகாரமின்றி அமர்ந் திருந்தார் சுவாமி. சொல்லில் அடங்கா வேதனையை உள் ளடக்கிக் கொண்டு, நம்மைப் படைத்தவனை இந்த நிலைக்கு ஆளாக்கியவர்களை மன்னிக்கும்படி அவரிடம் வேண்டிக் கொண்டோம். ஓர் அறையில் தட்சிணாமூர்த்தி விநாயகர், தண்டபாணி இன்னும் பிறரும் சிறைப்படுத்தப் பட்டிருந்தார்கள்! ஆலத்தூரில் அநாதைகளாக விடப்பட் டிருப்பவர் சௌந்தரநாயகி உடனுறை பிப்ளிகாதீஸ்வரர் என்று மறுநாள் கொடியலூரில் சந்தித்த அர்ச்சகரிட மிருந்து தெரிந்து கொண்டோம்.

ஆலத்தூரில் ஸ்ரீவரதராஜப் பெருமாள் கோயில் இருக் கிறது. நான்கு சுவர்களும் சிறு கருவறையையும் வெளியிலி ருந்தே பார்த்தோம். அங்கு பட்டாச்சாரி வந்து போகி றாரா, பூஜை நடக்கிறதா இல்லையா என்பதைப் பற்றி அருகில் குடியிருப்பவர்களிடையே கருத்து வேற்றுமை நிலவியது. ஒருவராலும் நிச்சயமாகக் கூற முடியவில்லை.

வரவர, உள்ளூர்க் கோயில்கள் பற்றிய விவரங்கள் சொல்லக்கூடிய கிராம வாசியைக் காண்பதே அரிதாகிக் கொண்டிருக்கிறது. உடன் வந்த சுரைக்காயூர் நடராஜன் ஆலத்தூர் கோயில்களைப் பற்றி யாரிடமாவது விசாரித்து எழுதுவதாகக் கூறி எங்களை மாரியம்மன் கோயிலுக்கு அழைத்துச் சென்றார். நல்லவேளை, அங்கு தரிசனம் செய்ய முடிந்தது.

## கொடியலூர்

ஆலத்தூரிலிருந்து கிழக்கே ஒரு கிலோ மீட்டர் சென்றால் கொடியலூர். பாடல் பெற்றத் தலமான

திருமீயச்சூரைச் சேர்ந்த சிற்றூர். இங்குள்ள சுவாமியின் பெயர் ஸ்ரீ அகஸ்தீச்வரர். அம்பாளின் பெயர் ஸ்ரீ ஆனந்த வல்லி.

திருநள்ளாறு, சனீச்வரன் மறைந்த தல கொடியலூர் சனீச்வரன் பிறந்த இடம் எமனும் நமனும் இங்கு பிறந்த தாக ஐதீகம் என்றும் கூறினார் அர்ச்சகர். கிள்ளியூரில் நாங்கள் சந்தித்த அர்ச்சகர்தான் இங்கும் வந்து தரிசனம் செய்து வைத்தார்.

சிறிய கோயிலுக்கேற்ற முன் கோபுரம். நந்தி அழ காக இருக்கிறது. மூலஸ்தானத்திலுள்ள ஸ்ரீ அகஸ்தீச்வர லிங்கம் ஜீவனுடன் விளங்குகிறது. கருவரைக்கு முன் விநாயகர், சுப்ரமணியர் உள்ளனர். சண்டிகேச்வரர் சிலை மண்டபத்துக்குள்ளே இருக்கிறது. பைரவர் இருக்கிறார். நவக்கிரகங்கள் உள்ளன. யமதர்மராஜனின் சிலை யொன்றும் இருக்கிறது. கோஷ்ட தேவதைகள் இல்லை

ஆலயத்துக்குப் பக்கத்தில் ஒரு சத்திரம். அதற்குப் பின்னால் ஓர் அழகிய, பெரிய அல்லிக்குளம் இருக்கிறது. செடி, கொடிகளை அகற்றி, மதிற்சுவரை, செப்பனிட்டு சிறு திருப்பணிகள் செய்து குடமுழுக்கு நடந்தாக வேண் டிய நிலையிலுள்ளது ஆலயம். கும்பாபிஷேகம் நடை பெற்று ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் ஆகின்றன!

வெளிச் சுவரில் பதிக்கப் பெற்றுள்ள ஒரு கற்பலகை யில், 1909-ம் ஆண்டு பிப்ரவரி 8-ம் தேதி திருமீயச்சூர் ஆயுர்வேத பண்டிதன் தி. அழகப்பிள்ளை ஆலயததுக் காக நிலம் எழுதி வைத்துள்ள செய்தி காணப்படுகிறது.

நிலத்திலிருந்து நெல் ஒழுங்காக வந்து சேருகிற தென்றும், ஆலயத்தில் இரண்டு கால பூஜையும் முறையாக நடந்து வருவதாகவும் அர்ச்சகர் சோமசுந்தர குருக்கள் கூறிய அபூர்வ செய்தியைக் கேட்க ஆனந்தமாயிருந்தது.

கொடியலூரிலிருந்து, திருமீயச்சூர் சிவன் கோயில் கோபுரம் நன்றாகத் தரிசனம் ஆகிறது. முன்பு பேரளத்தி லிருந்து திருமீயச்சூர் தரிசனத்துக்கு வந்தபோது, கிராமத் துக்குள் செல்லவில்லை. அதனால் இம்முறை அங்கு சென்று, ஸ்ரீ வரதராஜப் பெருமாளைத் தரிசனம் செய்து விட்டு வந்தோம். சிறிய கோயில்தான். பக்தர்கள் பிராகா ரத்தைச் சுத்தம் செய்து துப்புரவாக வைத்திருந்தது பாராட்டப்பட வேண்டிய ஒன்று.

# கொல்லுமாங்குடி

பேரளத்துக்கு மேற்கே மூன்றாவது கிலோ மீட்டரில் கொல்லுமாங்குடி என்ற சிற்றூர் இருக்கிறது. ஸ்ரீராமர், பொன்மான் வடிவில் வந்த மாரீசனைக் கொன்ற ஊராம் இது. அதனால்தான் அதற்கு 'கொல்லு மான்குடி' என்று பெயராம். விசித்திரமான விளக்கங்களில் இதுவும் ஒன்று!

ரயில்வே கேட் அருகில் மாரியம்மன் கோயில் புதுப் பிக்கப்பட்டு வருவதைக் கண்டோம். அதன் முன்புறம் மிகப் பெரிய குளம் ஒன்றிருக்கிறது.

ஒரு மரத்தடியில் பேச்சியம்மன் அமர்ந்திருக்கக் கண்டோம். ஐயனார் கோயில்களில் இருப்பது போல அங்கு குதிரைச் சிலை ஒன்று உள்ளது. குளத்தின் அக் கரையில் ஒரு பழைய பிள்ளையார் கோயில் இடிந்த நிலையில் இருக்கிறது. உள்ளே விநாயகரைக் காணோம். எங்கிருக்கிறாரோ?

வடக்கே ஒரு கிலோ மீட்டர் சென்றால் கொல்லுமாங் குடி ஸ்ரீ மகாகாளநாத சுவாமி கோயிலைத் தரிசிக்கலாம். திரு. மகாகாளர் என்ற சித்தர் இங்குள்ள சிவலிங்கத்தை

வழிபட்டு முக்தியடைந்ததாகத் தலவரலாறு கூறுகிறது. இவ்வாலயத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ சௌந்தரநாயகி அம்பாள் தனிச் சிறப்புகள் பெற்று விளங்குகிறாள்.

இக்கோயிலிலுள்ள ஸ்ரீ தட்சிணாமூர்த்தி, சுமார் நான் கடி உயரத்தில் கண்கவர், உள்ளங்கவர் மூர்த்தியாகத் திகழ்கிறார். இக்கோயிலுக்குச் செல்பவர்கள் இவரைத் தவறாமல் தரிசித்து, அச்சந்நிதியில் 'ஓம் நமசிவாய' மகா மந்திரத்தை ஜபித்து விட்டு வருவது நலம் பயக்கும்.

இக்கோயிலில் பைரவர், நாகர்கள், நால்வர், ஸ்ரீ விச்வ நாதர், கைலாசநாதர், சனீச்வரர், சூரியன், பிடாரி முதலிய வர் உள்ளனர். பிராகாரத்தில் ஸ்ரீ மகா கணபதி, ஸ்ரீ சுப்ர மணியர் சந்நிதிகளும் இருக்கின்றன.

கோயிலில் கும்பாபிஷேகம் நடைபெற்று இருபது ஆண்டுகளுக்கும் மேலாகியிருந்தாலும், மண்டபங்களும் விமானங்களும் நல்ல நிலையில் உள்ளன. சிறிய அள வில் பழுது பார்த்து எளிதாகக் கும்பாபிஷேகம் செய்து விடலாம். மூன்று நிலைகளுடன் கூடிய சிறிய ராஜகோ புரம். சுதை வடிவங்கள் இல்லை. பூச்செடிகள் இருக் கின்றன. பிராகாரத்தில் பெரிய முருங்கை மரம் ஒன்றும். எலுமிச்சைச் செடியொன்றும் இருக்கின்றன, அதிசய மாக, நிறைய குரோட்டன்ஸ் செடிகள் காணப்பட்டன

கொல்லுமாங்குடியிலிருந்து நான்கு கிலோ மீட்டர் தென்மேற்கேயுள்ள போழக்குடிக்குச் சென்றோம். கர்க் கத்தியிலிருந்து தெற்கே திரும்பிச் செல்ல வேண்டும், கோயில் பூட்டப்பட்டிருந்தது. குருக்கள் எங்கிருக்கிறார் என்று விசாரித்தபோது, மேற்கேயுள்ள திருமெய்ஞானம் கோயில் குருக்கள் தான் இங்கும் வருகிறார் என்று அறிந் தோம். அவரை அழைத்துக் கொண்டு வரலாம் என்று அங்கு சென்றோம்.

ஆனால், அக் கிராமத்தில் ஓர் அசந்தர்ப்பம் நேர்ந்து விட்ட காரணத்தால் அங்கும் கோயில் திறக்கப்பட வில்லை. அக்கோயிலில் தற்காலிகமாகப் பூஜை செய்து கொண்டிருக்கும் அர்ச்சகர், போழக்குடிக்கு வரும் நிலை யில் இல்லை. எனவே, இரண்டு கோயில்களையும் மறு நாள் தரிசித்துக் கொள்ளலாம் என்று அங்கிருத்து புறப் பட்டோம்.

## திருவீழி மெய்ஞானம்

மறுநாள் மீண்டும் திருமெய்ஞானம் வந்தோம். இத் தலத்தைப் பற்றித் திருவீழிமிழலையிலிருந்து திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் பாடியுள்ளதால், இதற்குத் திருவீழிமெய்ஞானம் என்று பெயர். சுவாமியின் திருநா மம் ஸ்ரீ ஞானபுரீச்வரர். அம்பிகையின் பெயர் ஞானாம் பிகை. தீர்த்தம், ஞானபுஷ்கரணி. தல விருட்சம், வில்வம்.

கார்த்திகை மாத ஞாயிறு, திங்கட் கிழமைகளில் ஞான புஷ்கரணியில் நீராடி ஸ்ரீ ஞானபுரீச்வரரை வழிபடுதல் இத்தலத்தின் சிறப்பாகும்.

இத்தலத்தின் வடபால், நாட்டாறு ஓடுகிறது. வைகாசி விசாகம், திருவாதிரைத் திருநாட்கள் இங்கு விழா நாட்கள்.

இக்கோயிலில் குடமுழுக்கு நடைபெற்று சுமார் அறுபது ஆண்டுகள் ஆகின்றன. 'திருப்பணி துவக்க விழா 17. 6. 73' என்று கோயிலில் உள்ள குறிப்பு ஒன்று தெரிவிக்கிறது.

இப்பகுதியில் திருவீழிமிழலை ஆலயத்தைத்தவிர இந்தக் கோயிலில்தான் கொடிமரம் இருக்கக் கண்டோம்.

ஆனால், இது சிறியது சற்றுச் சாய்ந்தும் உள்ளது. இது முதலில் கவனிக்கப்பட வேண்டும். நந்தியும் மருந்து கரைந்து போய் பீடத்தின் மீது ஒட்டாமல் அமர்ந்திருக்கிறது.

தட்சிணாமூர்த்தி சந்நிதியில் 'தெட்சிணாமூர்த்தி' என்று எழுதி வைக்கப் பட்டிருக்கிறது. இதைச் சரி செய்வது கடினமல்ல.

சுவாமி கருவறை விமானத்தில் உள்ள வடிவங்களெல்லாம் மிக அழகாக இருக்கின்றன. வீணா தட்சிணா மூர்த்தி கண்டுகளிக்கத் தக்கதாகும்.

சிவலிங்கம் பெரியதாக, அருள் வடிவமாக அமைந்துள்ளது. அர்த்த மண்டபத்தில் நூற்றுக்கணக்கான வௌவால்கள் குடியிருக்கின்றன!

# போழக்குடி

திருவீழிமெய்ஞானத்துக்குக் கிழக்கே இரண்டு கிலோ மீட்டர் தொலைவிலும் பேரளத்திலிருந்து மேற்கே இரண்டாவது மைலிலும் போழக்குடி உள்ளது. கும்பகோணத்திலிருந்து பதினெட்டு மைல். கும்பகோணம்—காரைக்கால் பஸ் பாதையில் மாந்தைக்கு நான்கு மைல் கிழக்கே, போழக்குடி பஸ் நிலையத்தில் இறங்கிச் செல்லலாம்.

பிரும்மா வழிபட்ட தலமாதலால் சுவாமியின் பெயர் ஸ்ரீ பிரும்மபுரீச்வரர்; அம்பாள், ஒப்பில்லாமுலைநாயகி.

மூன்று நிலை ராஜகோபுரம், பழமையானது. வெளிப்புறம் கோபுர வாசலையொட்டி வடக்கு பார்த்திருக்கும்

சந்நிதியில் ஒரு 'பிடாரி' இருக்கிறார். பிடாரி கோயில் உற்சவத்தின்போது இங்கு அபிஷேக, பூஜைகள் நடைபெறும்.

இந்தச் சிறு கிராமத்துக்கு இந்தக் கோயில் பெரியது தான். பிராகாரத்தில் சிமெண்ட் தரை போடப்பட்டிருக் கிறது. ஸ்ரீ தட்சிணாமூர்த்திக்கு அருகில் இரண்டு ரிஷி களும் ஒரு நாகரும் உள்ளனர். (திருமெய்ஞானம் போல் இங்கும் 'தெட்சிணாமூர்த்தி' என்றே எழுதப்பட்டுள்ளது.) மகாகணபதியும் அருகிலேயே எழுந்தருளியிருக்கிறார். வெள்ளைக் கல்லால் ஆன அழகான விக்ரகம்.

நந்தி முன்பாக உள்ள விநாயகரும் வெள்ளைக் கல் லால் ஆனவர்தான். அங்கு சுப்ரமணியரும் இருக்கிறார். கோயிலுக்கு எதிரே அழகிய குளம் ஒன்றும் இருக்கிறது.

இக்கோயிலில், ஒப்பில்லாமுலை நாயகியும் துர்க்கை யும் ஒரே மண்டபத்தில் எழுந்தருளியுள்ளனர். துர்க்கை யம்மனுக்கு வெள்ளி, ஞாயிறு, செவ்வாய்க்கிழமைகளில் ராகு கால பூஜை நடைபெறுகிறது. சக்திவாய்ந்த அம்மன் திருவாதிரைக்கு ஸ்ரீ நடராஜரும், மாட்டுப் பொங்கலுக்கு முருகனும் புறப்பாடு ஆகிறார்கள். கோயிலில் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது. வாகனங்கள் எல்லாம் இருக்கின்றன. ஆனால் பிரும்மோற்சவம் நடைபெறுவ தில்லை.

14-9-59 அன்று கும்பாபிஷேகம் நடந்திருக்கிறது. ஆலயத்தைப் பார்த்தால் அது நல்லமுறையில் பராமரிக் கப்பட்டு வந்திருப்பது தெரிகிறது. கும்பாபிஷேகம் பொன்னுசாமி ஐயர் தலைமையில் நடைபெற்றிருக்கிறது. அவரது திருவுருவப்படமும் கோயிலில் வைக்கப்பட்டிருக் கிறது.

போழக்குடி அக்ரஹாரத்தில் ஸ்ரீகோதண்டராமசுவாமி கோயில் இருக்கிறது.

# வெள்ளை அதம்பார்

தேதியூரிலிருந்து எட்டு கிலோமீட்டர் தொலைவில் திருமலைராஜன் ஆற்றின் இக்கரையிலுள்ளது வெள்ளை அதம்பார் என்ற ஊர். இந்திரனின் வெள்ளை யானை யான ஐராவாதம் இங்கு வந்து சிவனைப் பூஜித்ததாக வரலாறு. அதனாலேயே ஊருக்கு இப்பெயர் ஏற்பட் டுள்ளது. இங்கிருந்த ஸ்ரீஐராவதீச்வரர் கோயில் பாழ டைந்து போய்விட்டது. இங்குள்ள ஸ்ரீலட்சுமிநாராயணப் பெருமாள் கோயிலில், ஸ்ரீ கோதண்ட ராமசுவாமி உற்சவ மூர்த்தியாக எழுந்தருளியுள்ளார். சிவன் கோயில் சுவாமி, அம்மன் உற்சவ மூர்த்திகளும் சிவலிங்கமும் பிள்ளையா ரும் இங்கே இருக்கின்றன. பிராகாரத்தில் ஒரு பெரிய துளசிமாடம் இருக்கிறது. துளசிச்செடியைக் காணோம்!

பெருமாள் கோயிலுக்கு நேர்எதிரே உள்ள தெருவின் கோடியில்தான் முன்பு சிவன்கோயில் இருந்ததாம். அந்த இடத்தைக் காணச் சென்றோம். அங்கு ஓர் அரசமரத்தடி யில் இரண்டு பெரிய சிவலிங்கங்கள் இருக்கின்றன. இரண்டு நந்திகள் காணப்படுகின்றன. உடைந்த பிள்ளையார் சிலையொன்றும், உடைந்த நந்தி சிலை யொன்றும் இருக்கக் கண்டோம். பக்கத்தில் அல்லிக் குளம் ஒன்றிருக்கிறது.

அது பெரிய கோயிலாக இருந்திருக்க வேண்டும். அங்கே மதிற்சுவர்கள் இருந்த இடத்தில் இப்போதும் அஸ்திவாரக் கற்கள் தென்படுகின்றன. மதிற்சுவர்கள் சில வருடங்களுக்கு முன்புகூட இருந்திருக்கின்றன. அதைப் பார்த்திருப்பவர்கள் சொன்னார்கள். கடைசிப்

பகுதியும் சில மாதங்களுக்கு முன்புதான் விழுந்து விட்டிருக்கிறது. மூன்று வருடங்களுக்கு முன் குளத்தை ஆழப் படுத்தியபோது அடியில் ஆலயச் சுவர்களின் அடித் தளத்தைக் காண முடிந்தது என்று அங்கிருந்த ஒருவர் கூறினார்.

கோயில் மறைந்துவிட்டதே தவிர, இதற்கு இன்னும் ஐந்து வேலி நிலம் சொத்து இருப்பதாக முன்னாள் பட்டா மணியம் கூறினார். அங்கிருக்கும் சிவலிங்கத்தின் பாணத்தை சென்னையிலிருந்து ஒரு பார்ட்டி வந்து எழு நூறு ரூபாய் வரை விலை பேசினார்களாம். ஆனால், ஊர்க் காரர்கள் விற்கச் சம்மதிக்கவில்லையாம். அதுவரை அவர்கள் பாராட்டுக்குரியவர்களே!

அந்த ஊரில் ஒரு காலத்தில் வெண்கலத் தேர் ஓடிய தாக வெங்கடாசலப் படையாச்சி என்ற பெரியவர் கூறினார். ஊரைப் பற்றிய விவரமெல்லாம் அவர் விரல் நுனியில் வைத்திருக்கிறார். வருஷம், மாதம், தேதியோடு, நடந்த நிகழ்ச்சிகளைக் கூறுகிறார். நபர்களின் பெயர் களையெல்லாம்கூடத் தெளிவாக நினைவில் வைத்திருக்கிறார். இத்தகைய முதியவர்களிடமிருந்து, இளைஞர்கள் எல்லா விவரங்களையும் கேட்டறிந்து எழுதி வைத்துக் கொள்வது நல்லது. வயதானவர்களை அலட்சியப்படுத்தி கேலிப் பொருளாக்காமல், அவர்களிடமிருந்து கிடைக்கும் பயனுள்ள செய்திகளை வருங்காலத்துக்காகச் சேகரித்து வைக்க வேண்டியது இளைய தலைமுறையினரின் தலையாய கடமைகளில் ஒன்றாகும்.

பூவரச மரத்தின்கீழ் ஒரு செங்கல்லை வைத்து அம்மனாகப் பூஜித்து வந்திருக்கிறார்கள். பின்னர், கல்லில் தாமரை புஷ்பம் போட்டு வேலை செய்து, அம்பாள் விக்ரகம் அடித்தார்கள். செப்புகுட்டி என்பவர் முகம் சுத்தம் செய்து தந்தார். அதற்குப் பிறகு கும்பகோணம்

காமாட்சி ஜோசியர் தெருவில் தாமிரம் வாங்கி விக்ரகம் அடித்தார்கள். இருபது வருடங்களுக்கு முன் எழும்பிய இந்தக் கோயிலுக்கு விஷ்ணுபுரம் மாரியம்மன் என்று பெயர். கிராம மக்கள் அடுத்த வருஷம் கோயிலாகவே கட்டத் திட்டமிட்டுள்ளார்களாம். முதியவர் சொன்னார்.

வெள்ளை அதம்பாரில் ஒரு காலத்தில் மொத்தம் மூன்று சிவன் கோயில்கள் இருந்தனவாம். பாழடைந்து போயிருக்கும் கோயிலைத் தவிர, பெருமாள் கோயில் இருக்கும் இடமும், மாரியம்மன் கோயிலும் சிவன் கோயில்களாக இருந்தனவாம்.

மாரியம்மன் கோயிலின் முன்புறம் மேடையில் இரண்டுசிவலிங்கங்கள் இருக்கின்றன. அங்கிருந்து சற்றுத் தொலைவில் தனியே பெரியலிங்கம் ஒன்று இருந்ததாம். கல்யாணம் ஒன்றில் விடப்பட்ட அதிர்வேட்டு வெடித்து ஒரு வைக்கோல் போர் தீப்பற்றிக்கொள்ள, அருகிலிருந்த அந்த சிவலிங்கம் வெடித்துச் சிதறி விட்டதாம். முதியவர் சொன்னார்.

பெருமாள் கோயிலுக்குப் பின்னால்கூட ஒரு நந்தி யிருந்ததாக அவர் கூற, எல்லோருமாக அங்கு சென் றோம். பாவம், காது பின்னமாகியிருந்த அந்த அழகிய நந்தி குப்புற விழுந்து கிடந்தது. எங்களால் முடிந்தது, அதை நிமிர்த்தி உட்கார வைத்து விட்டு வந்தோம்.

வெள்ளை அதம்பாருக்கு தேரோடும் நான்கு வீதிகள் இருந்தனவாம். அந்த ஊரிலிருந்த பிள்ளையார் ஒன்றைப் புலவனூர் கோயிலுக்குக் கொடுத்தார்களாம். பெருமாள் கோயிலுக்கு ஒன்றரை வேலி நிலம் சொத்தாக இருக் கிறதாம். எல்லாம் முதியவர் வெங்கடாசலத்தின் வயல் கள்தான்.

ஸ்ரீ ஐயனார் கோயில் மேற்கு நோக்கி இருக்கிறது. அவருக்கு எதிரில் ஒரு குளம் உள்ளது. ஐயனாருக்குக்

கரிகுளத்தான் என்று பெயர். விக்கிரம வருஷம் ஆனி மாதம் நாலாம் தேதி கும்பாபிஷேகம் நடைபெற்றிருக் கிறது. இக்கோயிலில் தூண்டிக்காரன் என்ற பதுமை ஒன்றுள்ளது. இங்கு முத்தால் ராவுத்தர் என்ற படம் வரையப்பட்டுள்ளது. ஒரு பிள்ளையாரும் இருக்கிறார். குளத்துக்கு அக்கரையில் பிடாரி கோயில் கொண்டிருக் கிறார்.

ஊருக்குள் நுழையும்போது, கிழக்குப் பார்த்த பிள்டையார் கோயில் ஒன்றிருக்கிறது. ஊருக்குள் வரும் பாதை கோயிலைச் சுற்றி வரும்ப்டி அமைய வேண்டும் என்று வெங்கடாசலப் படையாச்சி பெருமுயற்சி செய் திருக்கிறார். ஆனால், அந்த விருப்பம் நிறைவேறாமல் போனது தமக்குப் பெரும் ஏமாற்றமே என்று மிக வருத் தத்துடன் கூறினார் அவர்.

## திருப்பேணு பெருந்துறை

கும்பகோணத்திலிருந்து பூந்தோட்டம் செல்லும் பஸ் பாதையில், பதின்மூன்றாவது கிலோ மீட்டர் தொலைவில், வலப்புறம் ‘திருப்பேணு பெருந்துறை’ என்ற தேவாரப் பாடல் பெற்ற திருத்தலம் உள்ளது. நாச்சியார்கோயிலுக்குக் கிழக்கே மூன்று கிலோ மீட்டர். பேருந்துப் பாதையிலிருந்தே ஆலய விமானத்தைத் தரி சிக்கலாம். பூந்தோட்டத்திலிருந்தும் கும்பகோணத்திலி ருந்தும் பஸ்ஸில் வரும் போது கோயிலுக்கு அருகில் இறங்கலாம்.

அரிசிலாற்றின் தென் கரையில் அமைந்துள்ள இந்தத் தலம், மாணிக்கவாசகரை ஆட்கொண்ட திருப்பெருந்

துறையிலிருந்து வேறுபடுத்துவதற்காகத்தான் திருப்பேணு பெருந்துறை என்று வழங்கப்படுகிறது. பேணுதல் என்றால் 'விரும்புதல்' என்று பொருள். வழக்கில் 'திருப்பந்துறை' என்றே அழைக்கிறார்கள்.

இது பார்வதிதேவி, முருகன், பிரமன் ஆகியோர் வழிபட்ட தலம். திருஞானசம்பந்தப்பெருமான் இங்கு வந்து ஒருநாள் தங்கி ஒரு பதிகம் பாடியருளியுள்ளார்.

அச்சிறிய அழகிய கோயில், கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. மூன்று நிலை கோபுரம். எதிரில் மங்கள தீர்த்தம் இருக்கிறது. அதன் கரையில், கோயிலையொட்டி இரட்டை விநாயகர் சந்நிதிகள் உள்ளன. குக விநாயகர்' சாட்சி விநாயகர் என்று பெயர்கள். அவர்களை வழிபாட்டு, தலவிருட்சமான வன்னி மரத்தை வலம் வந்து கோயிலைத் தரிசிக்கச் செல்லலாம்.

ராஜகோபுரத்தைக் கடந்து சென்றால் கொடிமரம், நந்தி, பலிபீடங்கள் உள்ளன. ஒரே பிராகாரம். தென் பிராகார கோஷ்டங்களில் ஸ்ரீ நர்த்தன விநாயகர், ஸ்ரீ தட்சிணாமூர்த்தி, மேற்கே லிங்கோற்பவர், வடக்கே பிரும்மா, விஷ்ணு துர்க்கை ஆகியோர் உள்ளனர். தனி மண்டபத்தில் ஸ்ரீ சண்டிகேச்வரர் எழுந்தருளியுள்ளார். தென் பிராகாரத்தில் ஒரு தூணில் இருக்கும் விநாயகரின் சிறிய வடிவம் நம்மைக் கவர்ந்திழுக்கிறது.

கன்னி மூலையில் தல விநாயகர், அடுத்து முருகன், அவரை அடுத்துக் கஜலட்சுமி திருச்சந்நிதி கொண்டிருக்கின்றனர். பிராகாரத்தைத் தோண்டும் போது ஸ்ரீ சுப்ரமணியசுவாமி கிடைத்ததாம். ஆனால், சிலையில் எவ்வித பின்னமும் இல்லை.

பிராகாரத்தைச் சுற்றிலும் செடி கொடிகள் அகற்றப்பட வேண்டிய நிலையில் மண்டிக் கிடக்கின்றன.

கிழக்குப் பிராகாரத்தில் நவக்கிரங்கள் அருள் பாலிக்கின்றனர். முன்மண்டபத்தின் வாயிலில் விநாயகரும்முருகனும் வீற்றிருக்கின்றனர்.

மகா மண்டபத்தின் வடபுறம் அம்பாள் சந்நிதி உள்ளது. ஸ்ரீ மங்களாம்பிகை தெற்கு நோக்கி எழுந்தருளியிருக்கிறாள். மலையரசியம்மை என்ற திருநாமத்துடனும் அழைக்கப்படுகிறாள்.

சுவாமியின் பெயர் ஸ்ரீ சிவானந்தேச்வரர். பிரணவேச்வரர் என்ற பெயரும் உண்டு. சுயம்புமூர்த்தி, சுவாமிமலையில் தந்தைக்குப் பிரணவ மந்திரத்தை உபதேசித்த பின்னர் முருகப்பெருமான் பேச்சிழந்ததாகவும், இங்கு வந்து சிவபெருமானை வழிபட்டு மீண்டும் பேசும் திறன் பெற்றதாகவும் ஒரு தல வரலாறு. அதனாலேயே சுவாமிக்குப் பிரணவேச்வரர் என்ற பெயர் தோன்றியதாம். சுவாமி சந்நிதி அருகில், வடக்கு நோக்கி சின் முத்திரையோடு தியானம் செய்யும் நிலையில் ஸ்ரீ தண்டாயுதபாணியின் திருவுருவம் இருக்கிறது. அருகிலேயே பின்னமான முருகன் உருவச் சிலையும் உள்ளது. இந்த ஊரில் குழந்தைகள் ஊமையாகப் பிறப்பதில்லையாம். பேச்சு வாரத குழந்தைகளை இங்கு வழிபாட்டுக்கு அழைத்து வருகிறார்கள்.

கோயிலில் மாட்டுப் பொங்கல், நவராத்திரி விழாக்கள் சிறப்பாக நடைபெறுகின்றன. இங்குபிட்சாடனர்பெருமையுடையவர். சித்திரைப் பரணியில் அவருக்கு அமுது படைக்கப்படுகிறது. தினமும் சூரியனின் கிரணம் சுவாமியின் மீது படிகிறது.

தென் பிராகாரத்தில் நால்வரோடு, ஓர் அரசன், அரசி சிலைகளும் கலந்திருக்கின்றன. 1967-ம் ஆண்டில் நடைபெற்ற குடமுழுக்கின்போது இடம் மாறி வைத்து விட்டிருப்பார்களோ ? அடுத்து நடைபெறப்போகும் திருப்

பணியின் போது உரிய இடத்தில் மாற்றி வைக்கப்பட்டு அவர்கள் பற்றிய செய்திகளையும் எழுதி வைப்பது சாலச் சிறந்தது. ராஜராஜ சோழன் பரம்பரையில் ஒருவர் தொழு நோயால் பீடிக்கப்பட்டு, பின்னர் மங்கள தீர்த்தத்தில் நீராடிக் குணம் அடைந்ததாக வரலாறு கூறுகிறது.

ஆதியில் செங்கற் கோயிலாக இருந்த திருப்பேணு பெருந்துறை, கரிகாற்சோழன் காலத்தில் கற்கோயிலாக எழும்பியதற்குக் கல்வெட்டு ஆதாரம் இருக்கிறது. ஒரு கல்வெட்டில்,'திருநறையூர் நாட்டுக் கிராமமான பேணுபெருத்துறை' எனவும், இறைவனின் பெயர் 'பேணுபெருந்துறை மகாதேவர்' எனவும் குறிக்கப் பெற்றுள்ளன.

முன்னொரு காலத்தில் மங்கள தீர்த்தத்தில் தெப்போற்சவம் நடைபெற்றிருக்கிறதாம்.

இங்கு பார்வதிதேவி தவம் புரிந்ததால், சிவபெருமான் அன்போடு மங்களம் என்று அழைத்தார். அதனால் மங்களாம்பிகை என்ற பெயரும், அப்பெயரிலேயே தீர்த்தமும் ஏற்பட்டதாகக் கூறப்படுகிறது.

ஆலயத்தின் ஆக்னேய திக்கில் தவம் புரிந்த அவதுர்ம மாமுனி தம் தொழுநோய் நிவர்த்திக்காக மங்கள தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து ஈசனை அர்ச்சித்த உடனேயே சின்மயானந்த வடிவம் உண்டானதால், ஈசனுக்குச் சின்மயானந்தமூர்த்தி என்றும், தீர்த்தத்துக்குச் சின்மயானந்த தீர்த்தம் என்றும் பெயர்கள் தோன்றிற்றாம்.

திருப்பந்துறை, கருவிலிக்கு மேற்கிலும் திருக்கூர் கோட்டகத்துக்கு வடக்கிலும் நாச்சியார் கோயிலுக்குக் கிழக்கிலும் திருவிடைமருதூருக்குத் தெற்கிலும் அமைந்து உள்ளது.

நாங்கள் சென்ற சமயம் ஆலய பரம்பரை அறங்காவலர் ஆர். வெங்கடாமணி திருப்பணிகள் செய்து மீண்டும்

ஒரு குடமுழுக்கு நடத்துவதில் தீவிரமாக முனைந்திருந் தார். இம் முயற்சியில் பக்தர்கள் அவருக்குத் துணை நிற்பார்கள் என்பதில் ஐயமில்லை.

## காஞ்சிவாய்

அடுத்து காஞ்சிவாய் கிராமத்துக்கு செல்கிறோம். 'காஞ்சி வாயில்' என்பதுதான் 'காஞ்சிவாய்' ஆகியிருக்க வேண்டும். காஞ்சி என்றிருக்கிறதே, ஸ்ரீ காமாட்சியம்மன் இருப்பாளோ' என்று சிந்தித்துக் கொண்டே சென்றேன். நினைத்தபடியே அங்கு ஸ்ரீ கைலாசநாதர் ஸ்ரீ காமாட்சி அம்மனுடன் எழுந்தருளியிருந்தார். பூந்தோட்டத்தி லிருத்து கும்பகோணம் செல்லும் பாதையில் புதூரை யடுத்து இக்கிராமத்துக்குப் பாதைத் திரும்புகிறது.

சிவன் கோயில், கிராமத்திலிருந்து சற்று ஒதுங்கித் தென்மேற்கில் வயல்களுக்கிடையே உள்ளது. மேற்குப் பார்த்த சந்நிதி. பின்புறம் பெரிய அல்லிக் குளம் இருக் கிறது. அதை மூங்கில் குளம் என்று அழைக்கிறார்கள். சாலையிலிருந்து ஏழெட்டு அடி தாழ்வாக உள்ளது.

சிறிய கோயில்தான். புல்பூண்டுகளும், செடி கொடி களும் மண்டிக் கிடக்கின்றன. ஸ்ரீ காமாட்சி அம்மனுக்கு நேரே, தெற்கில் நுழைவாயில் உள்ளது. சுவாமி சந்நிதிக்கு எதிரில் மதிற்சுவரில் ஒரு ஜன்னல் வைக்கப்பட்டுள்ளது.

இக்கோயிலில் எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் னர் குடமுழுக்கு நடைபெற்றதாம். பின்னர், 1964-ம் ஆண் டில் திருப்பணி செய்ய ஒரு முயற்சி செய்யப்பட்டது. வசூலான பணத்தில் செங்கற் சூளை போட்டு லட்சத்து இருபதினாயிரம் கற்கள் தயாரிக்கப்பட்டன. ஆனால்,

அதற்கு மேல் பணம் சேராததால் திருப்பணி தொடங்க முடியவில்லை. எனவே, கிராமத்தார் செங்கற்களை விற்று, அந்தப் பணத்தில் சுற்றிலும் புதிதாக மதிற்சுவர் எழுப்பினார்கள். அம்மன் சந்நிதி முன்புள்ள மண்டபம் சீலமாகி எந்த நிமிடமும் விழுந்து விடலாம் என்ற நிலையிலிருந்ததால், அதை இடித்துக் கருங்கல் மேல்தளத்துடன் புது மண்டபம் கட்டினார்கள். இவற்றைத் தவிர திருப்பணி நிறைவேறாமல் அப்படியே நிற்கிறது.

பிராகாரத்தில் விநாயகர், சுப்ரமணியர் சந்நிதிகள் இருக்கின்றன. ஆனால், சிலைகள் இல்லை. விநாயகர் சிலை ஆலயத்துக்குள் எடுத்து வைக்கப்பட்டுள்ளது. சுப்ரமணியர் சிலை கிணற்றுக்குள் இருக்கிறதாம். ஸ்ரீ தட்சிணாமூர்த்தி சிலையும் ஆலயத்துக்குள் வைக்கப்பட்டுள்ளது. ஸ்ரீ சுப்ரமணிய சுவாமி கோயிலுக்குப் பக்கத்தில் ஓர் அழகிய சிவலிங்கம் இருக்கிறது.

"கோயில் ஏன் கிராமத்துக்கு இத்தனை தள்ளியிருக்கிறது?" என்று உடன் வந்த கிட்டப்பாவிடம் கேட்டதற்கு அவர், இந்தக் கோயில் மேற்கேயிருந்த 'புறவாசல்' என்ற கிராமத்தைச் சேர்ந்தது. இப்போது அந்தக் கிராமம் இல்லை. தற்போது அது வயல்வெளியாக உள்ளது. ஓலைக் கொட்டகையில் ஒரு பிள்ளையார் மட்டும் இருக்கிறார்" என்றார். 'புறவாசல்', 'காஞ்சிவாயில்' இரண்டுக்கும் ஒற்றுமை இருக்கிறது. ஆராய்ச்சிக்குரிய சிறப்புக்கள் நிச்சயம் இருக்க வேண்டும்.

இந்தக் கோயிலுக்குப் பத்து மா நிலம் சொத்தாக இருக்கிறதாம். சிவசுவாமி குருக்களே சாகுபடி செய்து, கோயிலுக்கு உரியதை அளித்து வருவதாகக் கேள்விப்பட்டேன்.

கோயிலுக்கு அருகில் ஒரு பெரிய இலுப்ப மரம் இருக்கிறது. அது ஆலயத்துக்குத் தேவையான எண்ணெயை அளித்து வந்தது. அதனடியில் ஒரு பெரிய பொந்து. அதில் யாரோ சிலர் நெருப்பு வைக்க, அது மரத்தினூடே பரவி, கிளைகளெல்லாம் கருகி, இலைகளெல்லாம் கறுத்து இருக்கின்றன. இதைப் பற்றி அவ்வழியே சென்ற மூதாட்டி ஒருவர் கூறி மிக வேதனைப்பட்டார். "சாமீ, இந்த மரம் மறுபடியும் துளுக்குமா?" என்று ஆதங்கத்துடன் அந்த அம்மாள் கேட்டது, அந்தக் காமாட்சியின் காதுகளில் நிச்சயம் விழுந்திருக்கும்!

சிவாலயத்துக்குத் தெற்கே செல்லியம்மன் ஆலயமும், கருப்பு சுவாமியின் ஆலயமும் இருக்கின்றன. வயல் வரப்புகளைத் தாண்டி அங்கு சென்று தரிசனம் செய்தோம். ஸ்ரீ செல்லியம்மன் கோயிலில் சப்த மாதாக்கள் இருக்கிறார்கள். விவசாயி ஒருவர் மிகச் சிரத்தையுடன் பூஜை செய்து வருவதாகக் கூறினார்கள். கிழக்கே பார்த்திருக்கும் கருப்புசுவாமியிடம் ஊர் மக்களுக்குப் பயமும் பக்தியும் அதிகம். ஒரு காலத்தில் அருகிலுள்ள வயலில் இறங்கி வேலை செய்யக் கூட அஞ்சுவார்களாம்.

காஞ்சிவாய் கிராமத்தின் தென்கிழக்கிலுள்ள ஐயனாருக்குக் கல்யாண சாஸ்தா என்று பெயர். மேற்கே பார்த்த கோயில். வடக்கே பள்ளிக்கூடமும் சமுதாயக்கூடமும் இருக்கின்றன. தென்புறம் ஓர் அல்லிக் குளம் இருக்கிறது. கோயிலின் இருபுறங்களிலும் நிறைய பூச்செடிகள் இருக்கின்றன. அத்தனையும் குருக்கள் வளர்த்த செடிகளாம்.

ஸ்ரீ லட்சுமிநாராயணப் பெருமாள் கோயிலில் ராமர், லட்சுமணர், சீதை, அனுமார் உற்சவமூர்த்திகளாக எழுந்தருளியுள்ளனர். ஸ்ரீதேவி, பூதேவியுடன் ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாளும் இருக்கிறார். கோயில் கட்டடத்தில் விரிசல்கள் கண்டுள்ளன.

காஞ்சிவாய் கிராமத்தில் முன்னொரு காலத்தில் பெரிய சிவன் கோயில் ஒன்று இருந்திருக்க வேண்டும் என்று அக் கிராம மக்கள் நம்புகிறார்கள். அதற்கான ஆதாரங்களையும் கூறுகிறார்கள். கிழக்கே உள்ள ஒரு திடலில் ஒரு பெரிய சிவலிங்கம் இருந்ததாகவும், தற்போது லிங்கத்தின் பாணம் காணப்படவில்லையென்றும் சதுரக்கல் மட்டும் இருப்பதாகவும் கூறிய கிட்டப்பா, அந்த இடத்துக்கு அழைத்துச் சென்று காட்டினார். சில வருடங்களுக்கு முன் இந்தக் கல் அருகிலுள்ள ஒரு கொல்லையில் இருந்ததாம். அவ்வழியே சென்ற சில விவசாயிகளை விசாரித்தபோது, முன்பிருந்த கோயிலை பற்றித் தங்களுக்கு எதுவும் தெரியாது என்றும், தற்போது இந்தக் கல் நெல்கட்டு அடிக்கச் சௌகரியமாயுள்ளது என்றும் கூறினார்கள். அருகில் இருக்கும் வயல் ஒன்றை இன்றைக்கும் 'குளம்' என்று அழைப்பதால், அது முன்பு கோயிலைச் சேர்ந்த குளமாக இருந்திருக்கலாம் என்றும் நம்பப்படுகிறது. அந்தப் பகுதியை அகழ்ந்து பார்த்தால் அங்கு முன்பு ஒரு கோயில் இருந்தற்கான அடையாளச் சின்னங்கள் தென்படலாம்.

அக்ரகாரத்தில் நின்று கொண்டு நேர் மேற்கே பார்த்தால் குளத்தங்கரையில் ஒரு சிறு பிள்ளையார் கோயில் கண்ணில் படும். அந்தக் குளத்துக்கு 'மூங்கில் குளம்' என்று பெயர். 'வம்சமூலத்தீர்த்தம்' என்றும் கூறுவார்கள். முன்பு அந்தப் பிள்ளையார், ஸ்ரீ லட்சுமிநாராயணப் பெருமாள் கோயிலுக்குப் பக்கத்தில் இருந்தாராம். அந்தப் பிள்ளையார் கோயில் இருந்த இடத்தில்தான், அடுத்த கிராமமான பேராவூரில் தற்போது கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீ காமாட்சி மாரியம்மான் இருந்தாளாம். பின்னர் அம்மன், பேராவூருக்கு இடம் பெயர்ந்து சென்றதன் காரணம் தெரியவில்லை. பல வருடங்களுக்கு முன், சில நாட்களில் அம்மன் சிலையைக்

காஞ்சிவாய்க்குக் கொண்டு வந்து ஒவ்வொரு வீட்டுத் திண்ணையிலும் வைத்து, நைவேத்திய பூஜைகள் செய்து, உடுக்கு அடித்துப் பாட்டு பாடுவது வழக்கமாம். அச் சமயம் பக்தர்கள் உணர்ச்சிவசப்பட்டுக் கண்ணீர் சொரி வார்களாம். காஞ்சிவாய் கிராமத்தைச் சேர்ந்த பல குடும்பங்களுக்குக் காமாட்சியம்மன் இன்று குல தெய்வ மாக விளங்குவதற்கு இந்தத் தொடர்பே காரணம் என்று அறிந்தேன்.

காஞ்சிவாய்க்கும் பேராவூருக்கும் இடையே உள் ளது ஆறு இல்லையாம். அது கும்பகோணத்திலி ருந்து வரும் வடிகால் ஆனதால் வண்டலாறு என்று அழைக்கப்பட்டதாம். பின்னர் எப்படியோ நண்டலாறு ஆகிவிட்டதாம். அதை 'பூவுருட்டி' என்றும் அழைக் கிறார்கள்.

கிராமத்தாரிடமிருந்து விடைபெற்றுக் கொண்டிருக் கும் போது நாலைந்து இளைஞர்கள் வந்து, "எங்க பிள்ளையார் கோயிலைப் பார்த்துட்டுப் போங்க சார்!" என்று அன்புடன் அழைத்தார்கள். அவர்களுடைய உற்சாகமும் ஆர்வமும் பணிவும் அன்பும் என்னை மிக வும் கவர்ந்தன.

"உங்கள் கோயில் எங்கே இருக்கிறது?"

"குடியானவத் தெருவுலேங்க."

"முன்னால் போங்க. பின்னாலேயே வருகிறேன்" என்று நான் கூறியதும் அவர்களுடைய மகிழ்ச்சிக்கு எல்லையேயில்லை! ஓடினார்கள். ஆத்திக உள்ளமும் இறைப்பற்றும் நம் இளைஞர்களிடம்தான் எத்தனை வேகமாகப் பரவிக் கொண்டிருக்கின்றன.

ஸ்ரீ சித்தி விநாயகர் சிறிய உருவில் அந்தக் கோயிலில் உறைகின்றார். கிழக்கு நோக்கி அமர்ந்திருக்கிறார். பக் கத்தில் ஒரு குளம் இருக்கிறது. கோயிலுக்கு எதிரில் ஓர் அரசமரமும் அதனடியில் நாகப்பிரதிஷ்டையும் உள்ளன

அங்குள்ளபடி இளைஞர்கள் அக்கோயிலைச் சிறப்புடன் பராமரிப்பதில் துடிப்புடன் இருக்கிறார்கள். ஆனந்தன் பி.எஸ்.ஸி. அக்கோயிலின் தனிச் சிறப்பைச் சுட்டிக் காட்டினார். கருவறையின் மீது வன்னிமரத்தின் அடர்ந்த கிளையொன்று படர்ந்திருக்கின்றது. மழைக் காலத்தில் அதிலிருந்து கொட்டும் நீர் கலசத்தின் மீது அபிஷேகம் செய்யும் காட்சி வேறு எங்கும் காணமுடியாத அபூர்வ காட்சியென்று பெருமையுடனும் பெருமிதத்துடனும் கூறினார் அவர். கூடியிருந்த அத்தனை பேருமே அதை ஆனத்தத்துடன் ஆமோதித்தார்கள். ஆலய வழிபாட்டுக்கும் பக்தி இலக்கியத்திற்கும் வலுவும் பொலிவும் ஊட்டும். இம்மாதிரியான இளைஞர் படை பல்கிப் பெருகட்டும் என்ற பிரார்த்தனையோடு காஞ்சிவாய் கிராமத்திலிருந்து புறப்பட்டோம்.

# பாலையூர்

அடுத்து, குடந்தை பூந்தோட்டம் பஸ் பாதையிலிருந்து காஞ்சிவாய்க்குத் திரும்பும் இடத்திலிருந்து நான்காவது கிலோ மீட்டரில் இருக்கும் பாலையூர் கிராமத்துக்குச் சென்றோம். தஞ்சை மாவட்டத்திலுள்ள மிகப் பழமையான கிராமங்களில் இதுவும் ஒன்று. வடக்கில் நச்சினார்குடி, தெற்கில் நாகம்பாடி, கிழக்கில் ஸ்ரீகண்டபுரம், மேற்கில் கோடிமங்கலம் சூழ, பாலையூர் நடுநாயகமாக விளங்குகிறது.

ஊருக்கு நடுநாயகமாக ஸ்ரீ லட்சுமி நாராயணப் பெருமாள் மூலவராக எழுந்தருளியுள்ளார். சீதா, லட்சுமண, அனுமத் சமேத ஸ்ரீ கோதண்டராமனை விட்டுப் பிரியவே மனம் வரவில்லை. ஸ்ரீ ஆஞ்சநேயருக்குத் தனியே ஒரு சந்நிதி இருக்கிறது. சிந்தையைக் கவரும் சிறிய வடிவம்.

இங்குள்ள ஸ்ரீ கைலாசநாதர் - காமாட்சியம்மன் ஆலயம் மிகப் பரிதாபமான நிலையிலுள்ளது. இடிபாடுகளுக்கிடையே மரம், செடி கொடிகள், முட்புதர்கள் மண்டியுள்ளன. பெரிய பாம்புப் புற்று ஒன்றும் இருக்கிறது. கோயிலிலுள்ள விக்ரகங்களைப் பக்கத்திலுள்ள ஓர் ஓட்டுக் கட்டடத்தில் வைத்திருக்கிறார்கள். அங்கு பெரிய விநாயகர், தட்சிணாமூர்த்தி, சண்டிகேச்வரர், ஆறுமுகர் அனைத்துச் சிலைகளும் உள்ளன. துர்க்கை சிலை காணப்படவில்லை. சூரியன் சிலையோ, சந்திரன் சிலையோ ஏதோ ஒன்று மரத்தடியில் கிடக்கிறது. ஒரு மகரிஷியின் சிலை இரண்டாக உடைந்து கொட்டகையில் இருக்கிறது.

இங்குள்ள ஐயனார் குளம் எக்காலத்திலும் வற்றுவதேயில்லையாம். இங்கு பிள்ளையாருக்குத் தனியாகக் கோயில் இல்லையென்றும், ஒன்று கட்டப்பட்டு பாதி முடிந்த நிலையில் உள்ளது என்றும் அறிந்தோம். பாலையூரில் மாரியம்மன், பிடாரியம்மன், காளியம்மன், ஐயனார் முதலிய கிராம தேவதைகளின் கோயில்களும் இருக்கின்றன.

# செதலப்பதி

மயிலாடுதுறை - திருவாரூர் பாதையில், பூந்தோட்டத்துக்கு ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது, திலதர்ப்பணபுரி என்ற திருத்தலம். ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருமானது தேவாரம் பெற்ற தலம். அதற்குத் திருத்திலதைப்பதி என்ற பெயரும் உண்டு. தற்போது அது 'கோவில்பத்து' என்றழைக்கப்படுகிறது. அரிசொல் ஆற்றின் தென்கரையில் உள்ளது. இது திருவீழிமிழலைக்கு ஐந்து மைல் கிழக்கே இருக்கிறது.

திலதைப்பதியைச் சேர்ந்த கிராமம், செதலப்பதியாகி விட்டிருக்கிறது. கூத்தனூர் ஸ்ரீ சரஸ்வதி கோயிலுக்குச் சற்று வடக்கே, பாதைக்கு அப்புறம் இருக்கிறது இக்கிராமம்.

இக்கிராமத்திலுள்ள சிவன்கோயிலில் ஸ்ரீசோமேச்வரர் ஸ்ரீ பத்மாவதியுடன் எழுந்தருளியுள்ளார். சிறிய லிங்கம்' சிறிய அம்மன். இச்சிறிய கோயில் நன்கு பராமரிக்கப் பட்டு ஒளியுடன் திகழ்கிறது. ஆலயத்தினுள் நந்தவனமும் இருக்கிறது. நாங்கள் சென்றிருந்தபோது நந்தியாவட்டை, செம்பருத்தி மலர்கள் பூத்துக் குலுங்கியிருந்தன. சனீச்வர னுக்குத் தனிச் சந்நிதியுள்ளது. 1976 – ம் ஆண்டு கும்பாபி ஷேகம் நடந்திருக்கிறது.

கிராமத்தினுள் நுழையும்போதே ஸ்ரீ தேவி, பூதேவி சமேத ஸ்ரீ சௌந்தரராஜப் பெருமாள் கோயில் கொண்டு உள்ளார். சாதாரணமாக, கிராமக் கோயில்கள், அதிலும் பெருமாள் கோயில் என்றால் மிகவும் பாழடைந்துதானி ருக்கும். ஆனால், செதலப்பதி கிராமத்திலுள்ள பெருமாள் கோயிலைப் பார்த்தபோது அதிசயமாகவும், ஆனந்தமாக வும் இருந்தது. எல்லாக் கிராமங்களிலும், செதலப்பதி சிவன், பெருமாள் கோயில்களைப் போல் 'பளிச்' சென்று இருக்கக் கூடாதா என்று நினைத்தோம்.

செதலப்பதி கிராமத்திலிருந்து சற்றுத் தொலைவில் பஸ் பாதையின் தென்புறம் ஒரு சின்ன அனுமார் நின்ற திருக்கோலத்தில் அருள் வழங்கிக் கொண்டிருக்கிறார். கூத்தனூர் கிராமத்தில், அனைவருக்கும் உற்ற நண்பனாக வும் அருமைத் தோழனாகவும் பழகிய குரங்கு ஒன்று 1940-ம் ஆண்டில் இறந்தபோது, அதை இந்த இடத்தில் முறையாக அடக்கம் செய்து, அதன்மீது இக்கோயிலைக் கட்டியதாகக் கூறினார்கள். ஏழெட்டு வருடங்களுக்கு முன் விமரிசையாகக் குடமுழுக்கும் செய்திருக்கிறார்கள்.

இம்மாதிரி கிராம மக்களுடன் சாதுவாகப் பழகி உயிர் துறந்த ஒரு குரங்கைப் பற்றி முன்பு விஷ்ணுபுரத்தில் கூடக் கேள்விப்பட்டோம். அதை அடக்கம் செய்த இடத்திலும் ஓர் ஆஞ்சநேயர் கோயில் எழுப்ப முயற்சி கள் நடைபெற்று வரும் செய்தியையும் அறிந்தோம்.

செலப்பதி கிராமத்தில் விநாயகர் கோயில் இல்லாத குறை விரைவிலேயே நீங்க வேண்டும் என்று பிரார்த்திக் கிறேன்.

இந்தக் கிராமத்திலுள்ள காளியம்மன் கோயில் நல்ல நிலையில் இல்லை, பிளவுபட்டுப் பாழடைந்த நிலையில் இருக்கிறது. கோவில்பத்து சிலாலயத்துக்குச் செல்லும் வழியில் சீதளாதேவி மாரியம்மன் கோயில் இருக்கிறது அம் மகாமாரியம்மன், அருட்சக்தியோடு பக்தர்களைக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறாள். பங்குனி மாதம் பத்து நாள் உற்சவம் நடைபெறுகிறது. தீமிதி, லட்சார்ச்சனை எல்லாம் உண்டு.

அம்மனின் இரண்டு உற்சவமூர்த்திகளைக் கண் டோம். விசாரித்தபோது, ஒன்று பம்பாய் செல்லவிருக் கிறது என்றும், அங்கு கல்யாணமுத்துமாரி என்ற பெயரில் திருக்கோயில் ஒன்று உருவாகப் போகிறதென்றும் அறிந் தோம். காத்தவராயன், பேச்சியம்மன் சிலைகளும் உள்ளன துர்க்கையம்மன் என்று எழுதி, ஒரு சூலம் இருக்கிறது. வாகனங்கள் இருக்கின்றன. காளயுக்தி வருஷம் (15-9-78) அன்று கும்பாபிஷேகம் நடைபெற்றி ருக்கிறது. அதற்கு முன் 1957-ம் வருஷம் ஒரு முறை குடமுழுக்கு நடைபெற்றதாம்; ஸ்ரீ பரமேச்வர சிவாசாரி யார் அக்கறையோடும் பக்தியோடும் அம்மனுக்கு அபிஷேக, ஆராதனை, அர்ச்சனைகள் செய்து வருகிறார்.

அம்மன் தன் சக்தியாலும் லீலா விநோதங்களாலும் கிராம மக்களின் உள்ளங்களை மாற்றி, தனது கோயிலைப் புதுப்பித்துக் கொண்ட அதிசயத்தைப் பற்றியும், வெளி

பூர்களிலுள்ள பக்தர்களுக்கும் தன் அருட் கருணையினால் அனைத்து நலன்களும் நல்கி வரும் அற்புதங்களைப் பற்றியும் மக்கள் சொல்லிச் சொல்லி மகிழ்ச்சியில் பூரித்துப் போகிறார்கள். ஸ்ரீ சீதளாதேவியின் அற்புத லீலைகளை ஆலயத்திலுள்ள ஒரு கல்லிலும் வடித்து வைத்துள்ளார்கள்.

சீதளாதேவியம்மன் ஆலயத்திலிருந்து, மேற்கே 'கோவில்பத்து' என்ற இடத்திலுள்ள ஸ்ரீ மந்தாரவனேச்வரர் ஆலயத்துக்குச் சென்றோம். இதன் தல வரலாற்றை முதலில் அறிந்து கொள்வோம்.

கைலாயத்தில் சிவநடனத்தைக் காணச் சென்ற பிரும்மா, அபசாரமொன்றுக்கு ஆளாகி, அதன் பிராயச்சித்தமாக, பொன்னி நதிக் கரையிலுள்ள மந்தார வனத்தில் உறையும் சிவபெருமானை வழிபடுவதற்காகப் பூலோகம் வந்து சேர்ந்தார். மந்தார மரத்தின்கீழ் விளங்கும் சிவலிங்கத்தைக் கண்டு, கரங்களைக் கூப்பி கீழே விழுந்து வணங்கி, அவரைப் பூஜை செய்யும் பொருட்டு, பாணபாத தீர்த்தத்தில் சரஸ்வதி தேவியோடு மூழ்கி எழுந்து, அக்னி திக்கில் தன் பெயரால் ஒரு தீர்த்தத்தை ஏற்படுத்தினார். பின்னர், முறைப்படி சிவ பூஜை செய்தார். சிவலிங்கத்தினின்று பெருமான் வெளிப்பட்டு, 'வேண்டும் வரம் கேள் தருகிறேன்' என்று கூற, என் பிழை பொறுத்து இரங்கிச் சாத்வீகக் குணம் நல்கி 'பிரம வாழ்க்கையும், நான் செய்த பூஜைப் பயனும் தருதல் வேண்டும்' என்றார்.

'அப்படியே ஆகுக' என்றார் ஸ்ரீ மந்தாரவனேச்வரர்.

அது மட்டுமல்ல: 'இத்தலத்தில் ரோகிணி நட்சத்திரத்தன்று பக்தியோடு பிரும்ம தீர்த்தத்தில் மூழ்கிச் சிவலிங்க பூஜை செய்வோர், மனைவி மக்கள் சுற்றம் சூழ இரு நிதி பெற்றுப் பூமியில் வாழ்ந்து மறுமையில் நின் திருவடியை அடைதல் வேண்டும்' என்றும் பிரார்த்தித்தார்.

சிவபெருமானும், 'நீ செய்த பூஜைக்கு மிகவும் உவந் தோம். நீ கேட்ட வரமெல்லாம் தந்தோம்' என்று திரு வாய்மலர்ந்தருளி அந்தச் சிவலிங்கத்திற்குள் மறைந் தருளினார்.

பிரும்மதேவரும் பரம சந்தோஷத்துடன் பிரமலோகம் ஏகினார்.

வாலகில்லியர், பூலோகவாசிகள், வாமனர்கள், சத்தியவான்கள். இவர்களைப் பார்த்தால் யாருக்குமே சிரிப்பு வரும்.

இவர்கள் தாங்கள் செய்யவிருக்கும் யாகத்தைக் காப் பதற்காக மகாவிஷ்ணுவிடம் விண்ணப்பம் செய்ய வை குந்தம் சென்ற போது, இவர்களது வடிவத்தைக் கண்டு மகாலட்சுமி கேலியாகச் சிரித்து விட்டாள். தங்களை இகழ்ந்தவள் வைகுண்டத்தில் இருக்கத் தகுதியற்றவள் என்றும், உடனே பூலோகத்துக்குச் செல்லவேண்டும் என்றும் வாலகில்லியர் சாபம் இட்டனர். ஸ்ரீமந் நாராயணனும் அவ்வாறே கூறினார். ஆனால், இலக்குமி இல்லாத வைகுந்தத்திலிருந்து மகாவிஷ்ணு ஒன்றும் செய்ய முடியாது என்பதால், அவரையும் பூலோகம் சென்று சிவபூஜை செய்யும்படி பணித்தனர் வாலகில்லியர்.

அவ்வாறே மகாவிஷ்ணுவும் மகாலட்சுமியும் பாரதப் புண்ணிய பூமியெங்கும் முக்கண்ணனைத் தரிசித்து, இறுதியில் மந்தாரவனம் வந்து சேர்ந்தனர். அவர்கள் செய்த பூஜைகள் குறித்து மகிழ்ச்சியுற்ற சிவபெருமான், ''மாயனே, நீ செய்த பூஜைக்கு மகிழ்ந்தோம். இலக்குமி யின் பாவம் இன்றோடு நீங்கியது" என்று கூறியருளி மறைந்தார்.

ஸ்ரீ வைகுந்தவாசன், வைகாசி மாதம் மந்தாரவனேச் வரருக்குத் தெற்கில் தன் பெயரால் மாதவ லிங்கத்தைப்

பிரதிஷ்டை செய்து வழிபாடு செய்து, மேற்குத் திக்கில் சக்கர தீர்த்தத்தை ஏற்படுத்தி, மேலுலகம் சென்றார்.

வைகாசி மாதம் முப்பது நாட்களும் சக்கர தீர்த்தத்தில் நீராடி சிவனை வழிபடுபவர் நற்கதியடைவர்.

திருத்திலதைப் புராணச் சிறப்புகளைப் பற்றி மேலும் கூறும்படி சௌனகர் முதலான முனிவர்கள் கேட்க, சூதபுராணிகர் தொடர்கிறார்.

தக்கன் செய்த யாகத்துக்கு அழைப்பின்றி சென்ற தாட்சாயணி, தந்தையால் அவமானப்படுத்தப்பட்டுக் கோபத்துடன் திரும்பினாள். ஆனால், கணவனிடம் செல்லாமல் இமயமலைக்குச் சென்று தவம் செய்தாள். வீரபத்திரரைக் கொண்டு தட்சனின் வேள்வியை சிவபெருமான் அழித்த பின்னர், மீண்டும் அவரை அடைந்தாள். சிறிது காலம் சென்றது. இறைவன் திருவிளையாடல் ஒன்று புரியத் திருவுளம் கொண்டான். மலையரசன் மகளாகத் தன்னை மணந்து கொண்டாலும், அம்பிகை, தந்தை மீது வைத்த பாசத்தால் அவன் செய்த வேள்வியைக் காணச் சென்றதால் பெரும் பாவத்துக்கு ஆளானாள் அல்லவா? 'அப் பாவம் அகல உத்தம தலம் ஒன்றுக்குச் சென்று எம்மைப் பூஜை செய்வாயாக' என்று தேவியைப் பணித்தார். "திருவீழிமிழலைக்குத் தெற்கே ஐந்து மைல், தொலைவில் மந்தார மரத்தை நாட்டி அத்தருவின் அடியில் அமர்ந்து தியான யோகம் செய். அதன் பலனாக சிவலிங்கம் ஒன்று தோன்றும். அதற்கு நீ செய்யும் பூஜையைக் கண்டு நாம் அருள்புரிவோம்" என்று பணித்தார்.

அவ்வாறே திருத்திலதைப்பதிக்கு அம்பிகை சென்று தவமியற்றி, அதன் பலனாக மந்திரத் தருவின் மூலத்தில் முளைத்தெழுந்த சிவலிங்கத்தை ஆகம விதிப்படி பூஜை செய்து தாட்சாயணி என்ற பெயரை மாற்றி, பெருமானுடைய வாமபாகத்தில் பார்வதியாகப் பெருமையுடன் வீற்றிருந்தாள்.

**மற்றொரு சிறப்பு:**

ஒரு சமயம், ஆலயத்தில் பூஜை செய்யும் ஆதிசைவர் அர்த்தஜாம பூஜையை முடித்துக் கொண்டு தனது இல்லம் சேர்ந்தார். அப்போது வயதான அந்தணர் ஒருவர் மழையில் நனைந்து, குளிரில் நடுங்கிக் கொண்டு பசிக்கு அன்னம் வேண்டி வந்து நின்றார்.

நடுநிசியில் வந்த விருந்தினரைக் கண்டு மனமிரங்கி, மாற்று உடை தந்து, அமரச் செய்து அன்புடன் அமுது படைத்து ஆனந்தமடைந்தார் ஆதிசைவர். வயோதிகரின் பசி நீங்கியதும் அகில உலகமும் பசி நீங்கி மகிழ்ந்தது. உண்மைதான். சாட்சாத் மந்தாரவனநாதர் அல்லவா அந்தணர் உருவில் வந்திருந்தார்!

இத்தலத்துக்கு இன்னொரு மகிமையும் உண்டு.

கோதாவரி நதி தீரத்தில் போகவதி என்ற பட்டணத்தைத் தேவவர்மன் ஆண்டு வந்தான். சிவபக்திமிக்கவன் புண்ணிய நாட்கள் தோறும் நிறைய தான தருமங்கள் செய்வான். வயதானதும், அரசுரிமையைத் தன் மூத்த மகன் கஜ்ஜோதியிடம் (நற்சோதி) ஒப்படைத்துவிட்டு, மனைவி தருமசீலையுடன் வனம் சென்று தவம் செய்து பின்னர் உயிர் நீத்தான். தருமசீலையும் உடன்கட்டை ஏறினாள்.

பெற்றோரின் ஈமச்சடங்குகளை முறைப்படி முடித்து வைத்தான் நற்சோதி. பின்னர், நாரதமுனிவரின் கட்டளைப்படி, திலநீர் பிண்டதானத்தைப் பித்ருக்கள் நேரே வந்து பெற்றுக் கொள்ளும் தலத்தைத் தேடி, குல குருவின் ஆசியைப் பெற்று யாத்திரை புறப்பட்டான்.

பாரதமெங்குமுள்ள புண்ணியத் தலங்களையெல்லாம் தரிசித்துவிட்டு, காவேரிக்கரையை அடைந்தான். பல தலங்களை வழிபட்டு, பித்ருக்களுக்கு எள்ளும் தண்ணியும் விட்டு இறுதியாகத் திருத்திலதைப்பதியை

அடைந்தான். அங்கு உருத்திராட்சம் பூண்டு, விபூதி யணிந்து பரமேச்வரனைப்போல் காட்சியளித்த காலவ முனிவரைப் பணிந்தான். முனிவர், அரசனை ஆலயத்தி னுள் அழைத்துச் சென்று மந்தாரநாதரையும் சுவர்ண வல்லி என்ற பொற்கொடி நாயகியையும் தரிசனம் செய்து வைத்தார். பின்னர், நற்சோதி அரசன் பிரம தீர்த்தம், தேவ தீர்த்தம், சக்கர தீர்த்தம், மார்த்தாண்ட தீர்த்தம் முதலியவற்றில் விதிப்படி மூழ்கி, பின் திலதைப்பதி தீர்த் தத்தில் மூழ்கி நித்திய நியமங்களை முடித்து, தென்புலத் தாருக்கும் திலதர்ப்பணம் செய்து, தேவகாரியம் பலவும் செய்தான். எல்லாவகையான தானங்களும் செய்தான்.

பின்னர், அடுத்த அமாவாசையன்று அதிகாலையில் அரிசிலாற்றிலும் பின்னர், தேவதீர்த்தம் முதலிய தீர்த்தங் களிலும் நீராடி, சிவபூஜை முடித்து, நடுப்பகலில் பிரம தீர்த்தக் கரையை அடைந்தான். அப்போது அவன் கண்ட காட்சி அவனை மெய்சிலிர்க்க வைத்தது.

திருக்குளத்தைச்சுற்றிலும் தேவர்களின் பித்ருக்களும், மறைந்த தன்னுடைய முதாதையர்களும் நிற்கக் கண்ட அரசன் அளவற்ற மகிழ்ச்சியடைந்து பிரமதீர்த்தத்தில் நீராடி, புரோகிதர் கூறியவாறு சங்கற்பம் செய்து, தில தர்ப்பணம்,பிண்டம் முதலியவற்றை ஈந்தான். பித்ருக்கள் தமது கரங்களால் அதைப் பெற்று யாவரும் காணும்படி உண்டனர். பின்னர், நற்சோதிக்குப் பல வரங்கள் ஈந்து, மன்னனை வாழ்த்திவிட்டுச் சென்றனர். அதன் பிறகு இத்தலம் திலதர்ப்பணபுரி என்று வழங்கலாயிற்று.

நற்சோதி மகாராஜவிடமிருந்து பித்ருக்கள் திலதர்ப் பணம், பிண்டதானம் பெற்றுச் சென்ற பிரம தீர்த்தத்தை காண்பதே புண்ணியமாகும். மார்கழி மாதத்தில் நாள் தோறும் விடியற்காலையில் பிரமமந்திரத்தைச் சொல்லிப் பிரமதீர்த்தத்தில் நீராடுபவர்கள் பெரும்பேறையடை வார்கள் என்று புராணத்தின் தீர்த்த படலத்தில் கூறப் பட்டுள்ளது.

பூதலத்தில் மந்தாரவனம்போல் தலம் வேறு இல்லை. தேவரும் துன்பம் வந்தபோது இங்கே வந்து வாசம் செய்தும் மந்தாரநாயகரைப் பூஜை செய்தும் துன்பம் நீங்கித் தமது உலகம் செல்வர். இவ்வாறு தலபுராணம் கூறுகிறது.

ஸ்ரீ முக்தீச்வரர் என்ற ஸ்ரீ மந்தாரவனநாதர் ஆலயத்தினுள் ஸ்ரீ தட்சிணாமூர்த்திக்கு மேற்கே நான்கு பாண லிங்கங்கள் காணப்படுகின்றன. அவற்றைப் 'பிதுர் லிங்கம்' என்று கூறுகிறார்கள். இருபுறங்களிலும் இருவர் கை கூப்பியபடி அமர்ந்திருக்கின்றனர். ஒருவர் மட்டும் மீசையுடன் காணப்படுகிறார். அவர் நற்சோதி மகாராஜாவாயிருக்கலாம். ஆனால், ராமர் என்று எழுதப்பட்டுள்ளது. விசாரித்தபோது ஸ்ரீ ராமர் இங்கே ஜடாயுவுக்கும் தசரதருக்கும் தர்ப்பணம் செய்ததாகக் கூறினார்கள் ஆனால், தலபுராணத்தில் அதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை. அடுத்த கும்பாபிஷேகம் நடைபெறும்போது, இந்த சந்நிதியைப் பற்றிய விளக்கத்தைத் தெளிவாக எழுதி வைப்பது பயனுள்ளதாக இருக்கும்.

பிராகாரத்தில் தல விருட்சமான மந்தார மரத்துக்குக் கீழே, ஸ்ரீ மந்தாரவனேச்வரர்லிங்கம் ஒன்று இருக்கக் கண்டோம்.

ஆலயத்துக்கு வெளியே சற்று வடக்கே, மேற்கு நோக்கியவாறு ஆதிவிநாயகர் என்றொரு சந்நிதியிருக்கிறது. பார்த்தால் சாஸ்தா உருவம்போல் இருக்கிறது.

**கோவில்பத்து** ஸ்ரீ மந்தாரவனேச்வரர் ஆலயத்தினுள் நுழைந்தால் அதன் புராதனத் தன்மை தெரிகிறது; பழமையின் மணம் கமழ்கிறது; கவனக்குறைவால் பழுதடைந்துள்ள சூழ்நிலையும் தெரிகிறது. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை ஆலயத்துக்குக் கும்பாபிஷேகம் நடத்த வேண்டும் என்று நம் பெரியவர்கள் வகுத்து

வைத்திருக்கிறார்கள், அப்படியிருக்க, முந்தைய கும்பாபி ஷேகம் நடைபெற்று நாற்பது ஆண்டுகளுக்குமேல் ஆகிறதென்றால் ஆலயத்தின் நிலைமை வேறு எப்படி யிருக்கும்?

1907-ல் தேவக்கோட்டை மெ. லெ. ராம. ராமநாதன் செட்டியாரவர்கள் தொடங்கிய திருப்பணியை அவரது தம்பி, மெ. லெ. லெ. லட்சுமணஞ்செட்டியார் முடித்து வைத்தார். நகரத்தார் திருப்பணியல்லவா? நேர்த்தியான கருங்கல் திருப்பணி நடைபெற்றிருக்கிறது. சுவாமி, அம்மன் கருவறைகள் அடித்தளம் கருங்கல்லாலும், மேல் விமானம் சுதை வேலைப்பாடுகளாகவும் அமைந்திருக் கின்றன. பல சுதைப் பதுமைகள் காலக் கொடுமையால் கரைந்து போயிருக்கின்றன. அவை, பழுதுபார்க்கப்படும் நேரத்துக்காகப் பொறுமையுடன் காத்திருக்கின்றன. சுவாமி சந்நிதிக்கும் அம்மன் சந்நிதிக்கும் முன்னுள்ள கருங்கல் மண்டபங்கள் வேலைப்பாடுகள் நிறைந்தவை. ஆனால், பாதுகாப்பும் பராமரிப்பும் போதவே போதாது.

கோஷ்ட தேவதைகள் அனைத்தும் நல்ல நிலையில் உள்ளன. தட்சிணாமூர்த்தி திருவுருவம் நன்றாகவே இருக்கிறது. துர்க்கையும் அருள் வடிவாகத் திகழ்கிறாள். ஆனால், ஸ்ரீ மூலவிநாயகரும் ஸ்ரீ சண்டிகேச்வரரும் வெளுத்து, வெளிறிப் போயிருக்கிறார்கள். எண்ணெய்க் காக ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள்!

அருணகிரியாரின் திருப்புகழ் பெற்ற சுப்ரமணியர் இருக்கிறார். நாகர்கள் உள்ளனர். மகாலட்சுமி வீற்றிருக் கிறாள். அமைப்பிலும் அழகிலும் ஆலயத்துக்கு ஒரு குறைவுமில்லை.

சிறிய வடிவங்களில் நவக்கிரகங்கள் இருக்கின்றன. நால்வர், பைரவர், சூரியன், சந்திரன் முதலானோர் இருக் கின்றனர். சூரியன், பழமையான சிலை. சந்திரன் சற்றுப்

புதிது போலிருக்கிறது. கிழக்குப் பிராகாரத்தில் ஸ்ரீதேவி, பூதேவியுடன் பெரிய பெருமாள் சிலை ஒன்றிருக்கிறது.

ஸ்ரீ சுவர்ணவல்லி அம்மாள் சந்நிதிக்கு நேரே ஒரு நுழைவாயில் இருக்கிறது. அம்பிகைக்கு நான்கு கரங்கள். ஸ்ரீ முக்தீச்வரர் சுயம்புலிங்கம். தரிசிப்பவர்களுக்கு வீடு பேறு கிடைப்பது உறுதி.

திலதர்ப்பணபுரியாதலால், இங்கு வந்து அகால மரணமடைந்தவர்களுக்காகத் தர்ப்பணம் செய்தால், அவர்கள் சுவர்க்க பதவி பெறுவார்கள்.

திருநாவுக்கரசு நாயனார் திருத்தலக்கோவைத் தாண்டகத்தில் இத்தலத்தை 'மந்தாரம்' என்று குறிப்பிடு கிறார். ஞானசம்பந்தப் பெருமான் ஒரு பதிகம் பாடிப் பெருமை சேர்த்துள்ளார்.

இப்பதிகத்தில் ஒவ்வொரு பாடலும், 'மதிமுத்தமே' என்று முடிகிறது. 'மதிமுத்தம்' என்பது கோயிலின் பெயரைக் குறிக்கிறது என்றும், சந்திரன் பூஜித்துப் பேறு பெற்றதால் இப்பெயர் ஏற்பட்டது என்றும் கூறப்படு கிறது. இதே போன்று, ஐந்தாவது பாடலில், 'புரவியேழும் மணிபூண்டியங்குடிங்கொடித் தேரினான் பரவி நின்று வழிபாடு செய்யும் பரமேட்டியூர்' என்று வரும் அடிகள், சூரியன் வழிபட்டுப் பேறு பெற்றதைக் குறிக்கின்றன.

ஆலயத்துக்கு வெளியே, தென்புறம் ஒரு சிறு கோயில் உள்ளது. அதுதான், இலக்குமியின் சாபம் நீங்கிய பின்னர் மாதவன் பிரதிஷ்டை செய்து வழிபட்ட சிவலிங்கம். அதற்குப் பெயர் ஸ்ரீ மாதவேச்வரர். அந்த சிவலிங்கத்தைத் தரிசித்தவர்களும், மேற்கே பெருமாள் ஏற்படுத்திய தடாகமான சக்கரதீர்த்தத்தில் ஸ்நானம் செய்பவர்களும் போகம், மோட்சம் என்னும் இரு பயனையும் அடைவார்கள் என்று தலபுராணம் கூறுகிறது.

வைகாசி பௌர்ணமியன்று மாதவன் இந்த சிவலிங் கத்தைப் பிரதிஷ்டை செய்தார். அந்நாளில் ஈசனைத்

தரிசித்து வணங்கினால் தன்னை வருத்தும் சாபத்தால் நேர்ந்த துன்பம் நீங்கி அவன் வாழ்வான்.

இவ்வாறெல்லாம் தலபுராணத்தில் சிறப்பிடம் பெற்றுள்ள ஸ்ரீ மாதவேச்வரர் சந்நிதி, தற்போது கவனிப் பாரற்றுக் காட்சி அளிக்கிறது. பத்மபீடத்தோடு உள்ள பெரிய சிவலிங்கம். பக்கத்தில் பழுதடைந்த கிணறு ஒன்று. நந்திகேச்வரர், மருந்தின்றிப் பீடத்துடன் ஒட்டா மல் ஆடிக்கொண்டிருக்கிறார். ஸ்ரீ மந்தாரவனேச்வரர் ஆலயத் திருப்பணி தொடங்கினால், ஸ்ரீ மாதவேச்வரருக் கும் நல்ல காலம் பிறக்குமோ, என்னவோ!

இக்கோயிலுக்கு முன்பாக, நீலோத்பல புஷ்கரணி என்று ஒரு குளம் உள்ளது. அதில் எப்போதோ பூக்கும் நீலோத்பல மலரை சுவாமிக்குச் சாத்துவார்களாம்.

ஸ்ரீ அகோர குருக்கள், ஸ்ரீ மந்தாரவனேச்வரருக்கு நான்கு கால பூஜை நடைபெறுவதாகக் கூறினார். அறங் காவலர் எல். ராமநாதன், திருப்பணி செய்வதில் ஆர்வ முடன் இருக்கிறார்.

புராணப் பெருமைகள் மிகுந்த இக்கோயில், எளிதாகச் சென்றடைய முடியாமல் உள்ளடங்கி ஒதுங்கி யிருக்கிறது. இப்பகுதியில் தலயாத்திரை செய்ய விரும்பு கிறவர்கள், பூந்தோட்டத்திலிருந்து ஒரு மைல் மேற்கே யுள்ள இக்கோயிலைத் தவறாமல் சென்று தரிசித்து வர வேண்டும்.

## கூத்தனூர்

கும்பகோணம் வீரபத்திர பரணிக் கோயிலில் ஒட்டக்கூத்தரை தரிசித்து விட்டு, அவரை ஆட்கொண்ட

ஞானசரஸ்வதியைத் தரிசிப்பதற்காகக் கூத்தனூர் சென்றோம். கும்பகோணம்-காரைக்கால் பாதையில் முப்பத்தைந்தாவது கிலோ மீட்டரில் பூந்தோட்டதையடுத்து உள்ளது கூத்தனூர். நன்னிலத்திலிருந்து எட்டு கிலோ மீட்டர். டவுன் பஸ் போகிறது.

ஒட்டக்கூத்தர் சிவபக்தர் மட்டுமின்றி கலைமகளின் பரமபக்தரும்கூட. நாமகளது பூர்ண கடாட்சம் பெற்றவர். அவர் விக்கிரமச் சோழ மன்னனின் அவையில் தலைமைப் புலவராகவும் ஆஸ்தான பண்டிதராகவும் திகழ்ந்த காலத்தில், வரகவி பாடும் திறன் பெற வேண்டும் என விரும்பினார். அதனால் கலைமகளைக் குறித்துத் தவம் இருக்கத் திருவுளம் கொண்டார். அதற்காக, ஹரிநதி எனும் அரசலாறு தென்புறம் நோக்கிப் பாயும் அரிநாதேசுவரம் என்ற இடத்தைத் தேர்ந்தெடுத்தார்.

அந்நதியில் நீராடி, மகாகணபதியை வணங்கிவிட்டு, மகாசரஸ்வதியைக் குறித்துத் தவம் புரிந்தார். வாணிதேவி அவர் முன் தோன்றினாள். தன் வாய் தாம்பூலத்தைக் கூத்தருக்கு அருளி நல்லாசி வழங்கினாள். அன்று முதல் கூத்தர், முன்னைவிட பேரறிவும் தெளிந்த ஞானமும் பெற்று, வரகவி பாடும் சக்தி பெற்றார். பின்னர், பக்தன் வேண்டிக் கொண்டதற்கிணங்க, ஞான சரஸ்வதி அங்கு திருக்கோயில் கொண்டு, வழிபடுபவர்களின் விருப்பங்களை நிறைவேற்றி வைப்பதாக வாக்குத் தந்துவிட்டு மறைந்தாள்.

கூத்தர் அங்கு தவமிருந்து, சரஸ்வதி தேவியின் அருள் பெற்றதாலும், அவர் விருப்பத்திற்கிணங்க சரஸ்வதி தேவி அங்கு கோயில் கொண்டதாலும் அவ்வூர் கூத்தனூர் ஆயிற்று. கூத்தாடும் விநாயகர் எழுந்தருளியிருப்பதாலும் இப்பெயர் ஏற்பட்டது என்று கூறுவோரும் உண்டு.

தமது தக்கயாகப்பரணி 'வாழ்த்து'ப் பகுதியில் கூத்தனூர் சரஸ்வதியை, 'ஆற்றங்கரை சொற்கிழத்தி வாழியே' என்று ஒட்டக்கூத்தர் கூறியிருப்பது இந்தத் தேவியின் மீது அவருக்குள்ள ஈடுபாட்டைக் காட்டுகிறது. அந்த நூலில், துர்க்கா பரமேச்வரி கலைமகளை நோக்கி திருஞானசம்பந்தரின் கதையைக் கூறும்படி கட்டளையிட்டதாகவும், அவ்வாறே சொல்லிய கலைமகளை தன் அருகில் வீற்றிருக்கும்படி அருளிச் செய்ததாகவும் கூறியிருக்கிறார் ஒட்டக்கூத்தர். தட்சனின் யாகத்தை அழிக்கும் போது வீரபத்திரக் கடவுள் சரஸ்வதியின் நாசியை அரிந்ததாக இதர நூல்களில் காணப்படும் செய்தியை, இவர் தமது தக்கயாகப்பரணியில் கூறாமல் விட்டதும் ஒட்டக்கூத்தரின் கலைமகள் பக்தியையே காட்டுகிறது.

இத்தல வரலாற்றில் மற்றொரு கதையும் உண்டு. புருஷோத்தமன் என்பவருக்குப் படிப்பு வரவில்லை. இதைக் குறித்துப் பெற்றோர் வருந்தினர். அதனால் புருஷோத்தமன் மகாவிஷ்ணுவைக் குறித்துத் தவமியற்றினார். 'கூத்தனூரில் உறையும் ஸ்ரீ சரஸ்வதி தேவியைக் குறித்துத் தவம் செய்' என்று அருளினார் திருமால். அதன் படியே அவர் கடுந்தவம் புரிய, சரஸ்வதி தேவி நவராத்தி விஜயதசமியன்று அவர் முன் தோன்றி கோரிய வரத்தை வழங்கினாள். அன்று முதல் அவருக்குக் கவி பாடும் திறன் கைவரப்பெற்றது. அம்பாளின் மீது பல பாடல்கள் பாடியதால் அவருக்குப் பாரதி என்ற பெயர் ஏற்பட்டது. புருஷோத்தம பாரதி பிறவி ஊமையாய் இருந்தார் என்றும், அம்பாளின் பெருங்கருணையினால் பேச்சுத்திறன் கிடைக்கப் பெற்றுக் கவி பாடுவதில் வல்லவரானார் என்றும் கூறப்படுகிறது.

ஸ்ரீ சரஸ்வதி கோயில் பெரிய மதில்களுடன் அமைந்திருக்கிறது. ஒரே பிராகாரம். தென்மேற்கு மூலையில், மேல்

மதில் சுவர் அருகில் நர்த்தன விநாயகர் எழுந்தருளியிருக்கிறார். இவரை 'முலைப் பிள்ளையார்' என்றும் அழைக்கிறார்கள். விசேஷ தினங்களில் ஊர்ச் சிறுவர்கள் இவருக்கு அபிஷேக ஆராதனைகள் செய்கிறார்கள்.

ஸ்ரீ பிரும்மதேவன் விநாயகரையும் சிவனையும் வழிபட்ட தலம் இது. கர்ப்பக்கிரகத்தில் அம்பாள் ஸ்ரீ சரஸ்வதி தவக்கோலத்துடன் வெள்ளைத் தாமரைப் பூவில் பத்மாசனத்தில் அமர்ந்திருக்கிறாள். மேல் வலக்கையில் ஜபமாலையும், வலக் கீழ்க் கையில் சின்முத்திரையும், இட மேல் கையில் கெண்டியும், இடக் கீழ்க் கையில் புஸ்தகமும் வைத்திருக்கிறாள்.

தியான ஸ்லோகம் கூறுகிறது:

சரஸ்வதீம் சதுர் ஹஸ்தாம்
ஸ்வேத பத்மாசன ஸ்திதாம்.
ஜடா மகுட ஸம் ஹிதாம்.
சுக்லவர்ணாம் பிராம் ஸ்திதாம்
சுக்லயஞோப வீ தாம் ச
முக்தாஹார சுலோசனாம்
வியாக்யானம் அட்ச சூத்ரம்ச
தட்சிணே ச கரத்வஜே
புஸ்தகம்ச கெண்டி காம் சைவ
திரிநேத்ராம் சாருரூபிணிம்
சர்வாபரண பூஷிதாம்
சுப்ரஸன்னாம் சரஸ்வதீம்.

இக்கோயிலில் சரஸ்வதி பூஜையன்று மட்டும் அம்பாள் பாதங்களுக்கு அர்ச்சனை செய்வதற்குப் பக்தர்களுக்கு வாய்ப்பளிக்கப்படுகிறது. கருவறையில் இருக்கும் அம்பாளின் ஸ்ரீபாதம் வெளிமண்டபம் வரை நீண்டிருக்கும்படி அலங்காரம் செய்கிறார்கள். மண்டபத்தில் அமர்ந்தபடியே பக்தர்கள் தாங்களே மலரிட்டு அம்பாளை ஆராதிக்கலாம்.

விஜயதசமியன்றும் மறுநாளும் அம்பாள் புறப்பாடு உண்டு. மேள வாத்தியங்களும் வாண வேடிக்கைகளும் முன்தொடர, அம்பாள் புஷ்பப் பல்லக்கில் பவனி வருவது கண்கொள்ளாக் காட்சியாகும். விஜயதசமியன்று வெளி யூர்களிலிருந்தும் குழந்தைகளை அழைத்து வந்து அம்பாள் சந்நிதியில் வித்தியாப்யாசம் செய்து வைக் கும் வழக்கமும் இருந்து வருகிறது.

1941-ம் ஆண்டில் காஞ்சிப் பெரியவர் ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் இங்கு எழுந்தருளிய போது கும்பாபிஷேகம் செய்து வைத்தார்கள். (2-5-41-விஷுவருஷம் சித்திரை மாதம் வெள்ளிக்கிழமை.)

அச்சமயம் சுவாமிகள் கோயில் கிணற்றடியில் கிடந்த ஒரு பீடத்தைப் பார்க்கிறார். அதில் கல் வெட்டுக்கள் இருந்ததைக் கண்டு, அதை எடுத்துத் தனியே ஓரிடத்தில் வைக்கும்படி கூறுகிறார். உடனேயே அக்கல் அங்கிருந்து அகற்றப்பட்டு அன்று முதல் அது கோயில் பிராகாரத்தில் இருந்து வருகிறது. அதில் 'மலரி உடையார் இந்தக் கவிச் சக்கரவர்த்திகள் பேரனார் கவி பெருமாள் ஆன ஒவ்வாத கூத்தன் சரஸ்வதி தேவியை எழுந்து அருளிவித்தார்' என்று குறிக்கப்பட்டுள்ளது. ஒட்டக்கூத்தர் முதலில் சரஸ் வதியைப் பிரதிஷ்டை செய்திருக்கலாம். பின்னர் அவரது காலத்திலேயே அவரது பேரன் பாட்டனாரின் விருப்பப்படி இக்கோயிலைப் புதுப்பித்துப் பெரிதாகக் கட்டியிருக்கலாம்.

இயற்கையெழில் கொண்ட இந்த ஆற்றங்கரை கிராமத்தில் ஈசானியத்தில் சிவாலயமும் (ஸ்ரீஹரிநாதேச் வரர்—கமலாட்சி) மத்தியில் பெருமாள் கோயிலும் (ஸ்ரீலட்சுமி நாராயணப் பெருமாள்) தென்புறம் ஸ்ரீ சரஸ்வதி ஆலயமும் உள்ளன. சிவாலயத்தில்

துர்க்கையும், பெருமாள் கோயிலில் லட்சுமியும், தனிக் கோயிலில் சரஸ்வதியும் இருக்கிறார்கள். கூத்தனூரில் துர்க்கா, லட்சுமி, சரஸ்வதி மூவரும் எழுந்தருளி யிருப்பது மிகச் சிறப்பாகும். கிராமத்தின் மேற்குக் கோடியில் பல குடும்பங்களுக்குக் குலதெய்வமான ஸ்ரீ ஐயனார், கையில் மலர்ச்செண்டுடன், பாலசாஸ்தா வாக எழுந்தருளியுள்ளார்.

ஸ்ரீ ஞானசரஸ்வதி கோயில் கூத்தனூருக்கே நடு நாயகமாக விளங்குகிறது. அவ்வூரில் நுழைந்ததுமே அம்பாளின் அருட்கடாட்ச விசேஷத்தால் தெய்வீக ஒளி ஒன்று பரவியுள்ளதை உணர முடிகிறது. 'ஆற்றங்கரை சொற்கிழத்தி' அரசோச்சும் அப்புனிதமண்ணில் அமைதி ஊஞ்சலாடுகிறது. தன் கடைக்கண் பார்வையாலே கலை கள் அனைத்தையும் நமக்குப் புகட்டிவிடக் கலைமகள் இருகரம் நீட்டி நம்மை வரவேற்கிறாள். அவளைக்குறித்து தவமியற்றவும், தியானத்தில் ஆழ்ந்து விடவும் மனம் துடிக்கிறது.

தமிழகத்தில் வாணி தேவிக்குத் தனி ஆலயம் உள்ள ஒரே ஊர் கூத்தனூர். கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தருக் குக் கவிபாடும் அருள் வழங்கிய அன்னையைத் தரிசிக்க பல மகான்களும், ஞான தபோதனர்களும் இங்கு வருகை தந்திருக்கிறார்கள். தஞ்சை மாவட்டத்திலேயே பழைய கலாச்சாரத்தையும் பண்டைய பண்புகளையும் நினைவு படுத்திக் கொண்டு, நாகரிகச் சுழலில் அதிகமாகச் சிக்கா மல் தப்பித்து வரும் ஒரு சில கிராமங்களில் கூத்தனூரும் ஒன்றாகும். அங்கு வாழும் மக்களும், எளிமையில் சிறந் தும் எண்ணத்தில் உயர்ந்தும் காணப்படுகிறார்கள். ஊரைச்சுற்றி வரும்போதே நம் உள்ளமும் தூய்மை பெற்று மனம் விசாலமடைகிறது. இந்த உணர்வு எல்லா கிராமங்களிலும் ஏற்பட்டு விடுவதில்லை.

நாங்கள் சென்றிருந்த சமயம், சத்துணவுக்கூடத்தில் பச்சிளங் குழந்தைகள் பசியைப் போக்கிக் கொள்ளப் பொறுமையிழந்த ஆவலோடு காத்துக் கொண்டிருந்த காட்சியையும் காண முடிந்தது. ஞானப் பசியைப்போக்க அங்கு கோயில் கொண்டிருக்கும் ஞான பூரணி, அன்ன பூரணியாகப் பசித்த வயிறுகளுக்கு அமுது படைக்கிறாளோ?

தானங்களில் சிறந்தது அன்னதானம். முதலில் அது படைத்தவனுக்குப் படைக்கப்பட்டு, பின்னர் பசித்தவர்களுக்குப் பகிர்ந்து அளிக்கப்படும்போது அதன் புனிதம் பன்மடங்காகிறது. தானம் யாரால், யாருக்கு அளிக்கப்பட்டாலும், அதை மகேசனின் சொத்தாக நினைத்து வழங்க வேண்டும். அதிலும் முக்கியமாக உயிர் வாழத் தேவையான உணவு, கடவுட் பிரசாதமாக அளிக்கப்பட வேண்டும். இன்று கிராமங்கள் தோறும் இளம் குழந்தைகளுக்கும் ஏழை எளியவருக்கும் இலவசமாக வழங்கப்படும் சத்துணவில், கிராமக் கோயில்களின் பிரசாதங்களும் சிறிதளவு சேர்க்கப்பட்டால், அந்த உணவு கோயில்களிலேயே அளிக்கப்பட்டால், உடல் வளர்ச்சியுடன் உள்ளம் தூய்மை பெறவும் வாய்ப்புக் கிட்டும்.

நம் குழந்தைகள் நல்லமுறையில் வளர வேண்டும், அவர்கள் நோய் நொடியின்றி நல்ல குடிமக்களாக வாழ வேண்டும் என்பதில் கருத்து வேறுபாடுகளுக்கே இடமில்லை. ஆனால், உடல் வளர்ச்சி மட்டும் வளர்ச்சியாகி விடாது. அறிவு வளர்ச்சி மட்டும் முழு மனிதனை உருவாக்கிவிடாது. உடலுடனும் அறிவுடனும் உள்ளமும் செம்மையுற்று பண்பு வளர வேண்டும்; ஒழுக்கம் ஓங்க வேண்டும்; வாழும் நெறிமுறைகளில் நாணயமும் நேர்மையும் பளிச்சிட வேண்டும்.

இத்தகைய ஓர் ஆன்மீகக் கலாச்சாரத்திற்கு வித்திட்டு, பாரதத்தை வாழ வைத்துக் கொண்டிருப்பவை

நம் ஆலயங்கள்தான். இறையுணர்வும் இறை வழிபாடும் நாம் இறந்த பிறகு நற்கதியருளும் மோட்ச சாதனங்கள் அல்ல. அவை நம் தூய வாழ்க்கைக்கு இன்றியமையாத அருட் சாதனங்கள். நம் ஆலயங்கள் சிந்தையைச் செம்மைப்படுத்திக் கொள்ள உதவும் தேசிய மன்றங்கள். நல்ல சிந்தனைகள், உள்ளத்தின் அமைதிக்கான கரு வூலங்கள். சிந்தனையில் தூய்மை குறைந்தால் மன அமைதி குலைந்து போகிறது. நல்லொழுக்கம் குன்றிப் போகிறது. பொருள் பெருகினாலும் நேர்மையும் நாணய மும்குறைகிறது. தூய்மையற்ற சிந்தனையில், தீயச்செயல் கள் விளைகின்றன. நாட்டில் தீமைகள் பெருகுகின்றன. சமுதாயம் அழிவுப் பாதையில் அடியெடுத்து வைக்கிறது.

ஒரு நல்ல குடிமகன் உருவாக வேண்டுமானால், அவனது லட்சியங்கள் உன்னதமானவையாக இருக்க வேண்டும். முன்காலத்தில் ஆன்மீக லட்சியங்களால் உந்தப்பட்ட மக்கள்,நல்வாழ்வு வாழ்ந்ததோடு சமுதாயத் தையே நல்வழியில் நடத்திச் சென்றார்கள். நம் ஆன்மீக லட்சியங்களுக்கு அடிப்படையாக அமைந்தவைதான் நம் ஆலயங்கள். அவை சீர்கேடு அடைய அடையத் தான் நாம் சீர்கேடு அடையத் தொடங்கினோம். அழி வற்ற கடவுளை மறந்ததால்தான் அழியக்கூடிய பொருட் களில் மனத்தைச் செலுத்தத் தொடங்கினோம். பணமும் பதவியும் மனிதனின் லட்சியங்களாகும்போது பண்பும் ஒழுக்கமும் பின்னுக்குத் தங்கி, அவன் நெறிதவறி, நிலை தடுமாறி, குழம்பிக் குலைந்து போகிறான்.

மனித மனத்தில் மாசுபடிந்தால் எந்த முன்னேற்றமும் எள்ளளவும் பயனளிக்கப் போவதில்லை. நல்ல மனிதர் களை உருவாக்குவதில் கவனம் செலுத்தாமல் எத்தனை திட்டங்கள் உருவாக்கினாலும் அவை உருக்குலைந்து தான் போகும். மனிதனை ஒழுக்கப்படுத்துவது ஆட்சியா ளரின் பணியில்லை என்றாலும்,காலம் காலமாக அவனை ஒழுக்கங்களைக் கட்டிக்காத்துக் கொண்டிருந்த நிலை

யங்களை, மன்றங்களை, அமைப்புக்களை, ஆலயங் களை நெறிமுறைகளைக் குலைக்காமல் இருக்கலாம் அல்லவா?

கூத்தனூர் சரஸ்வதி, கல்விக் கண்ணைத் திறந்து கலைஞானத்தை அருளட்டும். அங்குள்ள சத்துணவுக் கூடம் அவ்வூர் ஏழைக் குழந்தைகளின் பசி அகற்றி, நல்ல சிந்தனையை வழங்கட்டும். அவர்கள் நேர்மையும் நாணயமும் மிக்க குடிமக்களாக மலரட்டும். மும்மாரி பொழியட்டும். நாடுசெழிக்கட்டும். நல்லவர்கள் பெருகட் டும். நன்மைகள் சிறக்கட்டும். நானிலம் வாழட்டும்.

கூத்தனூர் ஸ்ரீ சரஸ்வதி கோயிலில் மற்றொரு கல் வெட்டு இருக்கிறது. அதில், 'சுபமஸ்து' ஸ்வஸ்தி ஸ்ரீ சகாப் தம் 1614-ல் பரிதாபி வருஷம் ஆனி மாதம் 14-ம் தேதி கும்பகோணம் இஷ்டகாமடம் ஸ்ரீ புருஷோத்தமபாரதி பாதங்கள், கூத்தனூர் மகாஜனத்தின் பக்தவிஞான சரஸ்வதி தேவிக்கு' கொண்டு குடுத்த பாகம் ஒன்று, என்று காணப்படுகிறது. இது 12-6-1692 தேதியிட்ட கல்வெட்டு.

கலைவாணியின் அருளால் பேச்சுத்திறனும் கவித் திறனும் பெற்ற பாரதி, ஆலயத்திற்காக சொத்துக்கள் வழங்கியிருக்கிறார் என்பது தெரிகிறது. இதிலிருந்து கும்ப கோணத்தில் 'இஷ்டகாமடம்' என்று ஒன்று இருந்திருப்ப தும் தெரிகிறது. (இப்போதும் இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.)

இந்தக் கல்வெட்டின் பக்கவாட்டிலும் சில எழுத்துக் கள் தென்படுகின்றன. கல்வெட்டு ஆராய்ச்சியாளர்கள் தான் இதைப் படித்துச் செல்ல வேண்டும்.

கூத்தனூரிலுள்ள சிவன், பெருமாள் கோயில்களில் பழமையின் சின்னங்கள் இல்லை. நல்லமுறையில் பராம ரிக்கப்பட்டு வரும் சிறிய கோயில்கள். சிவன் கோயிலில் விநாயகர், சுப்ரமணியர், தட்சிணாமூர்த்தி, துர்க்கை

யம்மன், சண்டிகேச்வரர் சந்நிதிகள் உள்ளன. ஸ்ரீபெருமாள் கோயிலில் ஸ்ரீலட்சுமி நாராயணப்பெருமாள் மூலவராகவும், ஸ்ரீ கோதண்டபாணி உற்சவமூர்த்தியாக வும் எழுந்தருளியுள்ளனர்.

கூத்தனூர் ஸ்ரீ சரஸ்வதிக்கு ஒட்டக்கூத்தரின் பேரன் திருக்கோயில் எழுப்பினான் என்பதற்குக் கல்வெட்டு ஆதாரமாயிருப்பது போல், இஞ்சிக்குடி சிவாலயத்தை ஒட்டக்கூத்தரின் மகனார் எழுப்பித்திருக்கலாம் என்று அக்கோயிலிலுள்ள ஒரு கல்வெட்டை ஆதாரம் காட்டி கூறுகிறார், கல்வெட்டு ஆய்வாளர் ஆ. பத்மாவதி எம்.ஏ.

# இஞ்சிக்குடி

**மா**யவரத்திலிருந்து திருவாரூர் செல்லும் பாதையில் பேரளத்தையடுத்துள்ள ஊர் இஞ்சிக்குடி. 'எதிரிலி சோழன்' என்ற சிறப்புப் பெயர் பெற்ற இரண்டாம் ராஜ ராஜனின் பெயரில் அமைந்த ஊர் இது. எதிரிலிசோழ நல்லூர் என்ற சரித்திரப் பெயர் பெற்றது. பதின்மூன்றாம் நூற்றாண்டுக்குப் பின்னரே இதற்கு இஞ்சிக்குடி என்ற பெயர் ஏற்பட்டுள்ளது.

இங்குள்ளது ஸ்ரீ பார்வதீசுரமுடையார் கோயில். சுவாமி பார்வதீச்வரர், அம்பிகை, சாந்தநாயகி. அம்மன் சந்நிதிக்கு எதிரில் 'கங்கா தீர்த்தம்' என்ற ஒரு கிணறு, அதன் தென்புறம், கால் கிணற்றை மூடியவாறு ஒரு கல். அதில் உள்ள எழுத்துக்கள்தான், ஒட்டக் கூத்தரின் மகனாரைப் பற்றிக் குறிப்பிடுகின்றன.

கி. பி. 12-ம் நூற்றாண்டைச் சேர்ந்த அந்தக் கல் வெட்டு,

'ஓ (வாத) கூத்தரான கவிச் சக்ரவர்த்திகள் மகனார் திருக்கற்றளியும் திருமதிலும் எடுத்து ஊர்க்கீழ் இறையிலி யாக நிலமும் அளித்து திருச்சூலக் கல்லும் நட்ட' செய்தி யைக் கூறுகிறதாம். '(ஓ) வாத கூத்தரான கவிச்சக்ரவர்த் திகள் மகனார் எதிரிலிசோழ...' என்ற பகுதி மட்டுமே முதல் வரியில் காணப்படுவதாகக்கூறும் ஆ. பத்மாவதி, இதையும், மற்றொரு கல்வெட்டில், 'எதிரிலிசோழ நல்லூர் உடையார் ஸ்ரீ பார்வதீசுவர முடையார்' என்ற தொடரை யும் இணைத்து, எதிரிலிசோழநல்லூரில் உள்ள பார்வதீ சுரமுடையார் கோயில் ஓவாத கூத்தரான கவிச் சக்ரவர்த் திகள் மகனார் கட்டியது என்பதில் சந்தேகமில்லை என்று உறுதியாகக் கூறுகிறார்.

இஞ்சிக்குடிக்குக் கிழக்கே கொற்றங்குடிக்கரைக் கிராமமும், மேற்கே மகாராஜபுரம் கிராமமும் (தஞ்சை மாவட்டத்தில் எத்தனையோ மகாராஜபுரங்கள்!) தெற்கே திருமாகாள வாய்க்காலும், வடக்கே சிற்றாம்பூர், பேரளம் ஆகிய ஊர்களும் எல்லைகளாக அமைந்துள்ளன. இஞ்சிக் குடிக்கு வடக்கே உள்ள ஆறு, அரிசிலாற்றின் கிளையான நூலாறு ஆகும். இப்பகுதியினுள்ள நிலங்கட்கு நூலாற்றுப் பாசனமே வளம் கூட்டி செழிக்கச் செய்கிறது.

புராண காலத்தில் இது சந்தனக் காடாக இருந்ததால் கந்தவனமென்றும், அம்பிகை அருள் நிறைந்த உருவில் தவக் கோலத்தில் அமர்ந்திருப்பதால் சாந்திவனம் என்றும் பெயர் பெற்றது.

ஸ்ரீ பார்வதீச்வரர் கோயில் ஊரின் நடு நாயகமாக விளங்க, தென் மேற்கில் பழமையான ஐயனார் கோயி லும், வடக்கில் பிடாரி கோயிலும், மேற்கில் ஸ்ரீ ஆதிகேச வப்பெருமாள் கோயிலும் அமைந்திருக்கின்றன. அருண

கிரியார் இத்தலத்தைக் குறித்துத் தமது திருப்புகழில் 'குங்கும கற்பூர' என்று தொடங்கும் பாடலால் சிறப்பித்துள்ளார்.

பார்வதீச்வரர், வேடன் ஒருவனுக்குச் சிவராத்திரியன்று இடபவாகன மூர்த்தியாகக் காட்சி தந்தருளினார். அக் காட்சியை, கருவறை வெளிகோஷ்டத்தில் காணலாம். காட்சி தந்த நாயனாருக்கு எதிரில் கூப்பிய கரங்களுடன் வேடுவர் ஒருவர் நிற்கிறார்.

அம்பரன் என்ற அசுரனைக் கொன்ற அம்பாள், இங்கு சாந்தநாயகியாக அமர்ந்து, சிவபெருமானைக் குறித்துத் தவமியற்றிக் கொண்டிருக்கிறாள். ஏன்?

அம்பரனைக் கொன்ற பிறகும் ஆத்திரம் அடங்காமல் நின்ற காளியை, சாந்தி பெற்று சிவபெருமானின் இடப்பாகத்தை மீண்டும் அடையும்படி வேண்டினார் திருமால். அவர் விருப்பப்படியே, அம்பிகை காளி வடிவை நீத்து நந்தவனம் சென்று, சந்தன மரத்தடியில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து வழிபடத் தொடங்கினாள். கங்கை நீரால் தினமும் அபிஷேகம் செய்தாள். அம்பிகையின் விருப்பப்படியே சிவபெருமான் தமது இடப்பாகத்தை அவளுக்கு அளித்தருளினார், அம்பிகை தவக்கோல நாயகி என்றும், அம்பரனைக் கொன்று சாந்தி பெற்றதால் சாந்தநாயகி என்றும் பெயர் பெற்றாள். பார்வதிதேவிக்கு மீண்டும் இடப்பாகத்தை அளித்ததால் பார்வதீச்வரர் என்ற திருநாமத்தைப் பெற்றார் சிவபெருமான்.

அம்பிகைக்கு ஆதரவாக நின்ற திருமால், அத்தலத்தில் ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாளாக எழுந்தருளினார். சிவலிங்கத்திற்கு நிழல் நல்கிய சந்தனமரம் தலவிருக்ஷமாக விளங்குகிறது.

கிழக்குப் பார்த்த கோயில். முன்புறமுள்ள தோரண வாயிலைக் கடந்து சென்றால், உள்கோபுரத்துடன் ஆலய

தரிசனம் தொடங்குகிறது. கும்பாபிஷேகம் நடைபெற்று இருபது வருடங்களுக்கு மேலாகி விட்டதால், அஷ்டபந்தனம் இற்றுப் போயிருப்பதைக் காண்கிறோம். முக்கியமாக ஸ்ரீ சுப்ரமணிய சுவாமி சந்நிதியில் அது நிதர்சனமாகத் தெரிகிறது.

இஞ்சிக்குடி ஸ்ரீ பார்வதீச்வரர் கோயில், மூன்று திருவாயில்களுடன் கூடியது, இவை முறையே தோரண வாயில், கோபுர வாயில், அணுக்கன் திருவாயில் ஆகும்.

தோரண வாயிலைக் கடந்து சென்றால் திருமுற்றம். இம்முற்றத்தின் தென் கிழக்கு மூலையில் மடைப்பள்ளியும், அதையடுத்து வாகன அறையும், வடக்குப்புறம் வசந்த மண்டபமும் உள்ளன.

கோபுர வாயிலுக்கு முன்னால் பலிபீடமும் நந்தி மண்டபமும் இருக்கின்றன. உள்ளே நுழைந்ததும் மகாமண்டபம். இதில் ஆடவல்லான் திருச்சந்நிதியையும், சனிபகவான், துவாரபாலகர், சூரியன், சந்திரன், பைரவர் ஆகியோரின் வடிவங்களையும் தரிசிக்கலாம். இம் மண்டபத தூண்களில் சோழர் காலக் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இம் மண்டபத்திலிருந்து தொடருவது தான் முதல் திருச்சுற்று.

திருச்சுற்றை வலம் வரும்போது தென்புறம் நோக்கியவாறு 'காட்சி தரும் நாயகர்' காட்சி தருகிறார். இச்சிலைக்கு எதிரே மதிலோடு அமைந்துள்ள சிறியதொரு மாடத்தில் வில்லும் வாளும் ஏந்திய வேடராசனின் சிலையுள்ளது. சிவராத்திரி அன்று சிவபெருமான் வேடனுக்குக் காட்சி தந்த தல புராணத்தை அழகுறச் சித்திரிக்கிறது இந்தக் காட்சி.

மேலிரு கரங்கள் மான், மழுவை ஏந்தியிருக்க, கீழ் வலக்கை தொடையில் அமர, இடக்கை தர்ம வடிவான இடபத்தின் சிரசில் ஊன்றியிருக்க, இடக்காலை மடித்து

சாய்ந்து ஒயிலாக நிற்கும், காட்சி தந்த நாயகரின்சிலை, சோழர் கால சிற்பத் திறனுக்குச் சாட்சியாக நிற்கும் அற்புத வடிவம்.

அடுத்துள்ள கோஷ்டத்தில் செல்வ கணபதி ஒய்யார எழிலுடன் நிற்கிறார்.

முயலகன் மீது வலக் காலைப் பதித்து, இடக்காலை வலது கால் தொடைமீது அமர்த்தி, வலக்கரத்தில் சின்முத்திரை காட்டி, நிட்டை கூடிய திருமேனிப் பாங்குடன் அமர்ந்திருக்கும் ஆலமர் கடவுளின் அதிசய வடிவம் நம் கண்ணையும் கருத்தையும் கவருகிறது.

கருவறையின் பின்புறமுள்ள கோஷ்டத்தில், லிங்கோற்பவருக்குப் பதிலாக அர்த்தநாரீச்வரர் வடிவம் அமைக்கப் பெற்றிருக்கிறது. பின் கோஷ்டத்தில் உமை பாதியுடலுடையார் காட்சி தரும் ஒரு சில கோயில்களில் இஞ்சிக்குடி சிவன் கோயிலும் ஒன்றாகும்.

வடக்குப்புறம் நான்முகனும், கொற்றவையெனும் துர்க்கையும் எழுந்தருளியிருக்கின்றனர்.

சுவாமி கோயிலுக்கு வடக்கே, முதல் சுற்றுக்குள்ளேயே அம்பிகை சாந்தநாயகியின் திருக்கோயில் தனியாக அமைந்துள்ளது. எதிரில், கங்கை தீர்த்தமென்னும் கிணறு உள்ளது. அம்பிகையின் கருவறை விமானத்தின் தென்புறப் பிரபைக்குள் அமைந்த மாடத்தில் சட்டைநாதரின் திருமேனி, சுதை வடிவமாக வடிக்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம். பெருமானை அருகில் சென்று வழிபட, படிக்கட்டுகள் அமைக்கப் பெற்றுள்ளன.

கருவறையில் ஸ்ரீ சாந்தநாயகி அம்மன் வலக் கையில் மலருடன், வலக்காலை மடித்துப் பாதம் தாமரைப் பீடத்தில் பதிந்தபடி, இடக்காலைத் தொங்க விட்டுக்கொண்டு அமர்ந்திருக்கிறாள்.

அடுத்து ஸ்ரீ பார்வதீச்வரர் திருச் சந்நிதிக்குள் செல்லும் அணுக்கன் திருவாயிலை அடைகிறோம். இது முன் மண்டபம், முக மண்டபம், கருவறைப் பகுதிகளைக் கொண்டது. முன் மண்டபத்தின் தென்புறம் சோமாஸ்கந்தர் திருச்சந்நிதியுள்ளது. அவரைத் தரிசித்த பின்னர், ஒளிப்பிழம்பாகக் காட்சி தரும் ஸ்ரீ பார்வதீச்வரரை வழிபடுகிறோம்.

இஞ்சிக்குடி ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் கோயில், ஊருக்கு மேற்கே உள்ளது. சோழர்காலக் கோயிலானாலும், அதற்குரிய பெருமையுடனும் கவனத்துடனும் அது பராமரிக்கப்படுவதாகத் தெரியவில்லை. இக்கோயிலைப் பற்றிய ஒரு பழமையான கல்வெட்டில் இது 'ஸ்ரீ அழகிய மணவாளப்பெருமாள்' என்று குறிக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீதேவி, பூதேவியுடன் பெருமாள் நின்ற திருக்கோலத்தில் காட்சியளிக்கின்றார். இங்கு லட்சுமிநாராயணன், நாராயணி, தும்பிக்கையாழ்வார், நம்மாழ்வார் திருமங்கையாழ்வார், விச்வக்னேசர், சுவாமி தேசிகன் முதலியோரின் கற்சிலைகள் இருக்கின்றன.

இஞ்சிக்குடி சிவன் கோயிலில் பல கல்வெட்டுகள் காணப்படுகின்றன. முன்பு கல், சுண்ணாம்புக் கட்டடமாக இருந்த கோயில், விக்கிரம சோழன் காலத்தில் (கி,பி. 1128) கருங்கல் கட்டடமாக மாற்றியமைக்கப்பட்டதாகத் தெரிய வருகிறது. காலவெள்ளத்தில் புதர் மண்டிப்போய் இக்கோயில் சிதிலமடைந்து போயிருக்கிறது. பின்னர் கி.பி. 16, 17-ம் நூற்றாண்டுகளில் இதைப் பிரித்துக் கட்டியிருக்கிறார்கள். அப்போது பல கல்வெட்டுகள் இடம் மாறிப் போயிருக்கின்றன. சில பழுதுபட்டும், பாதி மூளியுமாய் நினைத்த இடத்தில் பொருத்தப்பட்டிருக்கின்றன.

பேராசிரியர் சி. கோவிந்தராசனார் மிகவும் சிரமப்பட்டுப் பல கல்வெட்டுகளைக் கண்டுபிடித்துப் படியெடுத்திருக்கிறார். இக்கோயிலுக்கு 'ஸ்ரீகைலாசமான

மதுராந்தக ஈச்வரம் என்றும், சுவாமிக்கு ஸ்ரீ மதுராந்தகமுடைய மகாதேவர்' என்றும் பெயர்கள் காணப்படுவதாக அவர் கூறியிருக்கிறார். 1971-ல் அவர் எழுதிய 'ஸ்ரீபார்வதீச்வரர் திருக்கோயில் வரலாறு' என்ற சிறு நூலில் இத்தகவல்களைக் காண்கிறோம்.

ஆனால், 1983-ல் வெளியாகியுள்ள 'தொல்லியல் கருத்தரங்கு (தொகுதி-1)' என்ற நூலில் ஆ. பத்மாவதி எம்.ஏ. 'இஞ்சிக்குடி, பற்றி வரைந்துள்ள கட்டுரையில் புதிய தகவலைத் தந்திருக்கிறார். இஞ்சிக்குடியில் ஸ்ரீ பார்வதீச்வரர் ஆலயத்துக்கு முன்பே ஸ்ரீமதுராந்தக ஈச் வரமுடையார் என்ற கோயில் இருந்திருக்கிறது என்றும், அது இடிந்து போன பின்பு, அதிலிருந்த கல்வெட்டுகள் நிறைந்த தூண்கள், ஸ்ரீபார்வதீச்வரர் கோயில் மண்டபம் அமைக்கப் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும் என்றும் இவற்றைத் தவிர ஆங்காங்கே காணப்படும் சில கல் வெட்டுகள் முந்தைய கோயிலைச் சேர்ந்தவையே யென்றும் அவர் கூறுகிறார்.

# பூந்தோட்டம்

இஞ்சிக்குடியை அடுத்த ஊர் பூந்தோட்டம். அது ஒரு காலத்தில் திருவீழிமிழலைக் கோயிலுக்குப் பூந்தோட் டமாக இருந்ததால் அப்பெயர் ஏற்பட்டதாம். பழைய பெருமை எப்படியோ, நாங்கள் சென்றபோது ஸ்ரீ அகஸ் தீச்வரர் கோயில் இருந்த நிலை,நெஞ்சு வெடித்துக் கண்ணீர் ஆறாகப் பெருகச் செய்தது.

முதலில் அக்கோயில் எங்கிருக்கிறது என்று கண்டு பிடிப்பதே பெரும் பிரயத்தனமாயிருந்தது. அது இருக்

கும் திசையைச் சுட்டிகாட்டிய ஒரு புண்ணியவானுக்கும் கோயிலுக்குச் செல்லும் வழி சரியாகத் தெரியவில்லை. பின்புறத்தில் கோயிலை மறைத்தபடி நிறைய சிறு குடில் கள். அது கோயில் நிலமாகத்தான் இருக்கவேண்டும். அவற்றின் இடையே கோயிலுக்குச் செல்லும் பாதையை நாங்கள் தேடிக் கொண்டிருந்தபோது, எதிர் வீட்டிலிருந்த ஓர் இஸ்லாமிய இளைஞர் எங்களுக்குச் சரியான பாதை யைக் காட்டினார். அது ஓர் ஒற்றையடிப் பாதை. அதை யடுத்துள்ள ஒரு வீட்டிலிருந்து வெளியே வந்த அர்ச்சகர் எங்களை அவ்வழியே சுற்றி வரச் சொன்னார்.

கோயிலுக்கு எதிரிலுள்ள 'குளம்' வற்றிப் போயிருக் கிறது. அப்போது தமிழகத்தில் இருந்த வறட்சியை மட்டுமல்ல, கோயிலின் வறண்ட நிலையையும் அது பரிதாபமாகப் பிரதிபலிக்கிறது.

நுழைவாயில் செங்கல்லால் ஆனது. இடிந்தும் உதிர்ந் தும் போயிருக்கிறது. உள்ளே நந்தி மண்டபம்—பாழ டைந்த நிலையில். வடக்கே ஒரு கிணறு. அதில் 1971 என்ற எழுத்து—இடிந்த அதன் சுற்றுச் சுவரை யாரோ கட்டிக் கொடுத்திருப்பார் போலிருக்கிறது.

ஆலயத்திற்குள் நுழையவே அச்சமாயிருந்தது. மண்டபம் ஆங்காங்கே விரிசல் விட்டு, எந்த நிமிடமும் தலைமீது விழலாம் என்ற நிலை. புதர், தரையில் மட்டு மல்ல; மண்டபத்தின் மீதும் விமானங்கள் மீதும் மண்டிக் கிடக்கின்றன. அர்ச்சகர் எப்படித்தான் தினம் போய் பூஜை செய்கிறாரோ என்று வியந்தோம்.

சுவாமி அகஸ்தீச்வரரும், அம்பிகை தர்மாம்பிகையும் தனிமை இருட்டில் பரம ஏழைகளாய்க் காட்சியளித்தார் கள். பிரும்மபுரீச்வர குருக்கள் தனக்குக் கிடைக்கும் 'ஏதோ' நெல்லில், இவர்களுக்கு நிவேதனம் செய்து வரு கிறார். அப்பா முத்துசாமி குருக்களும், தாத்தா ஐயா

குருக்களும் செய்து வந்த தெய்வப் பணியை, ஒரு வைராக்கியத்தோடு விடாப்பிடியாகச் செய்து வருகிறார் இவர் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

இந்தக்கோயிலைச் சீர்படுத்திவிடலாம் என்ற நம்பிக்கை அவருக்கு இருக்கிறது. 1960-ம் வருடம் கோயில் பஞ்சாயத்திடமிருந்து போர்டுக்குக் கை மாறியதும் பத்து வருஷம் உள்ளூர்க்காரர் ஒருவர் டிரஸ்டியாக இருந்திருக்கிறார். அப்போது நிர்வாக அதிகாரி மேற்பார்வையில் இன்ஜினீயர் ஒருவர் திருப்பணிக்கான எஸ்டிமேட்டெல்லாம் போட்டாராம். ஆனால் எமர்ஜென்ஸி வந்ததும் எல்லாம் நின்று போய்விட்டதாம்.

உடைந்தது போக மிச்சமுள்ள சுதை பிம்பங்கள் அழகாக இருக்கின்றன. ஸ்ரீ தட்சிணாமூர்த்தியும், ஸ்ரீ கஜலட்சுமியும் அருமையான வடிவங்கள்.

இதற்கு முன் எப்போது திருப்பணி நடந்ததோ, அந்த அகஸ்தீச்வரருக்குத்தான் வெளிச்சம்! அடுத்த திருப்பணியும், குடமுழுக்கும் அவர் மனம் வைத்தால் தான் நடைபெறப் போகின்றன, சந்தேகமில்லை.

(இக்கட்டுரை வெளியான பின்னர் மேற்படி கோயில் உள்ளூர் பக்தர்களின் ஆர்வமும் மன உறுதியும் காரணமாக ஓராண்டுக்குள் திருப்பணிகள் நடைபெற்று குடமுழுக்கு நடந்தேறிய செய்தியைக் கேட்டு மகிழ்ந்தேன்),

பூந்தோட்டம் வரதராஜப் பெருமாள் கோயில் நல்லபடியாகப் பராமரிக்கப்படுகிறது. 1912-ல் திருப்பணி செய்து குடமுழுக்கு நடைபெற்றிருக்கிறது. நவீன கட்டடம்தான். பெருமாளுக்கு 'பிரும்மசாரி பெருமாள்' என்ற புதுமையான பெயர். தனிப் பெருமாள். ஸ்ரீதேவி, பூதேவியில்லை. சிரித்த முகத்துடன் கம்பீர அழகுடன் திகழ்கிறார். தாயார் சந்நிதியுமில்லை.

# பேரளம்

மயிலாடுதுறையிலிருந்து திருவாரூர் செல்லும் பேருந்து சாலையில், இஞ்சிக்குடிக்கு முன் பேரளம் என்ற சிற்றூர் இருக்கிறது. இங்கு சுயம்புநாதர் திருக்கோயில் கொண்டுள்ளார். அம்பிகையின் திருநாமம், பவானி. சுயம்புவேச்வரி என்ற பெயர் உண்டு.

கார்ஷணாஜினி என்ற முனிவர் உலகிலுள்ள எல்லா இலிங்க மூர்த்தங்களுடைய திருநாமங்களையும் சொல்லி வழிபட வேண்டுமென்று விரும்பி இங்கே தவமியற்றினாராம். சிவபெருமான் அவருக்குக் காட்சி தந்து, "நீ வழிபடும் போது ஆலயத்தின் சுவரில் எல்லா இலிங்கங்களின் பெயர்களும் உன் கண்ணுக்குத் தெரியும். அதைக் கண்டு நம்மை வழிபடுவாயாக" என்று கூறியருளி மறைந்தார். இவ்விதம் எல்லாப் பெயர்களுக்கும் இருப்பிடமாக அமைந்ததால் பேரளம், (பேர் + அளம்) என்று இத்தலம் வழங்கத் தொடங்கியது. சம்ஸ்கிருதத்தில் இத்தலத்திற்கு 'நாமாஸ்திக' என்ற பெயரும், இங்கு உறையும் ஈசனுக்கு 'நாமாஸ்திக' என்ற திருநாமமும் உண்டு.

'பேரளம்' என்ற பெயர் ஏற்பட மற்றொரு காரணமும் கூறப்படுகிறது.

பேரள முனிவர் இத்தலத்தில் தவம் புரிந்து சுயம்புநாதர், பவானி அம்மன் இருவரின் அருளையும் பெற்றார். தம் பெயரால் இத்தலம் அழைக்கப்பட வேண்டும் என்று அவர் கோரியதால், 'பேரளம்' என்ற பெயர் நிலைத்து விட்டதாம்!

எல்லாத் தலங்களுடைய அருள் தன்மையும் இங்கு சூழ்ந்திருப்பதால் 'சமஷ்டி க்ஷேத்திரம்' என்று இது

வழங்கப்படுகிறது. கார்ஷ்ணாஜினி முனிவர் பாடலி (பாதிரி) புஷ்பங்களால் பூசித்த காரணத்தால். இது பாடலிவன க்ஷேத்திரம் என்றும் கூறப்படுகிறது.

எல்லா இலிங்கங்களும் இம்மூர்த்தியில் இருப்பதாலோ என்னவோ, சுயம்புலிங்கம் வடக்கே சற்றுச் சாய்ந்திருக்கிறது. இது சமஷ்டி க்ஷேத்திரமானதால் இங்கு வழிபடுவது எல்லா சிவலிங்கங்களையும் வழிபடுவதற்கு ஒப்பாகும்.

இமாசலத்திலுள்ள கேதாரநாதருடைய திருநாமத்தை சொல்லி நோய்களினின்றும் விடுபடுவது போல, இத்தலத்தில் ஒரு முறத்தில் திருநீற்றைத் தெளித்து, பவானி வல்லபன், நாமாஸ்திகேசன், சுயம்புநாதன் என்ற பெயர்களை எழுதி 'கேதார்' என்ற மந்திரத்தை ஜபித்து நோயாளிக்கு அளித்தால் நல்ல பலன் உண்டாகும்.

இந்திரனும் சூரியனும்கூட இங்கே வழிபட்டிருக்கின்றனர். ஸ்ரீராமன் வனவாசத்தின் எட்டாவது ஆண்டில் இங்கு தந்தைக்குத் திதி கொடுத்தார். பிண்டங்களை நேரில் வந்து வாங்கிக் கொண்ட தசரதர், இந்தத் தலத்தின் மகிமையைப் பற்றி ஸ்ரீராமனிடம் கூற, அவர் சீதை, இலக்குவனுடன் சுயம்புநாதரை வழிபட்டார்.

சைவ மகா புராணமாகிய கோடி ருத்ர ஸம்ஹிதையில் க்ஷேத்திர வைபவ காண்டத்தில் 303 முதல் 308 வரை ஆறு அத்தியாயங்களில் இத்திருத்தலத்தின் புராண மகிமை கூறப்படுகின்றது.

ஆலயத்திற்குக் கிழக்கே அக்கினி தீர்த்தம் உள்ளது. இங்கு மதியத்தில் நீராடினால் காசியில் கங்கையிலுள்ள மணிகர்ணிகா கட்டத்தில் நீராடிய பலனும், சனிக்கிழமை திரயோதசி பிரதோஷத்தில் நீராடினால் அச்வமேத யாகம் முதலிய யாகங்கள் செய்த பலனும் கிடைக்கும்.

ஆலயத்திற்கு வடக்கே இருக்கும் கிணறு, சந்திர தீர்த்தம். இதில் அமிர்தம் கலந்திருப்பதால் பௌர்ணமியில் நீராடினால் மறு பிறப்பு இல்லை என்று தலபுராணம் கூறுகிறது.

சுயம்புலிங்கத்திற்குத் தென்மேற்குத் திசையில் உள்ள கிணறு, சூரிய தீர்த்தம். ஆவணி மாத ஞாயிற்றுக்கிழமைகளில் நீராடுவதால், நோய்கள் நீங்கி எல்லாச் செல்வங்களும் பெற்று வாழலாம்.

பேரளம் புகைவண்டி நிலையத்திலிருந்து வடகிழக்கே, ஊருக்கு நடுவே நாற்புறமும் பெரும் மதிலால் சூழப்பெற்றுள்ள கோயில் இது. மேற்கு ராஜகோபுரத்துடனும் மேற்குப் பார்த்த சந்நிதியுடனும் கூடியது.

உள்ளே நுழைந்தால், துவஜஸ்தம்பத்தையும் கட்டை கோபுரத்தையும் காண்கிறோம். முதற் பிராகாரத்தில் உற்சவ மண்டபம், யாகசாலை, சுப்ரமணியர், மகாலட்சுமி, சனி பகவான், சூரியன், சந்திரன், பைரவர், பேரள முனிவர் முதலிய மூர்த்தங்கள் உள்ளன.

கருவறை அடித்தளம் கருங்கல்லால் ஆனது. விமானத்தில் சுதை பிம்பங்கள் இருக்கின்றன. விமானத்தின் தென்புறம் வீணா தட்சிணாமூர்த்தியின் வடிவத்தைக் காண்கிறோம்.

முன் மண்டபத்தின் வடபுறத்தில் தெற்கு நோக்கிப் பவானி அம்மனின் திருச்சந்நிதியுள்ளது. சரணாகதித் தத்துவத்திற்கு விளக்கமாக இங்கு அருள் பாலிக்கிறாள் அன்னை.

தருமையாதீனத்தைச் சேர்ந்த கோயில்களில் பேரளம் கோயிலும் ஒன்றாகும். 25-வது மகா சந்நிதானமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்ரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் அருளாட்சியின்

போது, இக்கோயிலில் பெருமளவில் திருப்பணிகள் செய்யப்பட்டு 29-1-59ல் குடமுழுக்கு நடைபெற்றிருக்கிறது. ஓரளவு நல்ல முறையில் பராமரிக்கப்பட்டு வந்தாலும், ஆங்காங்கே பழுது பார்த்து, பூச்சு வேலை செய்து, வண்ணம் தீட்டிக் குடமுழுக்குச் செய்யப்பட வேண்டிய நிலையிலுள்ளது ஸ்ரீ சுயம்புநாத சுவாமி ஆலயம்.

## திருமீயச்சூர்

பேரளத்திற்கு வடமேற்கே இரண்டு கிலோ மீட்டர், தொலைவில் திருமீயச்சூர் என்ற பாடல்பெற்ற தலம் உள்ளது. அப்பர், சம்பந்தர் தேவாரங்கள் பெற்றது. அதற்கு மிஹிரக்ஷேத்திரம் என்று பெயர். பேரளம் சுயம்பு நாதரைத் தரிசித்துவிட்டு, மிஹிரக்ஷேத்திரத்தைத் தரிசிக்க வேண்டும் என்று இத்தல புராணம் கூறுகிறது. அது தெரியாமலேயே நாங்கள் பேரளத்திலிருந்து திருமீயச்சூர் சென்றோம்.

திருமீயச்சூர் செல்வதற்குச் சரியான பாதை இல்லை. ஏன், பாடல்பெற்ற பல தலங்களுக்குச் செல்ல சரியான பாதையே இல்லை. பல கோயில்க்ளுக்கு எப்படிச் செல்ல வேண்டும் என்ற அறிவிப்புப் பலகையுமில்லை.

"நேரே போங்க. போலீஸ் லைன்ஸ் வரும். அந்த வழியா போங்க"—ஒருவர் சொல்லிவிட்டு வேகமாகப் போய் விட்டார்.

போலீஸ் குடியிருப்பை விசாரித்துக் கண்டுபிடித்து திருமீயச்சூர் செல்லும் பாதையையும் பிடித்து விட்டோம். ஒற்றை மாட்டு வண்டி செல்லும் பாதைதான். கரடு

முரடான வழி மட்டுமல்ல; எதிரில் ஒரு வண்டி வந்தால் ஒதுங்குவதற்கும் பதுங்குவதற்கும் இடமில்லை. யாராவது ஒருவர் விட்டுக் கொடுத்து, பின்னால் சென்றுதான் வழி விட்டாக வேண்டும்.

அந்த குக்கிராமத்தில் அத்தனை அழகான சூழ்நிலையையோ, உளம்கவர் ஆலய கோபுரத்தையோ நாங்கள் எதிர்பார்க்கவேயில்லை. அதன் தொன்மையும், ஐந்து நிலை செங்கற் கோபுரமும் மதிற்சுவரும் பெரிய கோயில் ஒன்றைக் காணப் போகிறோம் என்பதற்குக் கட்டியம் கூறின.

கோயிலுக்கு நூறு அடி முன்னே ஒரு விநாயகர் சந்நிதியும், பக்கத்தில் தேர் சப்பரமும் இருக்கின்றன. விநாயகரைத் தரிசித்துக் கொண்டு ஆலய தரிசனத்திற்குச் சென்றோம்.

கிழக்குப் பார்த்த ராஜகோபுரத்தை அருகில் சென்று பார்த்ததும் மனதுக்குச் சற்று வேதனையாக இருந்தது. சுதை பிம்பங்களற்ற அந்தக் கோபுரத்தின் செங்கற்கள் அங்குமிங்கும் சிதைந்து, உதிர்ந்து விட்டிருந்தன. இங்கொன்றும் அங்கொன்றுமாகச் செடிகள் முளைத்திருந்தன. இளமைத் துடிப்புடன் இங்கு பணியாற்றி வரும் நிர்வாக அதிகாரி இளங்கோவிடம் இது பற்றிக் கேட்டேன்.

"எங்களால் முடிந்தனதச் செய்கிறோம்; வெட்டி எறிகிறோம்; மருந்து போடுகிறோம், மறுபடியும் முளைத்து விடுகிறது" என்றார் அவர். கோபுரத்தை விரைவில் பழுது பார்க்க வேண்டிய அவசியத்தை வலியுறுத்தினார்.

உள்ளே செல்கிறோம்; உள்கோபுரம் நேர்த்தியாக இருக்கிறது. பல தெய்வ வடிவங்கள் சுதை பிம்பங்களாகக் காட்சி தருகின்றன. கோபுரத்தின் அடிப் பகுதியில் நிறைய கல்வெட்டுகள் இருக்கின்றன.

இக் கோயிலில் துவஜஸ்தம்பம் இல்லாதிருப்பது ஒரு குறைதான். வடபுறம் தெற்குப் பார்த்து அம்பிகையின் திருச்சந்நிதி மண்டபம். சாந்தநாயகியென்றும் லலிதாம்பிகை என்றும் திருநாமங்கள். சௌந்தரநாயகி என்றும் அழைக்கிறார்கள். இறைவன், முயற்சிநாதர் அல்லது மேகநாதர்.

ஸ்ரீ லலிதாம்பிகை வலக் காலை மடித்து இடக் காலைத் தொங்க விட்டுக் கொண்டு பஞ்சசக்தி பீடத்தில் அமர்ந்திருக்கிறாள். வலக்கையில் புஷ்பம் ஏந்தியிருக்கிறாள்.

திருமீயச்சூர், சூரியபகவானுக்குச் சாபம் நீங்கிய திருத்தலம். சூரியன் சுவாமியையும் அம்பாளையும் யானை மீது அமர வைத்து வழிபட்டாராம். அதனால் தான் இங்குள்ள விமானம் கஜப்ருஷ்ட வடிவத்தில் அமைந்துள்ளது.

சித்திரை மாதம் 21-ம் தேதி முதல் 27-ம் தேதி வரை சூரிய கிரகணங்கள் சுவாமி மீது படுகின்றன. அதுவே சூரிய பூஜை. சூரியன் தோற்றுவித்த சூரிய புஷ்பகரணி கோயிலுக்கு வெளியேயுள்ளது.

திருநாவுக்கரசரும் ஞானசம்பந்தமூர்த்திகளும் வலம் வந்து, பாடிப் பரவிய இக்கோயிலை வலம் வரும்போது நம் மனமும் ஒருமைப்பட்டு உயர்கிறது. சுவாமி கோயிலின் தென்புறச் சுவரில் கோஷ்ட விநாயகரையடுத்துள்ள க்ஷேத்திர புராணேச்வரர் வடிவம், புதுமைக் கதை கூறும் அற்புதப் படைப்பாகத் திகழ்கிறது. அம்பிகை சற்றுச் சிணுங்கி, முகத்தை வேறு புறம் திருப்பிக் கொண்டிருக்க, பரமன் அவளைச் சமாதானப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார். முனிவர் ஒருவர் சற்று பின்னே நின்று கொண்டிருக்கிறார்.

சிற்பியின் கற்பனை வளம் துள்ளிக் குதித்திருக்கிறது. அந்தக் கற்பனைக்கு அடிப்படையாக புராணக்கதை

யொன்று நிச்சயமாக அமைந்திருப்பதும் புரிகிறது. ஆனால், அக் கதையைத்தான் அங்கு அறிய முடிய வில்லை. ஆலயப் பணியாளர் ஒருவர் அக் கதையைக் கூறுவதாக முன்வந்து, தோல்வியடைந்தார்!

விசாரித்தவரையில் கோயிலின் தல புராணம் செவி வழிவந்த செய்தியாகச் கூறப்பட்டு வருவதாகவும், கோ வையாக நூல் ஒன்றும் அச்சிடப்படவில்லை என்றும் அறிந்தேன். ஒவ்வொரு கோயிலில் ஒவ்வொருவித புது மையான சிற்பங்கள் காணப்படுகின்றன. அவற்றின் சிற்ப எழிலையும், அவை எந்த நூற்றாண்டில் படைக்கப் பட்டது என்ற செய்தியையும் மட்டும் தெரிந்து கொண் டால் போதாது, அந்தச் சிற்பங்கள், அந்தக் கோயிலின் தல புராணத்தை எவ்வகையில் சித்தரித்துக் காட்டுகின் றன என்பது ஆராய்ந்து அறியப்பட வேண்டும். அச் செய்திகள் தரிசனத்திற்கு வருவோருக்கு வழங்கப்பட வேண்டும்.

பழம்பெரும் தென்னகக் கோயில்களின் தனிப் பெரும் பெருமையே அவற்றின் தல புராணங்களில்தான் அடங்கியிருக்கின்றது. அதிலும் தமிழகத்தில் உள்ள அளவு வேறு இடங்களில் தலபுராணம் இல்லை. தல புராணப் பின்னணியை அறிந்து, ஆழ்வார் நாயன்மார் களின் பாடல்களின் பக்தி நயம் உணர்ந்து தரிசனம் செய்யும் போது, அங்கு உறையும் தெய்வங்களின் மீது நம் ஈடுபாடு அதிகமாவது நிச்சயம். அப்போதுதான் அக் கோயில்களின் சிற்பக்களஞ்சியத்தையும் முழுமையாக ரசிக்க முடியும்.

இத்தருணத்தில் எனக்கு ஒரு யோசனை தோன்று கிறது. தலபுராணங்களையும் சிற்ப ஆராய்ச்சிகளையும் பற்றிய பணிகளை அறநிலைய ஆட்சித் துறையினர்தான் செய்ய வேண்டும் என்ற அவசியமில்லை. பக்தியையும், ஆலய வழிபாட்டு உணர்வையும் வளர்க்கும் இப்புனிதப் பணிகளை இந்து சமய மடாலயங்கள் ஏற்றுக்கொள்வது

தான் பொருத்தமாகவும் பயனளிக்கக் கூடிய தாகவும் அமையும். மடாதிபதிகள் இது குறித்து ஒன்றுகூடிப் பேசி பகுதிகளைத் தங்களுக்குள் பிரித்துக் கொண்டு, சமயப் பற்றும் இலக்கிய ஈடுபாடும், கலையறிவும் மிக்க நிபுணர் கள் அடங்கிய குழுக்களை அமைத்து, சிறு தலபுராண நூல்கள் வெளியிட வேண்டும். இத் துறையில் சமய ஆதீனங்கள் ஆற்றியுள்ள பணி பாராட்டத்தக்க முன் னோடியாக அமைந்துள்ளது. ஆனால், பல கோயில் களில் தலபுராணப் பிரசுரங்கள் தீர்ந்து விட்டன என்று கையை விரித்து விடுகிறார்கள். இத்தகைய கோயில் களின் பட்டியல் ஒன்று தயாரித்து, முன்பதிப்புக்களில் உள்ள தவறான செய்திகளையும் குறைகளையும் தவிர்த்து, மீண்டும் அவற்றை அச்சிட வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன். இதுவரை அச்சில் ஏறாத தல புராணங்களையும் வெளியிட முன் வர வேண்டும்.

இந்த நல்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு நம் மடாதிபதிகளின் திருவடிகளில் மற்றொரு வேண்டு கோளையும் வைக்கிறேன்.

தலபுராண வெளியீடுகளில் சாதாரணமாச அந்தந் தக் கோயில்களுக்குரிய ஆழ்வார், நாயன்மார், அருணகிரி யார், வள்ளலார் போன்றவர்களின் பாடல்கள் இடம் பெறுகின்றன. ஆனால், அவற்றை எளிதாகப் புரிந்து கொள்ளும் வகையில் பதவுரையோ, பொழிப்புரையோ, சொல்லாட்சியின் தனித் தன்மையோ விளக்கிக் கூறப்படு வதில்லை. தமிழார்வம் மிக்க நம் இளைய தலைமுறை யினர் விரும்பிப் படிக்கும் வகையில் அவை விளக்கங்களு டன் வரையப் பட்டால், தலபுராணங்கள் ஓர் இலக்கியத் தொண்டாகவும் திகழும் என்று கருதுகிறேன். புராணப் பெருமையோடு, பக்திச் சுவையோடு, தமிழ் மொழியின் இனிமையும் இப்பாடல்களில் விரவிக் கிடக்கின்றன. இத்

தலைமுறையினருக்கு அப்பாடல்ககளை நல்ல முறையில் அறிமுகப்படுத்தி வைத்தால், பக்தியோடு தமிழார்வமும் செழித்து வளரும். மகான்களின் இறைபக்தியூற்றில் பெருகிய வெள்ளத்தை நாம் சிறு கரண்டியில் எடுத்து இளஞ் சமுதாயத்திற்கு வழங்க வேண்டும்.

இச் சிறு நூல்கள் அக் கோயில் கிராமத்திலோ, ஊரிலோ வசிக்கும் ஒவ்வொரு இந்துவின் இல்லத்திலும் இருக்க வேண்டும். இந்து சமயத்திற்கும், தமிழ் மொழிக் கும் சேவை புரியத் துடிக்கும் இளைஞர்கள் இதை வீடு வீடாக எடுத்துச் சென்று விநியோகிக்க வேண்டும். விலை கொடுத்து வாங்க முடியாத ஏழைகளுக்கு இலவசமாக அளிக்க வேண்டும். முதலில் அந்தந்த ஊர்க்காரர்கள் தங்கள் கோயில்கள் பற்றிய பெருமைகளைப் தெரிந்து கொள்ளச் செய்யவேண்டும்.

திருமீயச்சூர் கோயில் கருவரையின் வடக்குப்புற வெளிச்சுவரில் விஷ்ணு துர்க்கையோடு, மற்ற இரு கோஷ் டங்கங்களில் சந்திரசேகரரும் ரிஷபாருடரும் இருக்கக் கண்டேன். இந்த அமைப்பும் புதுமையாக இருந்தது. அதேபோல், ஸ்ரீ மேகநாத சுவாமிக்கு வடபுறம் மற்றொரு சிறு கோயில் இருப்பதும் ஒரு புதுமைதான். இங்கு உறை பவர் சகலபுதனேச்வரர் — அம்பிகையின் பெயர் மின்னு மேகலையாள். இக்கோயிலை இளங்கோயில் என்று அழைக்கிறார்கள்.

பெரிய கோயில் கட்டுவதற்கு முன், சுவாமியைத் தனி யொரு சிறுகோயிலில் பிரதிஷ்டை செய்வது வழக்கம். அதற்கு பால ஆலயம் — பாலாலயம் — என்று பெயர். அதுதான் பாலாலயம் ஆயுற்றாம்.

அப்பர் சுவாமிகள் திருமீயச்சூர் இளங்கோயில் பதிகத்தில்...

பொன்னங் கொன்றையும் பூவணி மாலையும்
பின்னஞ் செஞ்சடை மேற்பிறை சூடிற்று
மின்னு மேகலை யாளொடுமீயச்சூர்
இன்ன நாளக லாரிளங் கோயிலே

என்று அம்பிகைக்கு எத்தனை இனிமையானதொரு தமிழ்ப் பெயரைச் சூட்டியிருக்கிறார்!

இளங்கோயிலின் வடபுறம் துர்க்கைக்குரிய கோஷ்டத்தில் சதுர்மு" சண்டிகேச்வரர் இருக்கிறார். இதுவும் இங்கு ஒரு புதுமைதான்!

இக்கோயிலில் சப்த மாதாக்கள் வழிபட்ட சப்த லிங்கங்கள், அகஸ்தியர் வழிபட்ட சப்த லிங்கங்கள், பாதாள லிங்கம், ஆகாச லிங்கம் என்று நிறைய சிவலிங்கங்கள் இருக்கின்றன.

இக்கோயிலை வழிபட்ட திருஞான சம்பந்தப் பெருமான் கூறுகிறார்...

பொன்னேர் கொன்றை மாலை புரளும் அகலத்தான்
மின்னேர் சடைகளுடையான் மீயச் சூரானைத்
தன்னேர் பிறரில் லானைத் தலையால் வணங்குவார்
அந் நேரி மையோர் உலகம் எய்தல் அரிதன்றே.

# திருமாகாளம்

அடுத்து நாம் தரிசிக்கப் போவது திருமாகாளம் என்ற திருத்தலம். மாயவரம்— அறந்தாங்கி ரயில்நிலையத்தில், பூந்தோட்டம் ரயில் நிலையத்திலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தொலைவுக்குள், அரசலாறு என்ற அரிசிலாற்றங்கரையில் உள்ளது இக்கோயில். கோயில் உள்ள இடம் 'கோயில் மாகாளம்' என்று வழங்கப்படுகிறது.

மாகாளி பூஜித்த தலமாதலால், மாகாளம் என்று அழைக்கப்படுகிறது. நாகக்கன்னிகை வழிபட்டு நற்கதி பெற்ற இடமாதலால் இப்பெயர் ஏற்பட்டுள்ளதாகவும் கொள்ளலாம். காளம் என்றால் நாகம்.

பிரமன், அன்ன வடிவம் தாங்கி இறைவனின் முடியைக் கண்டதாக, தாழம்பூவைக் காட்சிக்கு அழைத்துப் பொய்யுரைத்த பாவத்தை இத்தலத்தில்தான் போக்கிக் கொண்டான். அதனால் இத்தலத்திற்கு 'பிரமபுரம்' என்ற பெயரும் உண்டு.

புலத்தியர் மரபில் வந்த சம்மாரசீலன் என்பவனிடம் தோற்று இந்திரன் இந்தத் தல ஈசரிடம் அடைக்கலம் அடைய, சுவாமி பைரவ திருக்கோலம் தாங்கி சம்மாரனை சம்மாரம் செய்து, சட்டைநாதராக எழுந்தருளி,இந்திரனை மீண்டும் அமராவதிக்கு அதிபதியாக்கினார். அதனால் இத்தலத்திற்கு 'இந்திரபுரி' என்ற திருநாமமும் ஏற்பட்டது.

மன்மதன் தேவர்களால் ஏவப்பட்டு, விசுவாமித்திரனின் தவ வலிமையைக் குலைக்கும் பொருட்டு, அவர்மீது மலர்க்கணைகளைத் தொடுத்தான். சினங்கொண்ட முனிவர், மன்மதனைச் சபிக்க, அவன் மாகாளநாதரை வழிபட்டுச் சாபம் நீங்கப் பெற்றான். அதன் காரணமாக இது 'மாரபுரி' என்ற பெயரைப் பெற்றது.

காம்போஜ நாட்டையாண்டுவந்த நந்தன் என்ற மன்னன், பிங்காஷ்ட முனிவரைக் கொன்றதனால் ஏற்பட்ட பிரும்மஹத்தி தோஷத்தை இத்திருத்தலத்திற்கு வத்து போக்கிக் கொண்டான். அதனால் இது 'நந்தராசபுரம்' எனப் பெயர் சூட்டிக் ரொண்டது.

திருமாகாளநாதரின் திருக்கோயில் கிழக்கே பார்த்த சந்நிதியுடையது. நான்குபுறமும் திருமதில்களோடு சூழப் பெற்றது. கீழ்க்கோபுரம், ஐந்து நிலைகள் கொண்ட உயர்ந்த, அழகிய கோபுரம். அதன் எதிரில் உள்ளது சந்நிதி தீர்த்தக்குளம்.

தூல லிங்கமாகிய கோபுரத்தைக் கடந்து உள்ளே சென்றால் முற்றவெளி. இறைவன் சந்நிதிக்கு நேரே பலி பீடமும் நந்தி மண்டபமும் உள்ளன. வடகிழக்கு மூலையில் கல்யாண மண்டபம்.

முற்றவெளியையடுத்து இரண்டாம் கோபுரம். இதற்கு அதிகாரநந்தி கோபுரம் எனப் பெயர். இவரது ஆணையைப் பெற்றுக் கொண்டு மகா மண்டபத்தை அடைகிறோம். அங்கு நாகநாத சுவாமி சிவலிங்கத் திருமேனியாக எழுந்தருளியிருக்கிறார். எதிரில் நந்தியம்பெருமான். அவருக்கு வலப்புறத்தில் அம்பிகை, வலக்காலை மடித்து, இடக் காலைத் தாமரையின்மீது பதித்தவாறு சுகாசனத்தில அமர்ந்திருக்கிறாள். இரண்டே திருக்கரங்கள். வலக் கையில் தாமரை மலர் ஏந்தி, இடக் கையை இடது தொடையின் மீது வைத்திருக்கிறாள்.

நாகநாதப் பெருமானுக்குப் பின்புறம் நாககன்னிகை யோகாசனத்தில் வீற்றிருக்கிறாள். இடக் காலைக் குத்திட்டு, வலக்காலைக் கீழே தொங்கவிட்டுக் கொண்டு இடக்கை முழங்காலின்மீது படர்ந்தபடி காட்சிதருகிறாள். அழகிய, அற்புதமான சிற்பம் !

வடக்குப்புறம் காட்சி கொடுத்த நாயகர், நடராஜப் பெருமான், இன்னும் பிற உற்சவமூர்த்திகளைக் காண்கிறோம். காட்சி கொடுத்த நாயகர் வலக்காலை ஊன்றி, இடக்காலை பாங்குடன் மடித்து, இடக்கை முழங்கையை ரிஷபத்தின்மீது மிக லேசாக அமர்த்தி, மிக ஒய்யாரமாக நின்று கொண்டிருக்கிறார். அவரது வலக்கைப் பெருவிரலும் நடுவிரலும் இயல்பாக இணைந்திருக்கின்றன. அம்பிகை, இறைவனின் அருள்பணிக்குத் துணையாக அருகில் எழுந்தருளியிருக்கிறாள்.

ஆனந்த தரிசனம் முடிந்ததும், மேற்கு நோக்கி நடந்து, மகா காளத்திநாதரின் திருச்சந்நிதியை அடை

கிறோம். வலப்புறத்தில் துவார கணபதியும் விசுவேச லிங்கமூர்த்தியும் எழுந்தருளியுள்ளனர். கருவறையினுள் மாகாளநாத சுவாமி எழிலார்ந்த சிறிய தோற்றத்தில் ஒளி வழங்கிக் கொண்டிருக்கிறார்.

கருவறையை வலம் வரும்போது தெற்குப்புறத்தில் தியாகேசப் பெருமானின் திருச்சந்நிதியைத் தரிசிக்கிறோம். அடுத்து அறுபத்துமூவர், பரிவார கணபதி, தட்சிணாமூர்த்தி, உதங்க, மதங்க மகரிஷிகள், தனுசு சுப்ரமணியர், மகாலட்சுமி, சண்டேசர் முதலியவர்களை வழிபடுகிறோம். தனுசு சுப்ரமணியர் மனங்கவர் திருமேனியழகுடன் திகழ்கிறார். நான்கு திருக்கரங்களோடு வில்லை ஊன்றிக் கொண்டிருக்கிறார். திருவடிக்குக் கீழ் மயில் நின்று கொண்டிருக்கிறது.

உட்பிராகாரத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு வெளிப் பிராகாரத்துக்கு வந்து, தென்மேற்குக் கோடியில் தனியே இருக்கும் காளி கோயிலைத் தரிசித்துக் கொள்கிறோம். அன்னை, அம்பாசுரனை வதம் செய்து, அந்தத் தோஷம் நீங்க மாகாளநாதனை வழிபட்ட மாகாளியாவாள்.

மதலோலை என்பவள் திருக்கயிலை சென்று கொண்டிருந்த போது முனிவரின் சாபத்திற்கு ஆளாகி, இரண்டு ராட்சசப் பிள்ளைகளைப் பெற்றாள். அவர்களுக்கு அம்பன், அம்பரன் என்று பெயர்கள். தாய் சொல்படி இவ்விருவரும் திருமாகாளம் வந்து இறைவனை வழிபட்டு இறவா வரம் பெற்றனர்.

வலிமை மிகுந்ததால், இருவருக்கும் செருக்கு அதிகமாகி அரக்கக் குணம் மேலிட்டது. தேவர்களையும் முனிவர்களையும் துன்புறுத்தத் தொடங்கினர். தேவர்கள் வழக்கப்படி சிவபெருமானிடம் சென்று முறையிட்டனர்.

பெருமான் புன்னகைத்தவாறே, பார்வதியை நோக்கினார். குறிப்பறிந்த தேவி, காளியானாள். சீற்றத்துடன்

திருக்கயிலையிலிருந்து புறப்பட்டுத் தென்திசை நோக்கி விரைந்தாள். சிவபெருமானின் உளம் அறிந்த திருமால், மூதியதொரு வேதியராக உருமாறி காளியைப் பின் தொடர்ந்தார். இருவரும், அம்பன், அம்பரன் வாழும் இத்தலம் அடைந்தனர்.

மகாகாளி மனத்தில் திருவிளையாடல் ஒன்று உதித்தது. மோகினி வேடம் பூண்டு அசுரர்கள் முன் சென்று மினுக்கினாள். சகோதரர்களுக்குள் ஆசை வளர்ந்தது. 'எப்படி மோகினியை அடைவது?'

இருவரும் வேதியரிடம் சென்றனர். ''சுவாமி, எனக்கு இந்தப் பேரழகியை மணம் முடித்து வையுங்கள்'' என்று அம்பன் அம்பாசுரன் இருவருமே கேட்டனர். கிழவருக்கு தர்மசங்கடமான நிலை.

கபட வேடதாரி இந்தக் கபட நாடகத்தில் திறம்பட நடித்தார்.

''இதோ பாருங்கள்! ஒரு கன்னியை இருவர் மணப்பது முடியாத காரியம். நீங்கள் சகோதரர்கள். உங்களுக்குள் ஒரு முடிவுக்கு வந்து என்னிடம் கூறுங்கள். பெண்ணைத் தருகிறேன்'' என்றார்.

அம்பன், அம்பாசுரனிடையே பொறாமையைத் தூண்ட இது போதாதா? அவர்களிடையே போட்டி வலுத்தது. இருவரும் பலப்பரீட்சையில் இறங்கிவிட்டனர். மல்யுத்தம் பயங்கரமாக நடைபெற்றது. அம்பன் மடிந்தான். அம்பாசுரனுக்கு மகிழ்ச்சி. துள்ளிக் குதித்துக் கொண்டு மோகினியைக் கட்டித் தழுவ ஓடிவந்தான். மோகினி, மாகாளியாக மாறினாள். அம்பாசுரனை அழித்து, அவன் குடலை வெற்றிமாலையாக அணிந்து கொண்டாள்.

கிறோம். வலப்புறத்தில் துவார கணபதியும் விசுவேச லிங்கமூர்த்தியும் எழுந்தருளியுள்ளனர். கருவறையினுள் மாகாளநாத சுவாமி எழிலார்ந்த சிறிய தோற்றத்தில் ஒளி வழங்கிக் கொண்டிருக்கிறார்.

கருவறையை வலம் வரும்போது தெற்குப்புறத்தில் தியாகேசப் பெருமானின் திருச்சந்நிதியைத் தரிசிக் கிறோம். அடுத்து அறுபத்துமூவர், பரிவார கணபதி, தட்சிணாமூர்த்தி, உதங்க, மதங்க மகரிஷிகள், தனுசு சுப்ரமணியர், மகாலட்சுமி, சண்டேசர் முதலியவர்களை வழிபடுகிறோம். தனுசு சுப்ரமணியர் மனங்கவர் திருமேனி யழகுடன் திகழ்கிறார். நான்கு திருக்கரங்களோடு வில்லை ஊன்றிக் கொண்டிருக்கிறார். திருவடிக்குக் கீழ் மயில் நின்று கொண்டிருக்கிறது.

உட்பிராகாரத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு வெளிப் பிராகாரத்துக்கு வந்து, தென்மேற்குக் கோடியில் தனியே இருக்கும் காளி கோயிலைத் தரிசித்துக் கொள்கிறோம். அன்னை, அம்பாசுரனை வதம் செய்து, அந்தத் தோஷம் நீங்க மாகாளநாதனை வழிபட்ட மாகாளியாவாள்.

மதலோலை என்பவள் திருக்கயிலை சென்று கொண்டிருந்த போது முனிவரின் சாபத்திற்கு ஆளாகி, இரண்டு ராட்சசப் பிள்ளைகளைப் பெற்றாள். அவர் களுக்கு அம்பன், அம்பரன் என்று பெயர்கள். தாய் சொல்படி இவ்விருவரும் திருமாகாளம் வந்து இறைவனை வழிபட்டு இறவா வரம் பெற்றனர்.

வலிமை மிகுந்ததால், இருவருக்கும் செருக்கு அதிக மாகி அரக்கக் குணம் மேலிட்டது. தேவர்களையும் முனி வர்களையும் துன்புறுத்தத் தொடங்கினர். தேவர்கள் வழக்கப்படி சிவபெருமானிடம் சென்று முறையிட்டனர்.

பெருமான் புன்னகைத்தவாறே, பார்வதியை நோக் கினார். குறிப்பறிந்த தேவி, காளியானாள். சீற்றத்துடன்

திருக்கயிலையிலிருந்து புறப்பட்டுத் தென்திசை நோக்கி விரைந்தாள். சிவபெருமானின் உளம் அறிந்த திருமால், முதியதொரு வேதியராக உருமாறி காளியைப் பின் தொடர்ந்தார். இருவரும், அம்பன், அம்பரன் வாழும் இத்தலம் அடைந்தனர்.

மகாகாளி மனத்தில் திருவிளையாடல் ஒன்று உதித்தது. மோகினி வேடம் பூண்டு அசுரர்கள் முன் சென்று மினுக்கினாள். சகோதரர்களுக்குள் ஆசை வளர்ந்தது. 'எப்படி மோகினியை அடைவது?'

இருவரும் வேதியரிடம் சென்றனர். "சுவாமி, எனக்கு இந்தப் பேரழகியை மணம் முடித்து வையுங்கள்" என்று அம்பன் அம்பாசுரன் இருவருமே கேட்டனர். கிழவருக்கு தர்மசங்கடமான நிலை.

கபட வேடதாரி இந்தக் கபட நாடகத்தில் திறம்பட நடித்தார்.

"இதோ பாருங்கள்! ஒரு கன்னியை இருவர் மணப்பது முடியாத காரியம். நீங்கள் சகோதரர்கள். உங்களுக்குள் ஒரு முடிவுக்கு வந்து என்னிடம் கூறுங்கள். பெண்ணைத் தருகிறேன்" என்றார்.

அம்பன், அம்பாசுரனிடையே பொறாமையைத் தூண்ட இது போதாதா? அவர்களிடையே போட்டி வலுத்தது. இருவரும் பலப்பரீட்சையில் இறங்கிவிட்டனர். மல்யுத்தம் பயங்கரமாக நடைபெற்றது. அம்பன் மடிந்தான். அம்பாசுரனுக்கு மகிழ்ச்சி. துள்ளிக் குதித்துக் கொண்டு மோகினியைக் கட்டித் தழுவ ஓடிவந்தான். மோகினி, மாகாளியாக மாறினாள். அம்பாசுரனை அழித்து, அவன் குடலை வெற்றிமாலையாக அணிந்து கொண்டாள்.

# அம்பகரத்தூர்

மாகாளிக்கும் அம்பராசுரனுக்குமிடையே நடந்த போர் பேரளத்திலிருந்து காரைக்கால் செல்லும் பாதையில் நான்கு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள அம்பகரத்தூர் என்ற இடத்தில்தான். அங்கு ஒரு காளி கோயில் உள்ளது. ஆண்டுதோறும் சிறப்பான உற்சவம் நடைபெறுகிறது.

கொலை செய்த பாவம் நீங்க, மாகாளி அரிசிலாற்றில் நீராடி, மகாகாளநாதரை வழிபட்டதற்கு அடையாளமாக சிவலிங்கத்தைக் காளி பூஜை செய்வதுபோல் இக்கோயிலில் ஒரு சுவர் சிற்பமும் காணப்படுகிறது.

தனிக்கோயில் உள்ள காளியின் சிலை மிகப் பழமையானதாகத் தோன்றுகிறது. அமர்ந்த திருக்கோலம். கீழ் இடக் கையில் பாணபத்திரம். கீழ்வலக் கை அபயம். மேல் கையில் சூலம்.

இக்கோயிலுக்குத் தென்புறம், அம்பாளுக்குத் தனிக் கோயில் இருக்கிறது. இக்காலக் கருங்கல் திருப்பணி பள்ளத்தூர் க. ப. குடும்பத்தாரால் நிறைவேற்றப்பட்டது. அம்பிகையின் திருநாமம் பயக்ஷயாம்பிகை என்பதாகும். சக்தி வாய்ந்த அம்பிகைக்குப் பட்சநாயகி என்ற பெயரும் உண்டு.

ஸ்ரீஅம்பர் மாகாளத் திருக்கோயிலில் நந்தி சற்று விலகியிருப்பதைக் காணலாம். அவ்வூரின் எல்லையில் தவமிருக்கும் ஐயனாருக்காக நந்தியம் பெருமான் இவ்வாறு ஒதுங்கியிருப்பதாகக் கூறப்படுகிறது. மகாகாளநாதரை வழிபட்ட சூரபன்மனது தங்கை அஜமுகியைக் கை குறைத்த தலம் இது. இங்கு மாகாள ரிஷியும் பூசித்துப்பேறு பெற்றார்.

அம்பர் மாகாளத்தைக் 'கோயில் திருமாகாளம்' என்றும் அழைக்கிறார்கள். ஊருக்கும் அப்பெயரே வழங்கப் படுகிறது. இவ்வூருக்கு முக்கால் மைல் கிழக்கில் அம்பல் என்ற சிற்றூர் உள்ளது. பூந்தோட்டம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே இரண்டு மைல் தொலைவி லுள்ளது அது.

இங்குள்ள கோயிலின் பெயர் அம்பர் பெருந் திருக் கோயில். நாற்புறங்களிலும் இலுப்பை மரச் சோலை களால் சூழ்ந்துள்ள அழகிய ஊர் இது.

கோயில் கிழக்கு நோக்கியுள்ளது. கோச்செங்கட் சோழனால் கட்டப்பெற்ற எழுபத்தெட்டு மாடக் கோயில் களில் இதுவும் ஒன்று. இவ்விரதத்தை ஞானசம்பந்தப் பெருமான் இவ்வூர்ப் பதிகத்தில் 'சூரிசில் செங்கண்ணவன் கோயில்" 'செங்கண் நல் இறைசெய்த கோயில்' என்று குறிப்பிடுகிறார். யானை ஏற முடியாதவாறு படிக்கட்டு கள் அமைத்துச் சிறு குன்று போல் கோயில் அமைந்துள் ளதால், இக்கோயிலுக்குப் 'பெருந்திருக்கோயில்' என்ற பெயர் ஏற்பட்டது. இம்மாடக் கோயிலை மலைக் கோயில் என்று கூறுவதுமுண்டு. கோயிலுக்கு ஏறிச் செல்லும் படிக்கட்டுகள் தெற்கு நோக்கியவாறு அமைந்துள்ளன.

கருவறையைச் சுற்றி வர மேலேயும் ஒரு பிராகாரம் இருக்கிறது. மேல்கோஷ்டத்தில் தட்சிணாமூர்த்தியும், கீழே திருமால், பிரும்மா, துர்க்கை முதலியவர்களும் இருக் கின்றனர். திருமாலுக்கு நேரே ஸ்ரீ சுப்ரமணிய சுவாமி திருச்சந்நிதி. சண்டிகேச்வரருக்குப் பக்கத்தில் பாதாள லிங்கத்தையும் நந்தியையும் பார்க்கிறோம்.

படியேறிச் செல்வதற்கு முன்னரே, கிழக்கு மதிற்சுவர் மாடத்தில் கிழக்கு நோக்கித் தல விநாயகரான படிக்காசு விநாயகர் எழுந்தருளியிருக்கிறார். அங்கே மூன்று

விநாயகர் மூர்த்திகள் உள்ளன. அதே போன்று பிரா காரத்தில் உள்ள விநாயகர் சந்நிதியிலும் மூன்று விநாய கர் சிலைகள் இருக்கின்றன.

மலையின் வடபாகத்தில் கிழக்கு நோக்கி பிரம்மபுரீச் வரர் லிங்க வடிவில் திகழ்கிறார். கருவறைப் பின்புறச் சுவரில் பார்வதி பரமேச்வரர் கணபதியுடன் வீற்றிருக் கின்றனர். இம்மாதிரி அமைப்பு காஞ்சீபுரத்தையடுத்த தேனம்பாக்கத்திலுள்ள பிரம்மபுரீச்வரர் கோயிலிலும் உள்ளது.

மலையின் கீழ், தெற்கு நோக்கிப் பூங்குழல்நாயகி எழுந்தருளியிருக்கிறார். திருச்சந்தியின் முன் மண்டபத் தில் சனி பகவானைத் தரிசித்துக் கொள்ளலாம். பால சுப்ரமணிய சுவாமியும் இருக்கிறார். அம்மன் கோயிலுக் கும் கிழக்குப் பிராகாரத்துக்கும் இடையே வசந்த மண்ட பம் இருக்கிறது.

அம்பன், அம்பரன் வழிபட்டதால் இத்தலம் 'அம்பர்' ஆயிற்று. இக்கோயிலில் 'இந்திர தீர்த்தம்' 'அன்னமாம் பொய்கை' என்ற இரண்டு தீர்த்தங்கள் உள்ளன. ஸ்தல விருட்சம் புன்னை மரம். கோயிலின் தென்கிழக்கே உள்ள புன்னை மரத்தில் ஆதிமூர்த்தியாகிய சிவபெருமான் லிங்க உருவில் மேற்கு நோக்கி அமர்ந்திருக்கிறார்.

இவ்வூர்க் கோடியில் மற்றொரு சிவாலயம் இருக்கிறது சடையப்பர் கோயில் என்று அழைக்கிறார்கள். அதுவும் மாடக் கோயில்தான். தென் பிராகாரத்தில் சடையப்பர் உருவச்சிலையைக் காணலாம். எதிரில் சப்த கன்னி கைகள் எழுந்தருளியிருக்கிறார்கள். 1966 – ம் ஆண்டில் திருப்பணி முடிந்து குடமுழுக்கு நடந்திருக்கிறது.

அம்பர் தலம் புகழ் அடைந்ததற்குக் காரணமே அங்கு சோமாசி மாறநாயனார் பிறந்து, நற்கதியடைந் ததுதான்.

இங்கு அந்தணர் குலத்தில் பிறந்தார் சோமாசி மாறர். அவரது மனைவியார் சுசீலாதேவியார். குலதர்மப் படி நித்திய அக்கினி வழிபாடு செய்து வந்தார் இவர்.

இவருக்கு சோம யாகம் செய்யவேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. சோமக் கொடியிலிருந்து சாறு பிழிந்து நடத்தப்படும் யாகம் இது. இந்த யாகத்தின் பயனாக யாககுண்டத்தில் அக்கினிதேவனுக்குப் பதிலாக இறைவனே நேரில் வந்து அவிர்பாகத்தைப் பெற்றுச் செல்ல வேண்டும் என்று விரும்பினார் அவர்.

இறைவனை அண்டித் தன் விருப்பத்தை வெளிப் படுத்த வழியென்ன? யார் துணையோடு சென்றால் இக் காரியம் எளிதில் நிறைவேறும்? சிந்தித்தார் சோமாசி மாறர். அவருக்கு உடனே நினைவுக்கு வந்தவர் சுந்தர மூர்த்திநாயனார் தான்.

"நம்பியாரூரர், திருவாரூர் தியாகராஜாவின் உயிர்த் தோழர் அல்லவா? அவரை அணுகினால், இறைவனிடம் நிச்சயம் அவர் சிபாரிசு செய்வார்.

சுந்தரரின் அன்பைப் பெற ஒரு வழி செய்தார் சோமா சிமாறர். சுந்தரருக்குத் தூதுளங்கீரை என்றால் உயிர். அவருக்குத் தினமும் சமையலில் அது சேர்க்கப்பட வேண்டும் என்று கேள்விப்பட்டிருக்கிறார். அக் கீரையோ அம்பலில் மண்டிக் கிடந்தது. தினமும் அக் கீரையைப் பறித்துக் கொண்டுபோய்ப் பரவை நாச்சியாரி டம் கொடுத்தார். அவரும் அக்கீரையைச் சமைத்துக் கணவருக்கு படைத்து மகிழ்ந்ததோடு, சோமாசி மாறரைப் பற்றியும் அவரது விண்ணப்பத்தைப் பற்றியும் சமய மறிந்து கணவரிடம் கூறினார். இந்தச் சிபாரிசுக்குமேல் வலுவுள்ள பரிந்துரை வேறு உண்டா?

சுந்தரர் தியாகேசனிடம் சோமாசிமாறரின் சோம யாகத்தைப் பற்றிக் கூறி, அவரே நேரில் வந்து அவிர் பாகத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும்

என்ற அவரது விருப்பத்தையும் வெளியிட்டார். வன்தொண்டரின் விண்ணப்பத்தை இறைவன் மறுப்பரோ? பக்தன் விருப்பப்படியே நேரே யாகத்திற்கு வந்து அவிஸைப் பெற்றுச் செல்வதாக வாக்களித்தார்.

சோமாசிமாறர், அம்பருக்கும்—கோயில் திருமாகாளத்திற்கும் இடையில் உள்ள ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து அங்கு சோம யாகத்தைத் தொடங்கினார்.

வைகாசி ஆயில்ய நட்சத்திரத் திருநாள் வந்தது. அன்று யாகம் முடிவு பெற்று, பூர்ணாகுதி ஆகி, அவி வழங்க வேண்டிய நேரம் நெருங்கிற்று.

சொன்ன வாக்கு மாறாத தியாகராஜப் பெருமான் நீசனைப் போல் வேடம் புனைந்து, மழுவேந்தும் கையில் இறந்த கன்றுக்குட்டியுடன், இரு கரங்களில் பறையை முழங்கிக் கொண்டு, நான்கு வேதங்களும் நான்கு நாய்களாகப் பின்தொடர வந்தார். பார்வதிதேவி தலையில் கள் குடம் ஏந்தி, இரு கரங்களிலும் கீழ்ச்சாதிச் சிறுவர்கள் போல் உருமாறிய கணபதியையும் முருகனையும் பற்றிக் கொண்டு பின்னால் வந்தாள்.

'இறைவன் வந்து அவிர்பாகம் பெற வேண்டிய நடுப்பகல் நேரத்தில் யாரோ நீசன் ஒருவன் குடும்பத்தோடு வந்து நிற்கிறானே' என்று வருந்தினார் சோமாசிமாறர். மறுகணம் 'ஒருவேளை தியாகேசன்தான் இக்கோலத்தில் வருகிறாரோ?' என்று ஐயமுற்றார். அப்போது யாகசாலையிலிருந்த அந்தணர்கள், 'யாகம் மாசு அடைந்தது' என்று ஓலமிட்டபடி அங்கிருந்து ஓடினர். அச்சமயம், கணபதி, அச்சம் தவிர்க்கும் வகையில், சோமாசிமாறரைப் பார்த்து, 'இவர்தான் தியாகேசன், வாக்களித்தபடி அவி வாங்க வந்திருக்கும் எந்தை இவரே' என்று சுட்டிக் காட்டினார். மனந்தெளிந்த சோமாசிமாறர், அவர்களை வரவேற்று அவிர்பாகத்தை அளித்தார். அந்தணர் உட்பட அனைவரும் இறைவனையும் இறைவியையும் தரிசித்துப் புண்ணியம் பெற்றனர்.

தஞ்சை மாவட்டத்தில் நடைபெறும் புகழ்பெற்ற கோயில் திருவிழாக்களில், கோயில் திருமாகாளத்தில் நடைபெறும் சோம யாகப் பெருவிழாவும் ஒன்றாகும். வைகாசி மாதம் ஆயில்யத் திருநட்சத்திரத்தன்று நடைபெறும் அத் திருவிழாவைக் கண்டு ஆனந்தமும் அருளும் பெற அக்கம்பக்கத்திலிருந்து ஆயிரக்கணக்கில் பக்த கோடிகள் வந்து கூடுகின்றனர்.

இந்த ஆண்டு சற்றும் எதிர்பாரரத வகையில் அந்த விழாவில் கலந்து கொள்ளும் நற்பேறு எங்களுக்குக் கிட்டியது. அந்தப் பகுதியில் ஆலய தரிசனம் செய்து கொண்டிருந்த நாங்கள் முதல் நாள் (18-5-83) அன்று திருமாகாளநாதரைத் தரிசிக்கச் சென்றபோது, மறுநாள் நடைபெறப் போகும் சோம யாக விழாவைப் பற்றிக் கேள்விப்பட்டு, அங்கு ஒரு நாள் தங்கிவிட்டு வந்தோம்.

அருகருகே அமைந்துள்ள இரு பெரும் கோயில்களுடன் தொடர்புடைய இத்திருவிழா ஒரு வாரம் கொண்டாடப் பெறுகிறது.

அம்பலுக்கும் கோயில் திருமாகாளத்திற்கும் இடையேயுள்ள ஸ்ரீ அச்சந்தீர்த்த விநயயகருக்கு அபிஷேகம் செய்துவிட்டு இந்த விழாவைத் தொடங்கி வைக்கிறார்கள்.

மறுநாள் மாலை ஐந்து மணிக்கு அங்குரார்ப்பணம், ரட்சாபந்தனம் நடைபெற்று, திருமாகாளநாத சுவாமி ஆலயத்திலிருந்து ஸ்ரீ சோமாசிமாத நாயனாரும் மனைவி சுசீலையம்பாளும் கிழக்கேயுள்ள அம்பர் ஆலயத்திற்கு எழுந்தருளி, அன்றிரவு அங்கு மண்டகப்படி நடந்து அங்கேயே தங்குகிறார்கள்.

மறுநாட் காலை, ஸ்ரீ சுந்தரர், பரவைநாச்சியாருடன் திருமாகாளம் ஆலயத்திலிருந்து புறப்பட்டு, கீழ வீதி தென்கோடியில் அமைந்துள்ள மாளிகைக்கு எழுந்தருளு

கிறார். பின்னர், அம்பர் திருத்தலத்திலிருந்து சோமாசிமாற நாயனார் துணைவியாருடன் பல்லக்கில் புறப்படுகிறார். ராஜகோபுர வாசலுக்கு வெளியே, தூதுவளங்கீரைக் கொடி ஒன்று தயாராய் நடப்பட்டிருக்கிறது. அர்ச்சகர் அக்கொடிக்குப் பல்வேறு அபிஷேகங்கள் செய்து, அர்ச்சனை புரிந்து, கற்பூர தீபாராதனை காட்டி, அதிலிருந்து கீரையைப் பறித்து, முன்பே பறித்து வைக்கப் பட்டிருக்கும் பூ, காயுடன் அதையும் சேர்த்து சோமாசி மாறரின் திருவடிகளில் வைக்கிறார். பல்லக்குப் புறப்படு கிறது.

கோயில் திருமாகாளம் வரும் வழியில் இருக்கும் அச்சந்தீர்த்த விநாயகரின் திருச்சந்நிதியின் முன்னர் யாக மேடை அமைத்திருக்கிறார்கள். மறுநாள் சோமாசிமாற நாயனார் அங்குதான் சோம யாகம் செய்யப் போகிறார்.

ஸ்ரீ அச்சந்தீர்த்த விநாயகர் சந்நிதியில் சோமாசிமாற நாயனாரும் அவரது துணைவியாரும் வழிபாடு நடத்தி, அனைத்துச் சடங்குகளும் விக்னம் இல்லாமல் நடை பெற வேண்டும் என்று அவரிடம் பிரார்த்தனை செய்து கொள்கின்றனர். பின்னர் அங்கிருந்து புறப்பட்டு, சுந்தர ரும் பரவையாரும் தங்கியுள்ள மாளிகைக்கு வருகிறார் கள். அம்பர் திருத்தலத்தில் பறித்த தூதுவளம்பூ காய் கீரை முதலியவற்றை நாயனார், பரவையாரிடம் ஒப்ப டைக்கிறார். அன்று மதியம் ஸ்ரீ தியாகராஜப் பெருமானுக் குத் தூதுவளங்கீரைக் கூட்டு நிவேதனம் ஆகிறது. மாலை சுந்தரருக்கும் பரவைநாச்சியாருக்கும் திருக்கல்யாண வைபவம் நடைபெறுகிறது. இரவு எட்டு மணிக்கு ஸ்ரீசுந்த ரர் ஸ்ரீ தியாகராஜப் பெருமான் சந்நிதிக்குச் சென்று வழிபட்டு, தமது மாளிகைக்குத் திரும்புகிறார். ஆனால் சோமாசிமாற நாயனாரின் யாகத்திற்கு நேரில் வந்து அவிர்பாகம் பெற வேண்டும் என்று அவர் தியா கேசரிடம் கேட்க மறந்துவிடுகிறார். இதனால் அவருக்

கும் பரவையாருக்கும் பிணக்கு ஏற்படுகிறது. எனவே, சுந்தரர் மறுபடியும் தியாகராஜப் பெருமானிடம் சென்று மறுநாள் யாகத்திற்கு எழுந்தருளும்படி அவரிடம் பிரார்த்திக்கிறார். தோழரின் வேண்டுகோளுக்குச் செவி சாய்த்து, அவ்வாறே வருவதாகப் பெருமானும் ஒப்புதல் தர, அந்நற்செய்தியைச் சோமாசிமாறரிடம் கூறி, யாகத்தைத் தொடங்கும்படி உத்தரவிடுகிறார் சுந்தரர்.

மறுநாள் ஆயில்ய நட்சத்திரத்துடன் கூடிய நன்னாள். ஏழு மணிக்கு மேல் சோமாசிமாற நாயனார் தமது துணைவியாருடன் யாகசாலைக்கு எழுந்தருளி ஸ்ரீ அச்சந்தீர்த்த விநாயகரின் ஆசியுடன் சோம யாகத்தைத் தொடங்குகிறார்.

சிவாசாரியார்கள் ஓம குண்டங்கள் வளர்த்து யாகம் செய்கிறார்கள். அக்காலத்தில் யாகத்தில் கலந்துகொண்ட அந்தணர்களின் வழித்தோன்றல்கள் சுற்றிலும் அமர்ந்திருக்கிறார்கள். ஆறு மைல்களுக்குள் இருக்கும் இடையாத்தங்குடி, கிடாமங்கலம், சேஷமூலை முதலிய கிராமங்களைச் சேர்ந்த அவர்கள் சேஷமூலை ஸ்ரீநிவாசனின் தலைமையில் அங்கு கூடியிருக்கிறார்கள். யாகத்திற்கான செலவையெல்லாம் இவர்கள் ஏற்றுக் கொள்கிறார்கள். மூன்று நாட்கள் இவர்கள் தங்குவதற்கான வசதிகளை தேவஸ்தானம் கவனித்துக்கொள்கிறது.

நூற்றுக் கணக்கானவர்கள் சுற்றிலும் அமர்ந்து யாகத்தைத் தரிசித்துவிட்டு பூர்ணாகுதிக்காக ஆவலுடன் காத்திருக்கிறார்கள். அவிர்பாகம் பெறுவதற்காகத் தியாகேசன் வரவேண்டும். எல்லோரும், 'கோயிலிலிருந்து சுவாமி புறப்பட்டாச்சா?' என்ற கேள்வியை ஒருவருக்கொருவர் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதோ, மேளச்சத்தம் கேட்கிறது. ஒரே பரபரப்பு!

பகல் பன்னிரண்டு மணிக்கு மேல் திருமாகாளநாதர் திருக்கோயிலிலிருந்து ஸ்ரீ தியாகராஜரும் பஞ்ச

மூர்த்திகளும் புறப்பாடாகிறார்கள். அங்கிருந்து யாக சாலை செல்லும் வரையிலும் ஒரே கோலாகலம்தான்.

ஸ்ரீ தியாகராஜர் நீச வேடம் புனைந்து வருகிறார். பறையடித்து வருகிறார். நான்கு வேதங்களும் நான்கு நாய்களாக உடன் வருகின்றன. அம்பிகையோ, நீசப் பெண்மணியாக தலையில் மதுக்குடம் தாங்கி வருகிறாள்; இவர்கள் பவளக்கால் மஞ்சத்தில் பவனி வரும் காட்சி என்றென்றும் நினைவில் நிற்கும் காட்சியாகும்.

தியாகராஜ சுவாமியும் அம்பாளும் நீச வேட அலங்காரத்துடன் வருவதுடன், ஆளுயரப் பதுமைகளும் உடன் வருகின்றன. காட்சி கொடுத்த நாயனார் தனி விமானத்தில் வருகிறார். கணபதியும், சுப்ரமணியரும் நந்தியம் பெருமானும் உடன் வருகிறார்கள்.

மங்கள வாத்தியங்களுடன் இவர்கள் யாகசாலையை நோக்கி வரும்போது வழி நெடுகிலும், ஒவ்வோர் இல்லத்தினரும் மகிழ்ச்சி பொங்க அவர்களை வரவேற்கக் காத்திருக்கிறார்கள். முன்வாசலில் . தண்ணீர் தெளித்துக் கோலமிட்டு மங்களகரமாய் வைத்திருக்கிறார்கள். சிறுவர் சிறுமியர் அனைவரும் தங்கள் இல்லத்தில் நடைபெறும் வைபவம் போல் குதூகலித்துக் கும்மாளமிட்டபடி கூடவே ஓடி வருகிறார்கள்.

அங்கே, அச்சந்தீர்த்த விநாயகர் சந்நிதியிலும், யாகசாலையைச் சுற்றிலும் குழுமியுள்ள பக்தர் கூட்டம் பெரும் சஸ்பென்ஸோடு காத்திருக்கிறது. புதிதாக ஒன்றும் நிகழ்ந்து விடப் போவதில்லை. ஆண்டுதோறும் நடைபெறும் விழாதான். ஆண்டாண்டு காலமாக பார்த்துப் பழகிவிட்ட கோலம்தான். ஆயினும் ஒவ்வொரு முறை பார்க்கும் போதும் புளகிதம் மேலிடச் செய்யும் காட்சியன்றோ இது!

அம்பர் திருமாகாளத்திலிருந்து புறப்பட்ட தெய்வங்கள், யாகசாலை வந்து சேருகின்றனர். பரபரப்பு, பரவசமாகப் பரிணமிக்கும் சூழ்நிலையில் ஆரவார எக்களிப்பு, பக்திக் கொந்தளிப்பாகப் பொங்கிப் பெருகுகிறது.

சோமாசிமாற நாயனாரும் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளும் தங்கள் துணைவியாருடன் யாகமேடையில் வடக்குப் பார்த்து அமர்ந்திருக்க, தியாகராஜப் பெருமானும் காட்சி கொடுத்த நாயனாரும் அம்பாளும் கணபதியும் சுப்ரமணியரும் வந்து, கிழக்குப்புறத்தில் யாகசாலையை நோக்கியவாறு எழுந்தருளுகிறார்கள். பூர்ணாகுதி நடைபெற்று சுவாமி அவிர்பாகம் பெறுவதற்கு அடையாளமாக அனைத்துத் தெய்வங்களுக்கும் கற்பூராரத்தி ஆகிறது.

சோமாசிமாற நாயனாரின் பக்தியைக் கண்டு மனமிரங்கிய பெருமான், அவர் வேண்டுகோளை நிறைவேற்றி வைப்பதற்காக, அவரது யாகசாலைக்கு எழுந்தருளி, அவிர்பாகம் பெற்று, அவரது உள்ளத்தைக் குளிரச் செய்து தன் கருணையையும் எளிமையையும் உலகறியச் செய்த திருவிழா இது. தூய பக்திக்கு ஆண்டவன் அடிமையாகும் நிகழ்ச்சி மட்டுமல்ல இது. உண்மையான பக்தி—உணர்வையும் உள்ளத்தையும் ஆண்டவனிடத்தில் பணயம் வைக்கும் பக்தி—சாதி சமய ஆசார அனுட்டானங்கள் அனைத்தையும் கடந்து ஒளிர்விடும் உன்னத நிலையாகும் என்பதை விளக்கும் பெருவிழா. உயர்ந்தவர்-தாழ்ந்தவர் என்ற சிறுமைகளில் சிக்கி உழலும் அஞ்ஞானிகளின் மனக்கண்களைத் திறக்கும் ஞானப் பெருவிழா. வேற்றுகைகளைப் பெரிதுபடுத்தி, பிற ஜீவன்களிடமிருந்து தங்களை தனிப்படுத்தி, உயர்ந்தோர் என்ற இறுமாப்பு இருளில் உழல்வோர், கண்ணில் காணும் வேற்றுமைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டு,

ஒருமையின் உருவாகத் திகழும் பரம்பொருளின் பெருங் கருணைக்குப் பாத்திரமாகவே முடியாது. இந்த உண்மை யைப் பறைசாற்றுகிறது ஆண்டுதோறும் திருமாகாளத்தில் கொண்டாடப்பட்டு வரும் சோமயாகத் திருவிழா.

வைகாசி ஆயில்யத் திருநட்சத்திரத்தன்று திருவாரூர் ஆலயத்தில் உச்சிகால நைவேத்திய பூஜை கிடையாது. அதற்குக் காரணம் ஸ்ரீ தியாகராஜப் பெருமான் அச் சமயம் அங்கு இருப்பதில்லை. அன்று மதியம் அம்பர் திருமாகாளத்திற்கு எழுந்தருளி, சோமயாகத்தில் அவிர் பாகம் பெறுவதற்காக வந்து விடுகிறார் அவர்.

அந்தக் காலத்தில் நம் முதாதையர் ஆலயங்களை எழுப்பி, புராணக் கதைகள் மூலம் அரிய பெரிய தத்துவங் களை மக்கள் மனத்தில் பதிய வைப்பதற்காகத் திரு விழாக்களையும் வகுத்துத் தந்திருக்கிறார்கள். உழைத்து உழன்று சமுதாயத்திற்கு உணவு அளித்த விவசாய மக்களின் உல்லாசக் கேளிக்கையாகவும், பல்வேறு கலைஞர்களின் திறமைகளுக்கு ஒரு வடிகாலாகவும் தோன்றினாலும், நம் ஆலய திருவிழாக்கள் சமுதாயத் தின் கலாசார, ஆன்மிக, சமதர்ம மேன்மைகளுக்கு ஒரு சாதனமாகவும் அமைந்திருக்கின்றன.

ஆனால், வளம் கொழித்த அந்த நாட்களில்—சமு தாயத்தில் அமைதியும், மக்களின் வாழ்வில் ஆனந்தமும் நிலவிய சுபிட்ச நாட்களில்—கோயில் உற்சவங்கள் பெரிய அளவில் நடைபெற்றன. ஆலயங்களைப் பரா மரிப்பதே பெரிய பிரச்னையாகிவிட்ட இந்த நாட்களில், நித்தியபூஜை, நைவேத்தியங்களுக்காகவே பற்றாக்குறை ஏற்பட்டு வரும் இந்த நாட்களில் திருவிழாக்களை முன் மாதிரி கோலாகலமாகக் கொண்டாட முடியாதுதான். ஆனால், அவற்றை விடாமல் நடத்தி வரவேண்டும் என்ற உணர்வு ஊர் மக்களிடம் தோன்ற வேண்டும். திருவிழாக்களின் 'ஜீவன்' குலையாமல் சிறிய அளவிலா

வது அவை நடத்தப்பட வேண்டும். அதே போல், நின்று போய்விட்டத் தேரோட்டமும் மீண்டும் தொடங்கப்பட வேண்டும். சாதி, சமய, உயர்ந்தோர்-தாழ்ந்தோர் என்ற வேற்றுமைகளை அகற்றி, ஊர் மக்கள் ஒற்றுமையுடன் வாழ வேண்டிய அவசியத்தை ஆண்டுக்கொரு முறை வலியுறுத்திய தேரோட்டம், ஆண்டவனுக்காக ஏற்பட்ட ஆனந்தச் சவாரியல்ல; நம் வகுப்பு ஒற்றுமைக்காக வகுக்கப்பட்ட வகுப்பறைப் பாடமாகும்.

ஆலய கோபுரம், பரம்பொருளை நினைவுபடுத்த வேண்டும். உற்சவங்கள், உள்ளம் பண்பட வேண்டிய அவசியத்தையும், தேரடியில் நிற்கும் தேர் ஒற்றுமையின் அவசியத்தையும் நமக்கு நினைவுபடுத்திக் கொண்டிருக்க வேண்டும்.

ஆலயமும், அதைச் சூழ்ந்த வாழ்க்கையும் மக்களை நல்லவர்களாக்கும் உன்னத நோக்கத்துடனேதான் நம் முன்னோர்களால் உருவாக்கப்பட்டுள்ளன. சமுதாயம் என்ற ஆலமரத்தின் ஆணிவேர் நல்ல குடிமக்களே.

எம்பெருமான் உமாதேவியாரோடு இடப சமேதராய்க் காட்சியளித்து ஆட்கொண்ட பின்னர், ஸ்ரீ தியாகராஜப் பெருமான் அம்பாளோடு வசந்த மண்டபத்திற்கு எழுந்தருளுகிறார். ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனாரும் பரவையாரும் தங்கள் திருமாளிகைக்குச் சென்று விடுகிறார்கள். இரவு பத்து மணிக்கு மேல், யாகசாலையில் எழுந்தருளியிருக்கும் காட்சி கொடுத்த நாயனாருக்கு அலங்கார தீபாராதனை ஆனவுடன் விமானங்களில் எழுந்தருளச் செய்து, சோமாசிமாற நாயனாருடனும் ஸ்ரீ சுந்தரருடனும் வீதிவலம் வந்து கோயிலுக்கு எழுந்தருளும் காட்சியைக் கண்டு களிக்கிறோம்.

மறுநாள் மக நட்சத்திரத்தன்று, அஞ்ஞானத்தால் யாகசாலையிலிருந்து ஓடிய அந்தணர்களுக்கு ஆலயத்

தில் பெருமான் காட்சியளித்து ஞான அருள் வழங்கு கிறார். அவர்களது வம்சத்தினர் இன்றும் அக்காட்சி பெற்று மகிழ்கின்றனர். அவர்களுடன் உதங்க, மதங்க ரிஷிகளும் மகுடவர்த்தன மன்னர் மூவரும் அருள் காட்சி பெற்று உய்கின்றனர். இவர்களுடைய பிம்பங்களும் ஆண்டுதோறும் புதுப்பிக்கப்பட்டு கோயிலில் காட்சிக்கு வைக்கப்படுகின்றன.

மறுநாள், தல புராண முறைப்படி பத்ரகாளியம்மன் மாகாளநாதரை பூஜை செய்யும் உற்சவம் நடைபெறு கிறது.

இந்த உற்சவத்திற்குக் கூடும் அடியார்களுக்கு அன்னதானம் வழங்குவதற்கென்றே நாகப்பட்டினம் க. முருகய்யாபிள்ளை, பெரிய அளவில் சமையல் செய்வ தற்கான அடுக்களையும், உண்ணும் கூடமும் கூடிய சத்திரம் ஒன்று கட்டி வைத்திருக்கிறார். தற்போது அவரு டைய பேரன் சௌந்தரராஜன் அதைத் திறம்பட நிர்வ கித்து வருகிறார்.

கூத்தனூர் குட்டக்கரை ராமசுவாமி என்பவர் 1870-ம் ஆண்டு பிறந்தவர். 1955-ல் சந்நியாச ஆஸ்ரமம் பெற்று ஸ்ரீ இராமானந்த யதிகளாகி, 1959-ல் ஸித்தியானார். அவர் 1901-ம் ஆண்டு முதல் சுமார் 50 ஆண்டுகளுக்கு அம்பர்மாகாள சோம யாகத் திருவிழாவில், ஆண்டு தோறும் ஆயிரக்கணக்கானப் பேருக்கு அன்னதானம் அளித்துப் புண்ணியம் பெற்றவர். கூத்தனூர் சிவன் கோயிலுக்கு அருகில் அவருடைய அதிஷ்டானம் இருக் கிறது.

முதல் பாகம் நிறைவு பெறுகிறது.



ஸ்ரீ தட்சிணாமூர்த்தி
(கோவிலூமாங்குடி)